# சிவசங்கரி நாவல்களில் குடும்ப உறவுகள்

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**பூ. மஞ்சுளவல்லி**

(தலைமையாசிரியை, சிதம்பரம் செட்டியார் பெண்கள்
மேல்நிலைப்பள்ளி, கோட்டையூர்)

நெறியாளர்

**முனைவர் இரா. பாலசுப்பிரமணியன்**

தமிழ்த்துறைத் தலைவர் (ஓய்வு)
அழகப்பா பல்கலைக்கழகம்






தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி - 630 003
அக்டோபர் 2001

முனைவர் இரா. பாலசுப்பிரமணியன்,
எம்.ஏ.,எம்.பில்.,பி.எச்.டி.,டி.ஜி.டி.,
துறைத்தலைவர் (பொ.)
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி – 630 003.

நாள்: 29.10.2001.

# நெறியாளர் சான்றிதழ்

*"சிவசங்கரி நாவல்களில் குடும்ப உறவுகள்"* என்னும் பொருள் பற்றி முனைவர் (பி.எச்டி) பட்டத்திற்காகத் திருமதி பூ. மஞ்சுளவல்லி அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு, அழகப்பா பல்கலைக்கழத்தில் தமிழ்த் துறையில் என் மேற்பார்வையின் கீழ் ஆய்வு செய்த காலத்தில், அவரின் சொந்த முயற்சியால் செய்யப் பெற்றது என்றும் இவ்வாய்வேடு ஆய்வாளருக்காக இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்காகவும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இரா. பாலசுப்

முனைவர் இரா. பாலசுப்பிரமணியன்
(நெறியாளர்)

தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக் கழகம்
காரைக்குடி 630 003

பூ. மஞ்சுளவல்லி , எம்.ஏ., எம்.எட்., எம்.பில்.,
ஆய்வாளர்
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி – 630 003.

நாள் : 29.10.2001.

# ஆய்வாளர் உறுதிமொழி

*"சிவசங்கரி நாவல்களில் குடும்ப உறவுகள்"* என்னும் பொருளில் முனைவர் (பி.எச்டி) பட்டத்திற்காகச் செய்யப்பெற்ற இவ்வாய்வு என் முயற்சியில் உருவானதே ஆகும். இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என உறுதி அளிக்கிறேன்.

பூ. மஞ்சுளவல்லி

(பூ. மஞ்சுளவல்லி)
ஆய்வாளர்

இரா. பாலசுப்பிரமணியன்

முனைவர் இரா. பாலசுப்பிரமணியன்,
எம்.ஏ.,எம்.பில்.,பி.எச்.டி.,டி.ஜி.டி.,
துறைத்தலைவர்
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி – 630 003.

# நன்றியுரை

வள்ளல் அழகப்ப செட்டியாரின் கொடையால் உருவான அழகப்பா பல்கலைக்கழகம் எனது ஆய்வினை மேற்கொள்ள வழங்கிய நல் வாய்ப்பிற்கு எனது முதற்கண் நன்றியைக் காணிக்கை ஆக்குகிறேன்.

ஆய்வு நெறியாளராக அமைந்து, ஆய்வுத் தொடக்கத்திலிருந்து முடிவு வரை ஒவ்வொரு நிலைகளிலும் ஆய்வு முறைகளை வழிகாட்டி, ஆலோசனை நல்கி நெறிப்படுத்தி, இவ்வாய்வு சிறப்புற அமைய எனக்கு ஆக்கமும், ஊக்கமும், உறுதுணையும் புரிந்த நெறியாளர் முனைவர் இரா. பாலசுப்பிரமணியன், தமிழ்த்துறை தலைவர்(பொ.) அவர்களுக்கு எனது உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நாவலாசிரியை திருமதி. சிவசங்கரியைத் தொடர்பு கொண்ட போதெல்லாம், உடனுக்குடன் தேவையான தகவல்களைக் கொடுத்து, ஊக்கமும் வாழ்த்தும் தெரிவித்தமைக்கு, எனது இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வை மேற்கொள்ள எனக்கு ஊக்கமளித்த ஓய்வு பெற்ற தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் தே. சொக்கலிங்கம் அவர்களுக்கும், மற்ற தமிழ்த்துறை ஆசிரியர்கள் முனைவர் மு. பாண்டி, முனைவர் சே.செந்தமிழ்ப் பாவை, முனைவர் சு. இராசாராம், ஆகியோர்களுக்கும் நன்றி.

ஆய்விக்குத் தேவையான நூல்களையும், ஊக்கமும் அளித்த பல்கலைக்கழக நூலகர் பேராசிரியர் எஸ். செயராமன் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றி.

இவ்வாய்விற்கு எனக்கு ஊக்கமும், உதவியும் புரிந்த திருமதி. கவிதா பாலசுப்ரமணியன் அவர்களுக்கு எனது நன்றி.

சிறந்த முறையில் ஆய்வறிக்கையை கணினி மூலமாக உருவாக்கிக் கொடுத்த திருமதி. அழ. மல்லிகா அவர்களுக்கு எனது மனம் நிறைந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பூ மஞ்சுளவல்லி

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| இ.ப.த.ம. | – | இந்தியப் பல்கலைக்கழக தமிழாசிரியர் மன்றம் |
| உ.ஆ | – | உரை ஆசிரியர் |
| எ.டு | – | எடுத்துக்காட்டு |
| ஏ.ப | – | ஏழாம் பதிப்பு |
| ஐ.ப | – | ஐந்தாம் பதிப்பு |
| சி.தொ. | – | சிறுகதைத் தொகுப்பு |
| திரு.வி.க | – | திரு.வி. கல்யாணசுந்தரம் |
| தொ.ஆ | – | தொகுப்பு ஆசிரியர் |
| ப | – | பக்கம் |
| ப.ஆ | – | பதிப்பு ஆசிரியர் |
| பக் | – | பக்கங்கள் |
| மு.வ | – | மு. வரதராசன் |
| மூ.ப | – | மூன்றாம் பதிப்பு |
| மேலது | – | மேலே உள்ள நூல் |
| மொ.பெ.ஆ | – | மொழி பெயர்ப்பு ஆசிரியர் |

# உள்ளடக்கம்

# அட்டவணைப் பட்டியல்

# 1. முன்னுரை

இலக்கியங்கள் காலச்சூழலுக்கேற்ப மாற்றம் பெற்று வளர்கின்றன. இந்நிலை ஒரு மொழிக்குத்தான் எனக் கூறுதல் இயலாது. உலகிலுள்ள அனைத்து மொழிகளிலும் முற்சுட்டிய நிலை இடம் பெற்றிருப்பது இயல்பாகும்.

பொதுவாக இலக்கியங்கள் கற்றறிந்த குழுவிற்குத்தான் என்ற சூழல் மாற்றம் பெற்றுச் சாதாரண மக்களுக்கும் சென்றடைதல் வேண்டும் என்ற கட்டாயம் உருவாகியது. இந்நிலைக்கு மேற்கத்திய நாடுகளில் நிகழ்ந்த புரட்சிகளும் முதன்மைக் காரணிகளாகும். சாதாரண மக்களுக்கும் இலக்கியம் சென்றடையும் வகையில் புத்திலக்கியங்கள் கால்கொண்டன. புத்திலக்கியம் உருவாக்கம் பெற்ற காலத்தில் எதிர்ப்புகள் பல முனைப்புக்களிலிருந்து தோன்றின. அவ்வெதிர்ப்புக்களையும் மீறிப் புத்திலக்கியங்கள் பரவலாக வளரத் தொடங்கின.

ஆங்கிலேயரின் வரவால் இந்தியாவில் மேலைநாட்டுக் கல்வி நுழைந்தது. சுதந்திரம் இல்லாத இந்தியாவில் மேலைநாட்டு இலக்கியப் போக்கு, அஃதாவது புத்திலக்கிய போக்கு இந்திய மொழிகளில் வேகமாகப் பரவியது. புத்திலக்கிய வகையில் புதுக்கவிதை, நாவல் போன்றவை குறிக்கத் தகுந்தன. புத்திலக்கியங்களையொட்டிய வரவேற்பும் எதிர்ப்பும் திறனாய்வுத் துறை வளர்வதற்குக் களம் அமைத்தன.

மரபு இலக்கியங்களிலிருந்த இறுக்கம் நெகிழ்ச்சி பெற்ற நிலையில் புத்திலக்கியங்கள் தோன்றுவதற்கான தேவை ஏற்பட்டது எனலாம். புத்திலக்கிய வகைகளில் நாவல் இலக்கியத்திற்குச் சிறப்பான இடமுண்டு. எடுத்துரைக்கப் பெறும் கதைவடிவ இலக்கியத்தில் (Narrative Prose) மாயூரம் வேதநாயகம் பிள்ளையின் பிரதாபமுதலியார் சரித்திரம் தொடங்கி இற்றை நாள் படைப்பாளர்கள் வரை சோதனைகளையும் சாதனைகளையும் கடந்து பரிணாமம் பெற்ற நிலையை நாவல் இலக்கிய வரலாற்றை நோக்கும் போது உணரலாம். சமூக நிகழ்வுகளின் சிக்கல்களையும் தீர்வுகளையும் நாவலாசிரியர்கள் கூர்ந்து நோக்கி நாவல் இலக்கியங்களில் பதிவு செய்கின்றனர். அவ்வகையில் அப்பதிவுகள் சமூக ஆவணங்களுக்குரிய இயல்பைப் பெறுவதாக மதிப்பிடலாம்.

நாவல் இலக்கிய வரலாற்றில் ஆண் எழுத்தாளர்களைப் போல் பெண் எழுத்தாளர்களும் சாதனை படைத்து முத்திரை பெற்றுள்ளனர். அத்தகு பெண் எழுத்தாளர்களில் சிவசங்கரிக்குச் சிறப்பான இடமுண்டு. புத்திலக்கிய ஆராய்ச்சி வளர்ந்து வரும் சூழலில் குறிப்பிட்ட படைப்பாளரை மையப்படுத்தி ஆராயும்போக்குப் பரவலாகக் காணப்பெறுகிறது. அப்போக்கில் நாவல் படைப்பாளரான சிவசங்கரியின் படைப்புகள் ஆய்வு செய்யப்பெறும் வகையில் ஆய்விற்கான களம் ஆய்வாளரால் அமைக்கப் பெற்றுள்ளது.

## ஆய்வுத் தலைப்பு

இக்கால இலக்கிய வகையில் நாவல் என்கிற ஆய்வுக்களத்தில் வரையறை கருதி குறிப்பிட்ட நாவலாசிரியரின் நாவல் படைப்புக்களை ஆராயும் முறை மேற்கொள்ளப் பெற்றது. அவ்வகையில் சிவசங்கரி நாவல்கள் கருத்தில் கொள்ளப்பெற்றன. சிவசங்கரி பல நாவல்களை உருவாக்கியிருந்தாலும் குடும்பப் பின்புலம் சார்ந்த நாவல்களை மிகுதியாக உருவாக்கியமை மதிப்பிடப் பெற்றது. இம்மதிப்பீட்டின் வழியும் ஆய்வின் வரையறை கருதியும் “சிவசங்கரியின் நாவல்களில் குடும்ப உறவுகள்” என்ற நிலையில் ஆய்வுத் தலைப்பு அமைத்துக் கொள்ளப் பெற்றது.

## ஆய்வு முன்னோடிகள்

நாவல் இலக்கியவகை ஆராய்ச்சியில் பெண் எழுத்தாளர்களை மையமிட்டு ஆராயும்போக்கு ஆய்வாளர்களின் இலக்கிற்கு உள்ளாகியுள்ளது. அவ்வகையில் லட்சுமி, சூடாமணி, இராஜம் கிருஷ்ணன் ஆகியோர்களின் படைப்புக்கள் ஆய்விற்குட்படுத்தப் பெற்றன. இவ்வகை ஆய்வுப்பாதையில் ஹரி. விஜயலட்சுமி அவர்கள் “ராஜம் கிருஷ்ணனின் புதினத்தில் பெண் மாந்தர்” என்ற தலைப்பின் வழி சென்னைப் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வினை நிகழ்த்தியுள்ளார்.

கே. ஜெயலட்சுமி என்பவர் “சிவசங்கரி நாவல்கள் ஓர் ஆய்வு” என்ற தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழகத்தின் வழி முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொண்டுள்ளார்.

முனைவர் பட்ட ஆய்விற்கு மட்டுமின்றி ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்விற்கும் சிவசங்கரியின் நாவல்கள் உட்படுத்தப் பெற்றுள்ளன. "சிவசங்கரியின் நாவல்கள்" என்ற தலைப்பில் சி.ரா. சந்திரன் என்பவர் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் வழி ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வு நிகழ்த்தியுள்ளார். இஃது நாவல்களில் பொதுநிலை சார்ந்த ஆய்வாகும்.

சிவசங்கரி நாவல்களில் குறிப்பிட்ட பொருளை மையமிட்டும் ஆய்வுகள் நிகழ்த்தப் பெற்றுள்ளன. "சிவசங்கரி நாவல்களில் இளைஞர் நிலை" என்ற தலைப்பில் ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக மதுரை காமராசர் பல்கலைக்கழக வாயிலாக ஆய்வு மேற்கொண்டமையைக் குறிப்பிடலாம். சென்னைப் பல்கலைக்கழகத்தின் வழி "சிவசங்கரியின் நாவல்களில் பெண் பாத்திரங்கள்" என்ற தலைப்பில் சுவர்ணலதா என்பவர் ஆய்வியல் நிறைஞர் ஆய்வு மேற்கொண்டுள்ளார். காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்தின் வழி "சிவசங்கரியின் நாவல்களில் பெண்கள்" என்ற தலைப்பில் எஸ். சௌரிராஜன் என்பவர் ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வு மேற்கொண்டுள்ளார்.

சிவசங்கரி நாவல்களில் குறிப்பிட்ட பொருளை மையப்படுத்தி ஆய்வு செய்வது மாதிரி ஒப்பீட்டு ஆய்வும் மேற்கொண்டுள்ள நிலை கருதத்தக்கதாகும். இரா. சோபனா அவர்கள் "சிவசங்கரி – லெட்சுமி நாவல்கள் ஓர் ஒப்பாய்வு" என்ற தலைப்பில் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் வழி செய்த ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வை இவ்வகை ஆய்விற்கு எடுத்துக்காட்டாகக் குறிப்பிடலாம்.

சிவசங்கரியின் நாவல்களில் முனைவர் பட்ட ஆய்வில் பொது நிலையில் ஆய்வு அமைந்திருக்கிறது. ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வில் குறிப்பிட்ட பொருளை மையப்படுத்துதல் மற்றும் ஒப்பீடு நிலை ஆய்வுகள் முன்னோடி ஆய்வுகளாகப் பரிணமித்துள்ளன. இச்சூழலைக் கருத்தில் கொண்டு குறிப்பிட்ட பொருளை மையமிட்டு ஆய்வுத்தலைப்பை உருவாக்கும் நிலையில் 'சிவசங்கரியின் நாவல்களில் குடும்ப உறவுகள்' என்ற தலைப்பு அமைத்துக் கொள்ளப்பெற்றது.

## ஆய்வு நோக்கம் (Objectives of the Study)

இவ்வாய்வு பின்வரும் நோக்கங்களை முதன்மையாகக் கொண்டு அமைகிறது.

- படைப்பாளரின் வாழ்வியல் வரலாற்றுப் பின்னணியைத் தெளிவாக உணர்ந்த நிலையில் நாவல் இலக்கியத்தை ஆராய்தல்.
- குடும்பமும் உறவும் குறித்த வரைவிலக்கணங்களை அறிதல். அறிஞர்கள் மற்றும் கோட்பாட்டுச் சிந்தனைகளின் துணையுடன் மதிப்பிட்டு; தமிழ்ப் பண்பாட்டுச் சூழலில் குடும்பம் மற்றும் உறவுகளின் நிலையை மதிப்பிட்டு விளக்குதல்.
- முற்குறிப்பிட்ட வரைவிலக்கணங்களின் பின்னணியுடன் சிவசங்கரி நாவல்களில் குடும்பம் பற்றிய கருத்துக்களை இனம் கண்டு, தெளிவாக்கி மதிப்பிடுதல்.
- சிவசங்கரியின் குடும்ப நாவல்களில் தனிக்குடும்பம் மற்றும் கூட்டுக் குடும்பவகை நாவல்களை இனங்கண்டு மாறிவரும் சமூகச்சூழலில் உறவுகளில் ஏற்படும் மோதல்களையும் அவைகளுக்கான தீர்வுகளையும் சிவசங்கரி பரிசீலித்து வெளிப்படுத்திய நிலையை ஆய்வின் வழி உணர்தல்.
- பெண்ணியச் சிந்தனைகள், குடும்பம் சார்ந்த நாவல் வகைகளில் இடம் பெற்ற நிலை கருத்தில் கொள்ளப் பெற்று ஆராயப் பெறுதல்.

முற்குறிப்பிடப் பெற்ற ஆய்வு நோக்கங்களைக் கருத்தில் கொண்டு ஆய்விற்கு உரிய கருதுகோளும் அமைகிறது.

## ஆய்வு மூலங்கள் (Research Sources)

சிவசங்கரியின் நாவல்களில் குடும்பவகை சார்ந்த நாவல்கள் ஆய்விற்குரிய மூல ஆதாரங்களாகும். 1969-லிருந்து 1994 வரை வெளிவந்துள்ள நாவல்களே இங்கு ஆய்விற்குக் கருத்தில் கொள்ளப்பெற்றன. சிவசங்கரியின் சமூக நாவல்கள், சிறுகதைகள், கட்டுரைகள், பயண இலக்கிய நூல்கள்

போன்றவைகளைச் சார்ந்து கிடைக்கும் தரவுகள் துணைத்தரவுகளாக (Secondary Sources) அமைகின்றன. சிவசங்கரியின் படைப்புகள் குறித்த ஆய்வு நூல்கள், கட்டுரைகள், பேட்டிகள் மற்றும் விமர்சனச் சிந்தனைகள் போன்றவைகளிலிருந்து கிடைக்கும் தரவுகளும் துணைச் சான்றுகளாகும். பொது நிலையில் ஆய்வுகள், திறனாய்வுகள், சமூகவியல் பெண்ணியம் சார்ந்த நூல்களிலிருந்தும் துணைமைத் தரவுகள் சேகரிக்கப்பெற்றன. கள ஆய்வு (Field Study) முறையில் ஒன்றான வினாவழித் தொடர்பு முறை (Questionnaire Method) கையாளப் பெற்று, சிவசங்கரியுடன் பேட்டி அமைத்துக் கொள்ளப் பெற்றது.

## ஆய்வு அணுகுமுறை

சிவசங்கரியின் நாவல்களை ஆய்விற்குட்படுத்தப்பெறும் நிலையில் படைப்பிலக்கிய ஆசிரியரின் வரலாற்றுப் பின்னணி கருத்தில் கொள்ளப் பெற்ற நிலையில் வரலாற்று அணுகுமுறை (Historical Research Method) பின்பற்றப் பெற்றுள்ளது. குடும்பம் மற்றும் உறவுகள் குறித்த மதிப்பீட்டிற்குச் சிவசங்கரியின் குடும்பம் சார்ந்த நாவல்களில் உள்ளடக்கப் பகுப்பாய்வும் (Content Analysis), பொருத்தமான இடங்களில் சமூகவியல் அணுகுமுறையில் பெண்ணிய அணுகுமுறையும் கருத்தில் கொள்ளப் பெற்றன.

## ஆய்வுப் பகுப்பு

சிவசங்கரியின் நாவல்களில் குடும்ப உறவுகள் என்னும் இவ்வாய்வு கீழ்க்கண்ட எட்டு இயல்களில் பகுக்கப் பெற்றுள்ளது.

1. முன்னுரை
2. படைப்பாளரும் படைப்பாக்கமும்
3. குடும்பமும் உறவும்
4. சிவசங்கரி நாவல்களில் குடும்பம்
5. தனிக்குடும்ப உறவு நிலைகள்
6. கூட்டுக்குடும்ப உறவு நிலைகள்

7. பெண்ணியச் சிந்தனைகள்

8. முடிவுரை

பின்னிணைப்புகள்

1. துணை நூற்பட்டியல்

2. படைப்பாக்க விவரங்கள்

- சிறுகதைகள்
- நாவல்கள்
- பயணக்கட்டுரைகள்
- கட்டுரைத் தொகுப்புகள்
- வாழ்க்கை வரலாறுகள்

3. அக்னி (ஆங்கிலப் பகுதி)

4. சிவசங்கரி அவர்கள் ஆய்வாளருக்குத் தெரிவித்த வினாவழித் தொடர்பு (Questionnaire).

ஆய்வுத் தலைப்பு, ஆய்வின் முன்னோடிகள், ஆய்வின் நோக்கம், ஆய்வின் அணுகுமுறை, ஆய்வுப்பகுப்புப் போன்ற உட்தலைப்புகளைக் கொண்டமையும். முன்னுரைப் பகுதியில் ஆய்வின் அறிமுகத்தைச் சுருக்கமாக விளக்கும் வகையில் அமைந்துள்ளது.

'படைப்பாளரும் படைப்பாக்கமும்' என்ற தலைப்பில் இரண்டாவது இயல் அமைந்துள்ளது. நாவல்கள் சமகாலச் சான்றுகள், வாழ்க்கையும் எழுத்தும், பிறப்பும் கல்வியும், இல்லற வாழ்க்கை, எழுத்தின் கதை, புரிதலும் பகிர்தலும், பணியும் கொள்கைகளும், இவரைப் பற்றி இவர்கள், விமர்சனம் பற்றி, பரிசும் பாராட்டும், அக்னி அறக்கட்டளை, சாதனைக்குப் பல பதவிகள் போன்ற உட்தலைப்புகளின் வழி இவ்வியல் விளக்கம் பெறுகிறது. சமகால இலக்கியங்களில் சமுதாயச் செய்திகள், பதிவு பெறும் நிலை குறிப்பிடப் பெறுகிறது. சமூகச்சூழலின் பதிவுடன் படைப்பாசிரியர் அனுபவப் பதிவுகள் எழுத்தில் இடம் பெறும் நிலை காட்டப் பெற்று, சிவசங்கரியின் வாழ்க்கை வரலாறு மிகச் செறிவாகக் கூறப்பெற்றுள்ளது.

மூன்றாவது இயல் "குடும்பமும் உறவும்" என்ற தலைப்பில் அமைந்துள்ளது. சமூகமும், குடும்பமும், குடும்ப நிறுவனத்தின் தொன்மை, குடும்பம் அழியா அமைப்பு, குடும்ப உருவாக்கம், குடும்ப உருவாக்கத்தின் வளர்ச்சி நிலைகள்(4), குடும்பத்தின் வகைகள் (2), தந்தைவழிக் குடும்பமும் தாய்வழிக்குடும்பமும், பிற குடும்ப வகைகள், குடும்பத்தின் பணிகள், குடும்ப உறவுகள், விலக்கும் உறவின் பெருக்கமும், தமிழ்ச் சமூகத்தில் குடும்பமும் உறவுகளும், இயற்கை அறம் இல்லறம், தமிழ்க் குடும்ப வகைகள், தமிழ்வழிச் சமூகம்–தந்தைவழிச் சமூகம், ஒருவனுக்கு ஒருத்தி, குடும்ப உறவுகள், குடும்ப உறவும் பண்புகளின் பரிணாமங்களும் என்கிற உட்தலைப்புகளின் வழி பொருத்தமான வரைவிலக்கணங்களும், கோட்பாட்டுச் செய்திகளும் அறிஞர்தம் கருத்துக்களும் விரிவாக எடுத்துரைக்கப் பெறுகின்றன. பொதுவாகக் குடும்பம் மற்றும் உறவுகள் விளக்கப் பெற்று, தமிழ்ச்சமூகத்தின் குடும்பம் மற்றும் உறவுகள் வரலாற்றுப் பார்வையில் விளக்கம் பெற்றுள்ளன.

"சிவசங்கரி நாவல்களில் குடும்பம்" என்பது ஆய்வேட்டின் நான்காவது இயலாகும். தலைமைச் சிந்தனை, குடும்பக் கருத்துருவாக்கம், நல்ல குடும்பத்தின் அடையாளம், குடும்ப இயக்கத்தில் பெண், குடும்பமும் சரிநிகர் நிலையும், மனைவிக்கு அலுவல் பணி தேவையா, குடும்பப் பெண் போன்ற உட்தலைப்புகளின் வழியில் சிவசங்கரியின் சிந்தனைகள் மதிப்பிடப்பட்டு எடுத்துரைக்கப் பெறுகின்றன. குடும்பமும் வளர்ச்சி நிலைகளும் என்ற தலைப்பில் திருமணத்திற்கு முந்தைய நிலையான காதல், திருமண நிலை, குழந்தை வளர்ப்பு நிலை, முதிர்ச்சி நிலை ஆகியவை இடம்பெற்றுள்ளன. இந்நான்கு நிலைகள் சிவசங்கரியின் நாவல்களில் இடம்பெற்ற நிலை தொடர்ந்து மதிப்பிடப் பெறுகிறது. திருமணத்திற்கு முந்தைய நிலையான காதலில் நிறைவேறும் காதல், நிறைவேறாக் காதல் என்ற பகுப்பு மேற்கொள்ளப் பெற்றுத் தரவுகள் அட்டவணைப்படுத்தப் பெற்றுள்ளன. நிறைவேறும் காதல், இயல்புக்காதல், உயர் காதல் எனப் பிரிக்கப் பெற்று; இயல்புக்காதல் உறவினரிடையே தோன்றும் காதல், உறவு இல்லாதவரிடையே தோன்றும் காதல் என பகுக்கப் பெற்றுள்ளது.

'திருமண நிலை' என்ற தலைப்பில் ஆயிரம் காலத்துப் பயிர், திருமண வயது, திருமணத்தில் வரதட்சணை, மரபின் ஆட்சி போன்ற உட்தலைப்புகளில் சிவசங்கரியின் திருமணம் பற்றிய கருத்துருவாக்கங்கள் மதிப்பிடப் பெற்றுள்ளன. திருமணம் மரபு சார்ந்தவை, மரபு மீறியவை என

பகுக்கப் பெற்றுள்ளது. பொருத்தமான அட்டவணைகளுடன் விளக்கம் பெற்றுள்ளது.

'குழந்தை வளர்ப்பு நிலையில் தனிக்குடும்பம்' மற்றும் 'கூட்டுக் குடும்பத்தில் குழந்தை வளர்ப்பு'ப் பற்றி சிவசங்கரி புலப்படுத்திய கருத்துகள் உட்தலைப்புகளின் வழி விளக்கம் பெற்றுள்ளன. இணைவும் பிரிவும், கணவன் இறப்புப் போன்ற உட்பிரிவுகளை உள்ளடக்கி முதிர்ச்சி நிலை விளக்கப் பெற்றுள்ளது. பொதுவாக, குடும்பம், குடும்ப உருவாக்கங்கள் குறித்த சிவசங்கரியின் சிந்தனைகள் இவ்வியலில் மதிப்பிடப் பெற்றுத் தெளிவாக விளக்கப் பெறுகின்றன.

"தனிக்குடும்ப உறவுநிலைகள்" ஆய்வேட்டின் ஐந்தாம் இயலாகும். இதில் குடும்பத்தின் வகைகள், சிவசங்கரி நாவல்களில் குடும்ப வகைப்பாடு, தனிக்குடும்ப நிலை, சிக்கல்களின் வகைப்பாட்டில், கணவனைச் சார்ந்தமையும் சிக்கல், மனைவியைச் சார்ந்தமையும் சிக்கல், இருவரையும் சார்ந்தமையும் சிக்கல், குழந்தையின்மை, குழந்தையைச் சார்ந்தமையும் சிக்கல் என்று பகுக்கப் பெற்றுள்ளது.

மிகைப்பாலியல் ஆர்வம், வக்ரபுத்தி, வசதி மற்றும் ஆடம்பரம், ஆதிக்க உணர்வு போன்ற சூழல்களில் கணவனைச் சார்ந்தமையும் சிக்கல்களை சிவசங்கரி தம் நாவல்களில் பதிவு செய்துள்ளார்.

புகழ் போதையில் மயங்குதல், வசதியான வாழ்வில் மோகம் கொள்ளுதல், கனவு மற்றும் கற்பனைகளோடு வாழ்தல், கணவனை மதிக்காமை, குடும்பத்தில் பொறுப்பின்மை போன்ற வகைகளில் மனைவியைச்சார்ந்தமையும் சிக்கல்கள் அமைந்துள்ளன.

கணவன் மனைவி இருவரும் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்தும் அனுசரித்தும் வாழ்ந்தால் சிக்கல்கள் உருவாகாது என்பதை இருவரையும் சார்ந்தமையும் சிக்கல்களில் பதிவு செய்துள்ளார்.

குழந்தையின்மையைச் சார்ந்த சிக்கல்களில் பெரும்பாலும் மனைவி காரணமாகவே சிக்கல்கள் உருவாவதை, சிவசங்கரி பதிவு செய்துள்ளார்.

குழந்தைகளிடம் அதிகமான செல்லம் கொடுப்பதால் குழந்தைகள் சீரழியும் என்பதை பல நாவல்களில் சிவசங்கரி பதிவு செய்துள்ளார். அளவுக்கதிகமான செல்லம் சீரழிவையே தரும் என்று எச்சரிக்கைக்குரல் கொடுத்துள்ளார். இவைகளை விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

"கூட்டுக்குடும்பம்" ஆய்வேட்டின் ஆறாவது இயலாகும். இங்கு ஆணாதிக்கச் சூழல் கூடுதலாகவும், தலைமைப் பொறுப்பு மூத்தோர்களிடம் குவிந்திருக்கும் முறையும் சுட்டப் பெறுகின்றது.

கூட்டுக்குடும்ப நாவல்களும், களங்களும் அட்டவணை வழி பகுக்கப்பெற்றுள்ளன. சிக்கல்கள் வகைமை என்ற தலைப்பில் கணவன் பெற்றோர்களைச்சார்ந்தமையும் சிக்கல்கள், கூட்டுக் குடும்பத்தில் கணவன் மனைவியைச் சார்ந்தமையும் சிக்கல்கள் என்ற முறையில் வகைப்படுத்தப் பெற்றுள்ளன.

கணவனின் பெற்றோர் மற்றும் கணவனைச் சார்ந்தமையும் சிக்கல்களில் புறக்கணிப்பும் ஆதரவும், கூட்டுக்குடும்பத்தில் உளவியல் மாமியார், குணவறுமையான மாமியார், கலப்புத் திருமணத்தில் மாமியார்,மகனின் முறையற்ற செயலுக்குக் காரணமான மாமியார், இரண்டாம்தார மாமியார், மகனுக்குத் துணை என்ற தலைப்புகளில் அமைகின்றன.

கூட்டுக்குடும்பத்தில் கணவன் மனைவியரிடையே சிக்கல், பிற உறவுகள் என்ற தலைப்புகளில் சிவசங்கரியின்கருத்துக்கள் மதிப்பிடப் பெறுகின்றன.

'பெண்ணியச் சிந்தனைகள்' என்ற தலைப்பில் ஏழாவது இயல் அமைந்துள்ளது. பெண்ணியம் விளக்கம், பெண்ணியம் ஆடவர்க்கு எதிரானதா? பெண்ணியத்தின் வகைகள், இந்தியப் பெண்ணியம், தமிழ்ப் பெண்ணியம், பெண் படைப்பாளர் பார்வையில் பெண்ணியம், பெண் கல்வி, பெண் பார்த்தல், மரபும் மாற்றமும், பெண் வணிகப் பொருளாக, மணவாழ்வு, மனைவி கணவன்பெயரைச் சொல்லலாமா? கடமைகளில் உரிமை, படிப்பிற்குத் தடையா? பொறுப்பில்லாக் கணவனைப் புறக்கணிக்கும் மனைவி, பணத்தில் குணம் மாறும் கணவன் தேவையா, தனித்தியங்கும் துணிவு, கற்பும் மறுமணமும், பெண்களின் மறுமணம், குழந்தையின்மை போன்ற உட்தலைப்புகளின் வழி சிவசங்கரியின் பெண்ணியச் சிந்தனைகள் இவ்வியலில் மதிப்பிடப் பெற்றுள்ளன.





"முடிவுரை" என்ற இயலில் ஒவ்வொரு இயலிலும் கூறப்பெற்றுள்ள முடிவுரையிலிருந்து செறிவான முடிவுகள் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. துணை நூற்பட்டியலை அடுத்துப் பின்இணைப்பு அமைந்துள்ளது. பின்னிணைப்பில் சிவசங்கரியின் படைப்பாக்க விவரங்கள், அக்னி அறக்கட்டளையின் ஆங்கிலப்பகுதி, சிவசங்கரி அவர்களின் சுயசரிதை மற்றும் அவர்களுடன் பெறப்பெற்ற வினாவழித் தொடர்பு இணைக்கப் பெற்றுள்ளன.

* * * * *

# 2. படைப்பாளரும் படைப்பாக்கமும்

இலக்கியம் சமூகத்தோடு நெருங்கியத் தொடர்புடையது. சமூக வயமாகிய எழுத்தாளர் இலக்கியத்தை உருவாக்குகிறார். அச்சமூகத்தின் இயல்பு காலந்தோறும் ஒன்றுபோல் இருப்பதில்லை. சமூகத்தில் நிலவும் சமூக மதிப்புகளும் (Social Value) புதுப்புது பரிணாமங்களைப் பெறுகின்றன. இச்சூழலில் சமூகமாற்றம் இயல்பாகிறது.

சமூகமாற்றத்தால் சமூகச் சிக்கல்களும் அவற்றிற்கான தீர்வுகளும் தோன்றுகின்றன. எழுத்தாளர் அவைகளைத் தம் பார்வையில் சமுதாயத்தைத் திறனாய்வு செய்து, சிறுகதை, நாவல் போன்ற இக்கால இலக்கிய வகைமைகளில் பதிவு செய்கின்றனர்.

## நாவல்கள் சமகாலச் சான்றுகள்

சமுதாயப் பிரச்சினைகள் பலவற்றை வெளிப்படுத்தும் ஊடகங்களில் நாவல் இலக்கிய வகைக்குச் சிறப்பான இடம் உண்டு.

> "புனைகதை கலாசிருஷ்டியே எனினும் சமுதாயமாற்றத்தை மாறும் சமுதாயத்தின் நிலையைக் காட்டும் வரலாற்றுச் சான்றாகவும் விளங்குகிறது. கைத்தொழில் புரட்சியென்றும் இயந்திரப் புரட்சி என்றும் பின்னர் ஏற்பட்டுள்ள சமுதாய மாற்றங்களை அறிவதற்கும் மாற்றம் ஏற்படும் சமுதாயத்தில் வாழ்ந்த மக்கள் எம்முறையில் வாழ்க்கையை நோக்கினர், எவ்வாறு சிந்தித்தனர் என்பவற்றை அறிவதற்கும் புனைகதைகள் சிறப்பாக, நாவல்கள் சமகாலச் சான்றாக வரலாற்று ஆசிரியராலும் சமூகவியலாசிரியர்களாலும் போற்றப்படுகின்றன"[1]

என்பது அறிஞர்தம் சிந்தனையாகும்.

> "இலக்கியத்தில் நாவல்வகையும் ஒன்று. அந்நாவல்களில் செவ்வியல் அல்லது தரமான நாவல்கள் (Classic Novels) கடந்த காலத்தை நம்மிடம் பழக்கமானதாக ஆக்கிக் காட்டுகின்றன. அக்காரணத்தால்தான் நாம் அவைகளைப் படிக்கிறோம். இருந்த போழ்திலும் நாம் நிகழ்காலத்தில்

இருந்து கொண்டு அவைகளைப் படிப்பதால் உண்மையான இயல்பை இனங்காணாமல் இருக்கின்றோம். சமகால நாவல்கள் காலத்தின் இயல்பைக் காட்டுகிற சிறப்புவகைக் கண்ணாடி எனலாம். காலத்தின் புற இயல்பை மட்டும் காட்டாமல் நரம்பு மண்டலமும் இரத்த ஓட்டமும் போன்ற அகவியல்பையும் மற்றும் முரண்பாட்டையும் பிரதிபலிக்கக் கூடியவைகளாகச் சமகால நாவல்கள் விளங்குகின்றன".[2]

இக்கருத்திலிருந்து சமகால நாவல்களின் பயன் நிலையைத் தெளிவாக உணரலாம்.

("இலக்கியப் படைப்பு ஒரு தனிமனிதனது கற்பனையில் மட்டும் முகிழ்ப்பதன்று. உணர்வில் ஊக்கப்பட்ட ஒரு தனிப்பட்ட மூளையின் உழைப்பில் மட்டும் விளைவதன்று. சமகாலப் பழக்கவழக்கங்களின் கல்வெட்டாக விளங்குவது இலக்கியம்"[3])

என்று அறிஞர் கெயின் ஆங்கில வரலாற்று நூலின் முன்னுரையில் குறிப்பிடுவதும் இவண் கருதத்தக்கதாகும்.

எனவே, சமகால நாவல்களில் சமகாலப் பழக்கவழக்கங்கள் போன்றவைகள் பதிவு பெறுகின்றன. இப்பதிவு காலம் கடக்கிற பொழுது சமூக ஆவணங்களாக மாறும் தகுதிகளைப் பெறுகின்றன. நாவல் அளவில் தகுதி பெறுகின்றபோது பிற்காலத்தில் சமகால இலக்கியங்களே செம்மைசார் நாவலாக (Classical Novel) மாறுகின்றன.

## வாழ்க்கையும் எழுத்தும்

"எழுத்தாளரின் சொந்த வாழ்க்கைக்கும் அவனது எழுத்திற்கும் உள்ள உறவு நெருக்கமானது. அவனது சொந்த வாழ்க்கை அனுபவம் அவன் எழுத்துக்கான மூலவித்தையும் தருகிறது"[4]

என்பது அறிஞர் தம் கருத்தாகும்.

உறவுகள், குடும்பம், சமூகம் போன்ற கூறுகளுடன் எழுத்தாளர் கொள்கிற நெருக்கம், அணுகுமுறை போன்றவை எழுத்துக்களிலும் பிரதிபலிப்பது இயற்கை.

"எழுத்தாளர் பிறந்த குடும்பச்சூழல், கல்விச்சூழல், தொழில் மற்றும் திருமண வாழ்க்கை ஆகிய விவரங்களின் அடிப்படையில் அவர் சார்ந்துள்ள சமூகப்பிரிவை அறுதியிட்டுக் கூறலாம்".[5]

இச்சமூகப் பிரிவை உணர்ந்தால் அவர் கருத்துக்களின் உள்ளார்ந்த செய்திகளைப் புரிய ஏதுவாகும். மேலும் அவரின் சமூக இலயிப்பு, அணுகுமுறை நோக்கு, இவைகளையும் தெரிதல் தேவையாகிறது. இவைகளை எந்த அளவிற்குத் தத்தம் நாவல்களில் வெளிப்படுத்துகிறார் என்பதை மதிப்பிடுவது திறனாய்வாளரின் கடமையாகும்.

"பொதுவாகச் சமகால இலக்கியங்களை மதிப்பிடும்போது, இலக்கியத்தை உருவாக்கிய எழுத்தாளரின் வாழ்க்கை வரலாற்றை அறிந்து கொள்வதும் அவசியமாக இருக்கிறது. இலக்கியத்தைச் சரியாக மதிப்பிட அவ்வறிதல் துணை நிற்பதாக அமையும்."[6]

இக்கருத்தின் அடிப்படையில் சிவசங்கரியின் நாவல்களில் குடும்ப உறவுகளை மையமிட்ட ஆய்வுச் சூழலில் படைப்பாளரின் வாழ்க்கை வரலாற்றையும் படைப்பாக்கத்தினையும் பிறபணிகளையும் விளக்கமுறையில் விளக்குவதாக இப்பகுதி அமைகிறது. சமகால நாவல் படைப்பில் பங்குபெற்றிருக்கும் அவரின் சமூகப் பார்வையினையும் பதிவுகளையும் மதிப்பிட இப்பகுதி ஏதுவாகும். அவருடைய வாழ்க்கை வரலாற்றை அறிந்துகொள்ளும் வகையில் வினாவழித் தொடர்பு (Questionnaire) மேற்கொள்ளப் பெற்றது. அத்தொடர்பு வழிச் செய்திகள் பின்வரும் பகுதிகளில் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

## பிறப்பும் கல்வியும்

சூரியநாராயணன் ராஜலட்சுமி ஆகியோர்க்கு மகளாக 14.10.1942–இல் சிவசங்கரி பிறந்தார். தந்தை தணிக்கையாளராகப் பணிபுரிந்து வந்தார். சென்னையில் தியாகராசர் நகரில் உள்ள சாரதா வித்யாலயத்தில் சிவசங்கரியின் தொடக்கக் கல்வி அமைந்தது. பள்ளி இறுதிப்படிப்பில் தலைசிறந்த மாணவியாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றமை விளையும் பயிர் முளையிலே தெரியும் என்பதைக் காட்டுவதாகக் கொள்ளலாம். கல்வியில் மட்டுமின்றி பாட்டு, நடனம் போன்றவைகளிலும் சிவசங்கரிக்குப் பயிற்சியும் சிறப்பும் இருந்திருக்கிறது. சிவசங்கரியின் தாயாருக்குக் கர்னாடக சங்கீதம்,

நாட்டியம் ஆகியவற்றில் இருந்த ஆர்வம் காரணமாக சிவசங்கரியும் இவ்விருகலைகளில் தேர்ச்சிபெறுவது சாத்தியமாயிற்று.[7]

சென்னையில் உள்ள எஸ்.ஐ.ஈ.டி. மகளிர் கல்லூரியில் பட்டப்படிப்பில் விலங்கியலைப் பாடமாகக் கொண்டு பயின்றார். கல்லூரிச் சூழலில் நடனம், பாட்டுப் போன்றவற்றில் இவருக்கிருந்த திறமை வெளிப்படத் தொடங்கியது. கல்லூரிகளுக்கிடையே நடைபெற்ற அகில இந்திய நடனப் போட்டியில் முதல் பரிசு பெற்றுள்ளார். இந்திய தலைநகரான டில்லியில் குடியரசுதின அணிவகுப்பில் கலந்து கொண்ட பெருமை இவருக்கு உண்டு. தேசியமாணவர் படையில் சிறந்த மாணவியாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிறார். இள அறிவியல் பட்டப்படிப்பில் கல்லூரியில் முதலாவதாகவும் மாநிலத்தில் ஒன்பதாம் இடத்திலும் தேர்ச்சி பெற்றவர்.

## இல்லற வாழ்க்கை

சிவசங்கரியின் இருபதாவது வயதில் திருமணம் நடைபெற்றது. கணவர் பெயர் சந்திரசேகர் என்பதாகும். விழுப்புரத்தில் 'ஸ்பன் பைப்' நடத்தி வந்தார். திருமணத்தைத் தொடர்ந்து மூன்று வருடங்கள் போபாலில் இருந்திருக்கிறார். பின் அவருடைய வாழ்க்கை சென்னையில்தான் இருந்திருக்கிறது.

("எந்தச் செயலைச் செய்தாலும் முழு ஈடுபாட்டுடன் கடினமாக உழைக்க வேண்டும் என்பதை என் கணவரிடமிருந்து கற்றேன். மற்றபடி, 'நான் நானாக இருக்கவும் எனது முயற்சிகள் அனைத்திலும் நான் வெற்றிபெறவும் என் கணவர் உறுதுணையாக இருந்தார்"[8] )

என்பது சிவசங்கரியின் கூற்றாகும். ஆணின் வெற்றிக்குப் பின்னர் பெண் இருப்பதுபோல, பெண்ணின் வெற்றிக்குப் பின்னரும் ஆண் இருக்கும் நிலையை அறிய முடிகிறது. சிவசங்கரியின் கணவர் 1984–ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் பதினெட்டாம் நாள் நுரையீரல் கோளாறு காரணமாக இறந்தார்.

## எழுத்தின் கதை

"தொடர்கதைகள், சிறுகதைகள், பயணக் கட்டுரைகள், நம்பிக்கைக் கட்டுரைகள் எனக் கிட்டத்தட்ட நூறு புத்தகங்கள் எழுதியுள்ளார். பாரதீய பாஷா பரிஷத் விருது, கஸ்தூரி சீனிவாசன் விருது – இவர் பெற்றுள்ள அங்கீகாரங்கள். இவரின் சில கதைகள் திரைப்படமாகவும் வந்துள்ளன".[9]

சிவசங்கரியின் எழுத்துலகச் சாதனைகளைத் தமிழ் நாவல் இலக்கிய வரலாறும் பதிவு செய்துள்ளது.

'சிவசங்கரியிடம் நீங்கள் எழுத்தாளராக இருப்பது பற்றி ....?' என்ற வினா கேட்கப்பெற்றபோது,

"எனக்கு ஒரு எழுத்தாளர் ஆகணும்கிற கனவோ, மோகமோ, வெறியோ இல்லாம, நான் எழுத்தாளர் ஆனேன். என்னுடைய எழுத்தை எந்த நோக்கத்தில் எழுதினேன்னு கேட்டா நான் சந்திக்கிற இந்த சமுதாயத்தை நான் ரொம்ப நேசிக்கிறேன். என்னைப் பாதிக்கிற விஷயங்களை நான் ஆக்கப்பூர்வமாக பகிர்ந்துக்க என் எழுத்தை ஒரு கருவியா பயன்படுத்தறேன்"[10]

என்று கூறுகிறார். சிவசங்கரி தன்னைப் பாதித்த சூழல்களை வாசகர்களிடம் எடுத்துச் சொல்லும் ஊடகக்கலையைக் கையாளும் திறனில் சிறப்புப் பெற்றவர். அச்சிறப்பால்தான் எழுத்தாளராகவும் திகழ்கிறார்.

1969–ல் சிவசங்கரியின் முதல் பிரசவமாக 'அவர்கள் பேசட்டும்' சிறுகதை கல்கி இதழில் வெளிவந்தது.

"எனது எழுத்து, பத்திரிகையில் பிரசுரமாகியிருக்கிறது என்ற மகிழ்ச்சியோடு, ஆசிரியர் திரு. கி. ராசேந்திரன் அவர்கள், 'உங்களால் மன உணர்வுகளை அழகாக வெளிப்படுத்த முடிகிறது. எனவே, அதையே முக்கிய அம்சமாகக் கொண்டு தொடர்ந்து எழுதுங்கள்' என்று கடிதம் எழுதியதும், சேர்ந்து அடுத்த ஆண்டில், 'ஆனந்த விகடன்' இதழில் 'எதற்காக?' என்ற எனது முதல் நாவல் வெளியாகி,

தமிழ்நாட்டில் மட்டுமல்லாது இந்தியா முழுவதிலும், வெளிநாட்டிலும் கூட எனக்குப் பெரும் வரவேற்பைப் பெற்றுத் தந்தது. இவ்விரு சந்தர்ப்பங்களிலும் நான் அடைந்த மகிழ்ச்சியை விவரிக்க எனக்குச் சரியான வார்த்தைகள் கிட்டவில்லை"[11]

என்று குறிப்பிடுகிறார்.

சிவசங்கரியின் எழுத்தின் பயணத்தில் தொடக்கத்தில் அவரின் கணவர் உறுதுணையாக இருந்திருக்கிறார்.

"தன்னுடைய வளர்ச்சிக்கு ஊன்று கோலாக விளங்கி, உற்றுழி உதவி, உறுதுணை புரிபவர்,"[12]

என்று சிவசங்கரியே தன் கணவரைப் பற்றிக் கருத்துத் தெரிவிக்கிறார். கல்கி ஆசிரியர் கி. இராசேந்திரன்,

"சிவசங்கரியின் எழுத்திற்குப் பக்கபலமாக நிற்பவர் அவரது கணவர்"[13]

என்று உறுதிப்படுத்துவதும் இங்குக் கருதத்தக்கதாகும். பெண் சமுதாயத்தில் பண்பாட்டுப் போர்வைக்குள் ஒடுக்கப்பெற்று, பெண்கள் வெளிவராத நிலையை, கணவர் சந்திரசேகரன் உருவாக்கவில்லை. மனைவி தன்னாதிக்கத்தை விட்டு எழுத்துலகில் பிரபலமடைவதையும் புகழடைவதையும் கணவர் ஒதுக்கவில்லை. கணவரின் இப்பண்பு சிவசங்கரியின் எழுத்துலக வளர்ச்சிக்கு மிகவும் உதவியது.

"மரியாதையைக் கொடுத்து மரியாதை வாங்கும், அன்பைக் கொடுத்து அன்பை வாங்கும் தாம்பத்தியத்தில்தான் எனக்கு நம்பிக்கையுண்டு"[14]

என்று குடும்பத்தைப் பற்றி சிவசங்கரி கருத்துத் தெரிவிப்பார். இக்கருத்து அவரின் குடும்ப வாழ்விலும் இருந்ததை அறியலாம். எனினும் கணவரின் ஊக்கம் தொடர்ந்து கிடைக்காத நிலை உருவாகியது. 1984–இல் கணவரின் இறப்பு நிகழ்ந்தபோது, அந்நிகழ்வு சிவசங்கரியின் மனதை வெகுவாகப் பாதித்தது. அப்பாதிப்பும் வேதனையும் சிவசங்கரியை முழுநேர

எழுத்தாளராக மாற்றியது. சமூகசேவை அவரின் மனத்தில் இடம் பிடித்துக் கொண்டது.

## புரிதலும் பகிர்தலும்

> "சில அனுபவங்கள், சில செய்திகள், சில காட்சிகள், சில வார்த்தைகள், சில மனிதர்கள், சில சம்பவங்கள் என்னுள் உண்டாக்கிய பாதிப்புகளை உங்களோடு நான் பகிர்ந்து கொள்ள முயன்றிருக்கிறேன். அதன் விளைவே இக்கதைகள்"[15]

என்பது சிவசங்கரியின் கருத்தாகும்.

புரிந்து கொண்ட வாழ்க்கை அனுபவத்தைப் பகிர்ந்து கொள்ளும் முயற்சிக்கு நாவல் இலக்கியத்தைப் பயன்படுத்துகிறார்.

> "பகிர்ந்து கொள்ளும் பொழுது ஒரு நிறைவு கிடைக்கிறது"[16]

என்று சிவசங்கரி குறிப்பிடுவதும் கருதத்தக்கதாகும். கண், காது, மனம் ஆகியவற்றைத் திறந்து வைத்துச் சுற்றியுள்ளவற்றைக் கூர்ந்து கவனிக்கும் போது அனுபவங்களும் பிரச்சினைகளும் தென்படும். இவை உண்டாக்கும் புரிதல்களை, சிவசங்கரி வாசகர்களோடு பகிர்கிறார்.

> "அனுபவிக்கும் அனுபவங்களைப் பார்த்தும் கேட்டும் படித்தும் சம்பவங்களை நெஞ்சில் முடிந்தவரையில் தேக்கிக் கொள்கிறேன். பிற்பாடு அவைகளை ஒரு சிறுகதை அல்லது தொடர்கதையில் உபயோகிக்க நேரம், காலம் வருமானால் நிதானமாய் அந்தப் பாதிப்புகளை நினைவுக்குக் கொணர்ந்து யோசனை செய்து, நான் அந்தக் கதாபாத்திரங்களாக மாறி அதற்குத் தேவையான களஆய்வு செய்து எழுத்தில் வடிக்கிறேன்"[17]

என்று சிவசங்கரி குறிப்பிடுகிறார். வாழ்க்கைச் சூழலைக் களஆய்வில் கண்டு எழுத்தில் ஏற்றுவதாகக் குறிப்பிடுகிறார். இந்நிலைக்கு அவரின் எழுத்துக்களிலிருந்து சில எடுத்துக் காட்டுக்களைக் காணலாம்.

"1970–இல் அமெரிக்கா சென்ற பொழுது போதை மருந்தின் விளைவு குறித்த வித்து வளர்ந்து 1974–இல் குறு நாவலாகி 1985–இல் 'அவன்' நாவலாகியிருக்கிறது"[18].

இடைப்பட்ட காலங்களில் போதை மருந்தின் விளைவுகளைக் களஆய்வில் திரட்டியநிலை கருதத்தக்கதாகும்.

"அம்மா ப்ளீஸ் எனக்காக, கதை எழுத ஒரு வருடம் போலக் கள ஆய்வு (Spade Work) செய்துள்ளார். அக்கதையைப் படித்தவர்கள் சிவசங்கரி பாங்கில் வேலை பார்த்தமையால் இத்தனை ஆழமாகக் கதை எழுத முடிந்தது என்று கூறுகிறார்கள். அது என் எழுத்திற்குக் கிடைத்த வெற்றி"[19]

என்று சிவசங்கரி குறிப்பிடுகிறார். வங்கியில் வேலைபார்க்கும் போது பெற்ற கள அனுபவப் பதிவுகள் நாவல் உருவாக்கத்திற்கு உதவியுள்ளன. 'பாலங்கள்' கதை எழுதப் பலரும் துணை புரிந்துள்ளனர்.

திருமணமாகாமல் தாயானவர்கள் இல்லத்திற்கும், மிஷனரி நடத்தும் பாலர் அனாதை இல்லத்திற்கும் சென்று அங்குள்ளவர்களின் கதைகளைக் கேட்டு அதிர்ந்து அவர்களுக்குச் சமுதாயத்தின் அன்பும் அக்கறையும் தேவை என்று எழுதப்பட்ட கதைகள் உண்மைக்கதைகள் என்று கூறுகிறார். சமூக சேவை நிறுவனம், முதியோர் இல்லம் பற்றி 'நெருஞ்சிமுள்' நாவலில் கள ஆய்வுச் செய்திகளைப் பொருத்தி எழுதியுள்ளார்.

## பணியும் கொள்கைகளும்

சிவசங்கரியின் பணிகளை எழுத்துப்பணியென்றும், சமூகப் பணியென்றும் பாகுபடுத்திப் பார்க்கலாம். எழுத்துப்பணிகளில் பல நிலைகளில் ஈடுபட்டுள்ளமை கருதத்தக்கதாகும். சிறுகதைத் தொகுப்புகள் பத்தைத் தாண்டியுள்ளன. எண்பதுக்கும் மேற்பட்ட நாவல்களை எழுதியுள்ளார். பயணக் கட்டுரைகளாகப் பத்து நூல்களை வழங்கியுள்ளார். கட்டுரைத் தொகுப்புகள் ஆறும் வாழ்க்கை வரலாறுகள் இரண்டும் எழுதியுள்ளார்.[20] இவைகள் இவரது படைப்பாக்கச் சாதனைகளாக விளங்குகின்றன.

‘கலை கலைக்காகவே’, ‘கலை வாழ்க்கைக்காகவே’ என்கிற கோட்பாடுகள் குறித்து சிவசங்கரி கூறுவதாவது :

“கலை என்பது வாழ்க்கையின் ஓர் அம்சம் என்கிற வகையில் இரண்டுமே ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவை. இவற்றைப் பிரித்துப் பார்த்து விவாதிக்கத் தேவையில்லை என்பது என் கருத்து”[21]

என்று குறிப்பிடுகிறார்.

சிவசங்கரியின் எழுத்துக்கள் யாருக்காக? என்கிற சிந்தனை வினா எழுப்பப் பெற்றபோது,

“என்னோடக் கண்ணோட்டம், எழுத்து எல்லாம் புத்திசாலிகளை விட சாதாரண ஜனங்களுக்குத்தான், ஏன்னா எனக்குத் தெரிஞ்ச விஷயங்கள் எல்லாம் சாதாரண விஷயங்கள் தாம். என்னுடைய அறிவுன்னு பார்த்தாலும் என்னை யாரும் இன்டெலக்சுவல்னு சொல்லக் கூடாதுங்கிறதுதான் என் பிரார்த்தனை. நடைமுறை புத்திசாலின்னு சொன்னா அது பெரிய பாராட்டு. வாழ்க்கையில் நல்லது, கெட்டதைப் புரிந்துகொண்டு அடுத்தவர்கள் வேதனையைப் புரிந்து கொண்டு ஒரு நல்ல மனிதப்பிறவியாக, வாழ்க்கையில் கூடுமானவரை முரண்டல்கள் இல்லாம சமரசம்னு சொல்ல வரல்லே ..... சூழ்நிலை மாற்றத்தை உணர்ந்து கொண்டு அதை என் எழுத்துலே சாதாரண மக்களுக்குக் கொண்டு போனா போதும்னு நினைக்கிறேன். இதைத்தான் இத்தனை ஆண்டுகளாய் என் எழுத்தில் செய்து கொண்டு வருகிறேன்”[22]

என்று குறிப்பிடுகிறார். சாதாரண மக்களுக்கு எழுத்தின் பயன்பாடு இருக்க வேண்டுமென்கிறார். கலையும் வாழ்க்கையும் இணைந்ததே என்கிற சமரசச் சிந்தனை சிலரிடம் இருப்பது மேற்குறித்த செய்திகளிலிருந்து தெளிவாகிறது.

“நாவலோ சிறுகதையோ எதுவானாலும் தெளிவு இருக்க வேண்டும். எப்படி எழுத வேண்டும் என்ற தீர்மானமும், எழுதியது வாசகர்களுக்குப் புரியவேண்டும் என்ற நோக்கமும் இருக்க வேண்டும். இந்த வகையில் எனக்கு மகாகவி பாரதியாரின் கீழ்க்கண்ட வார்த்தையில் முழு உடன்பாடு உண்டு. கூடியவரை பேசுவது போலவே எழுதுவதுதான் உத்தமமென்பது என்னுடைய கருத்து. ஒரு கதை அல்லது தர்க்கம்

அல்லது ஒரு சாஸ்திரம், பத்திரிக்கை விஷயம் என்று எதை எழுதினாலும் வார்த்தை சொல்லுகிற மாதிரியாகவே அமைந்துவிட்டால் நல்லது"[23]

என்று கூறியதை சிவசங்கரி எழுத்தின் நடைக்கொள்கை எனவும் மதிப்பிடலாம்.

("என் எழுத்துக்களை எந்த ஒரு வாசகரும் அதன் சகஜத்தன்மையை அன்றாட வாழ்வின் பிரதிபலிப்பை எதார்த்தத்தை உணரவேண்டும் என்பதே என் இலட்சியம்"[24])

என்கிற நிலையில் தெளிவுடன் இயல்புத்தன்மையும் எழுத்தில் மிளிர வேண்டுமென்கிற இவரின் கருத்தை உணரலாம். தன் எழுத்து எப்படி அமைய வேண்டும் என்பதிலும் சிவசங்கரி தெளிவான சிந்தனையோடு செயல்படுகிறார்.

"நான் அன்றாட வாழ்க்கையில் செய்யும் காரியங்கள் பேசும் பேச்சுக்கள் எப்படி என்னை உறுத்தாமல் இருக்க வேண்டுமென்று விரும்புகிறேனோ, அதே போல நான் எழுதும் எழுத்துக்களும் வேஷம் போடாதவையாக என் நிம்மதியைப் பறித்துக் கொள்ளாதவையாக அமைய வேண்டும்"[25]

என்று கூறுகிறார்.

எழுத்தாளர் என்ற முறையில் ஆண் எழுத்தாளர், பெண் எழுத்தாளர் என்று பிரித்துப் பார்ப்பதை சிவசங்கரி விரும்பவில்லை. குறிப்பாகத் தன்னைப் பெண் எழுத்தாளர் என்ற அடைமொழியுடன் இணைத்துக் கூறுவதை அவர் விரும்பவில்லை.

"தான் பிறப்பினால் பெண் என்றாலும் மீறிக்கொண்டு அடிப்படையில் நான் ஒரு நபர் இதை மறக்கக்கூடாது. ஆக மனித நேயங்களுக்கும் உரிமைகளுக்கும் குரல் கொடுப்பதுதான் தலையாயக் கடமை"[26]

என்று கூறுவதை நோக்குகையில் சற்று வித்தியாசமான பெண் எழுத்தாளராகவே இருக்கிறார்.

## இவரைப்பற்றி இவர்கள்

சிவசங்கரியின் படைப்புகள் குறித்து ஆய்வாளர்களின் மதிப்பீடுகள் பல உள. அவரின் படைப்புகள் எம்.ஃபில். மற்றும் பி.எச்டி. பட்டங்களுக்காக ஆய்வு செய்யப் பெற்றமை இங்கு கருதத்தக்கதாகும். இதழியல் சார்ந்த வல்லுநர்கள் சிவசங்கரியைத் துவக்கத்திலிருந்தே இனங்கண்டு, பாராட்டி ஊக்கப்படுத்தி வந்துள்ளார்கள்.

சிவசங்கரியின் முதல் சிறுகதை ‘அவர்கள் பேசட்டும்’ என்பதாகும். அக்கதை பற்றி கல்கி கி. இராஜேந்திரன்,

> “உணர்ச்சிகளை மிக அழகாக வெளிப்படுத்தி இருக்கிறீர்கள். அதையே உங்கள் எழுத்தின் பலமாகக் கொண்டு தொடர்ந்து எழுதுங்கள்”[27]

என்று கூறியுள்ளார். மேலும்,

> “சிவசங்கரியின் எதிர்காலப் படைப்புகள் எப்படிப்பட்டவையாக இருக்கும் என்று இந்த ஆரம்பகாலப் படைப்புகளை வைத்து என்னால் பார்க்க முடிகிறது என்றும் சிவசங்கரியிடமிருந்து இன்னும் நான் அதிகம் எதிர்பார்க்கிறேன், இந்தக் கதைகள் என்னை அவ்விதம் எதிர்பார்க்க வைக்கின்றன”[28]

என்று கூறுவதும் கருதுதற்குரியதாகும்.

> “விஷயங்களிலே நம்மை லயிக்கச் செய்து சிந்திக்கச் செய்துவிடுகிறார் சிவசங்கரி”.[29]

என்று சாவி பாராட்டுகிறார். மேலும்,

> “சிவசங்கரியின் கட்டுரைகள் சாதாரணமானவை அல்ல, இலக்கியத்தரம் வாய்ந்தவை. நமது புத்தக அலமாரியில் என்றும் வைத்துக் காப்பாற்றப்பட வேண்டியவை”[30]

என்றும் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

சிவசங்கரி படித்த கல்லூரியின் ஆசிரியை ஒருவர் சிவசங்கரியைச் சந்திக்கின்றார். அப்பொழுது,

"மனதின் மெல்லிய உணர்வுகளும் சமுதாயப் பிரச்சினைகளும் ஒருவிதப் பாதிப்பைக் காண்பிக்க எழுதுவது நீதானா என்று கேட்டு வியக்கிறார்."[31]

தன்னிடம் படித்த மாணவி வியக்கவைக்கும் சாதனை புரிந்திருப்பதைக் கண்டு மகிழ்கிறார்.

திருமகள் நிலையத்தார் இவரது படைப்புக்களை நூலாக்குபவர்கள்,

"எண்ணிய உணர்வுகளை நெருடல் இல்லாமல் காட்டும் வல்லமை படைத்தவர் சிவசங்கரி"[32]

என்று திருமகள் நிலைய உரிமையாளர் குறிப்பிடுவார்.

"புதுமை எழுத்துச் செல்வி சிவசங்கரி என்று 'தாய்' வார இதழ் பாராட்டிப் பெருமைப் படுத்தியுள்ளது."[33]

இவ்வாறு பாராட்டுதல்களை,

"சிவசங்கரி என்ற மனுஷியும் அவளுக்குள் இருக்கும் எழுத்தாளரும் இந்த 21 வருடங்களில் துளித்துளியாகப் பெற்றுவரும் விவேகமும் நிதானமும் அவர் எழுத்துக்களில் பிரதிபலிப்பது நிறைவைத் தருகிறது"[34]

என்று தன்னிலிருந்து வேறுபடுத்தித் தன்னையே மதிப்பிட்டுள்ளார்.

## விமர்சனம் பற்றி

தன்னைக் குறித்து எழும் விமர்சனங்களை, தனக்கென உள்ள கொள்கைப் பிடிப்புடன் எதிர்நோக்குபவராகவே சிவசங்கரி இருக்கிறார். எழுதுவதை எப்பொழுது பொதுமக்களின் பார்வைக்காகப் பிரசுரிக்க அனுமதிக்கிறோமோ, அப்பொழுதே விமரிசனத்திற்குத் தயாராய் இருக்க வேண்டும் என்கிற கருத்தில் அழுத்தம் உடையவராக இருக்கிறார். அதனால்,

"அவ்விமர்சனம் பூச்செண்டாக இருந்தாலும் சரி செங்கற்களாக இருந்தாலும் சரி வாசகர் கண்ணோட்டத்தை மதிப்பது அவசியம் என்ற விவேகத்தோடு ஏற்றுக் கொள்வது எனக்கு உடன்பாடு"[35]

என்று கூறுகிறார்.

"எழுத்து என்பது அதன் தனிப்பட்ட தரத்திற்காகச் சீர்தூக்கிப் பார்த்து விமர்சிக்கப்பட வேண்டுமே ஒழிய, எழுத்தாளர் ஆணா, பெண்ணா, அவர் புகழ் பெற்றவரா, வியாபார பத்திரிக்கையில் எழுதுபவரா, எழுதாதவரா, என்றெல்லாம் கட்டம் காட்டி, இவைகளே அளவுகோல் என்பது தவிர்க்கப்பட வேண்டும் என்பது என் ஆணித்தரமான கருத்து"[36]

என்று விமர்சனம் எப்படி இருக்குமென்பதற்கு இலக்கணம் வகுக்கிறார் ஆசிரியர் சிவசங்கரி.

## பரிசும் பாராட்டும்

சிவசங்கரியின் எழுத்துலகச் சாதனைகள் அவருக்குப் பரிசுகளையும் பாராட்டுக்களையும் வாங்கித்தந்துள்ளன. அவைகள் குறித்த செய்திகள் அட்டவணையில் விளக்கப் பெற்றுள்ளன.



அட்டவணை 2.1

## பரிசும் பாராட்டும்

| வ. எண் | எழுத்துச்சேவை/ நாவல் பெயர் | ஆண்டு | பரிசு / விருது தரும் அமைப்பு | விருது |
|---|---|---|---|---|
| 1. | எழுத்துச் சேவை | 1976 | கொரமண்டல் ஜேசீஸ், சென்னை | சிறந்த இளம் எழுத்தாளர் |
| 2. | பாலங்கள் | 1983-84 | கஸ்தூரி சீனிவாசன் | சிறந்த நாவல் |
| 3. | சமுதாயத்திற்கு எழுத்துச் சேவை | 1987 | தென்னிந்திய நூலகப் பதிப்பு மற்றும் விற்பனையாளர் சங்கம், சென்னை | சிறந்த விருது |
| 4. | சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப் படுத்துவது (சுயமேம்பாடு) | 1988 | டாக்டர். ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார் விருது | அமைப்பின் பெயரில் விருது |
| 5. | சமுதாயத்திற்கு எழுத்துச் சேவை | 1988 | தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி | ராஜீவ் காந்தி விருது |
| 6. | எழுத்துச் சேவை | 1989 | ரோட்டரி சங்கம், சென்னை | For the Sake of Honour |
| 7. | எழுத்துச் சேவை | 1989 | தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர் | தமிழ் அன்னை |
| 8. | வேரில்லாத மரங்கள் | 1989-90 | பாரதிய பரிஷா பர்வித், கல்கத்தா | சிறந்த ஞானி |
| 9. | எழுத்துச் சேவை | 1990 | அரிமா சங்கம் | மெல்வின் ஜோன்ஸ் |
| 10. | எழுத்தின் மூலம் சமுதாயச் சேவை | 1991 | பாரத் எலக்ட்ரானிக்ஸ் | பாராட்டு |
| 11. | எழுத்துச் சேவை | 1991 | தெலுங்கு கலை அகாடமி | விருது |

| | | | | |
|---|---|---|---|---|
| 12. | அம்மா சொன்ன கதைகள் (ஒலி நாடா) | 1991-92 | திருப்பூர் தமிழ்ச் சங்கம் | விருது |
| 13. | எழுத்துச் சேவை | 1998 | அகில இந்திய மாதர் சங்கம் | சிந்தனைச் செல்வி |
| 14. | எழுத்துச் சேவை | 1998 | பாரதிய வித்தியா பவன், கே. சுப்பிரமணியன் அறக்கட்டளை | ஸ்திரி ரத்னா விருது |
| 15. | எழுத்துச்சேவை | 1998 | அத்திமப்பே ஃபவுண்டேஷன், பெங்களூர் | தேசிய விருது மனுஸ்ரீ |
| 16. | எழுத்துச்சேவை | 1999 | ஓக் ரிட்ஜ் நகரின் மேயர், அமெரிக்கா | கௌரவப் பிரஜை விருது |
| 17. | சமூக சேவை | 2000 | சர்வதேச மகளிர் சங்கம் | 1999–ஆம் ஆண்டின் சிறந்த பெண்மணி விருது |
| 18. | எழுத்துச் சேவை | 2001 | ராஷ்ட்ரீய ஹிந்தி அகாடமி, மேற்கு வங்காளம் விஷ்வபாரதி பல்கலைக்கழகம். | பிரேம்சந் சாஹித்திய சம்மன் விருது |

குடும்பம், சமூகம் என்ற தளங்களில் இலக்கிய வளத்தை உருவாக்கியவர். நடுத்தரப் பெண்கள் சமூகத்தில் இவரது குடும்பம் சார்ந்த நாவல்கள் நல்ல தாக்கத்தைப் பெற்றுள்ளன.

> "மாறிவரும் சமுதாயத்திற்கு ஏற்ப, அவரவர் குடும்பத்தில் மாற்றங்கள் வருவது வரவேற்கத்தக்கதே. மாற்றங்களை ஏற்க மாட்டோம் என்பது வீணான குழப்பங்களுக்கும், சிக்கல்களுக்கும் வழிவகுக்கும். ஆனால் நடை, உடை, பாவனை, வாழ்க்கை வசதிகள் இவற்றில் மாற்றம் ஏற்படலாமே தவிர, அடிப்படை மனிதப் பண்புகளில் அன்பு, பண்பு, மரியாதை போன்ற மதிப்புகளில் சீரழிவு இருத்தல் கூடாது"[37]

என்ற நிலையில் மாறிவரும் சமூகச் சூழலை எதிர்கொள்ளத்தக்க குடும்பவியல் சிந்தனைகளைச் சமூகத்தில் வழங்கியவர்.

சமூகப்பிரச்சினைகள் குறித்த விழிப்புணர்ச்சியூட்டுவதிலும் சிவசங்கரி தனிக்கவனம் செலுத்தி வருகிறார். குறிப்பாகப் போதை மருந்தின் தீய விளைவுகள் குறித்துச் சமூக விழிப்புணர்ச்சி உண்டாக்கி வருகிறார். 'அவன்' என்ற போதை மருந்து பற்றிய நூல் நல்ல வரவேற்பைப் பெற்றுள்ளது. உக்கிரைன் மொழியில் மொழி பெயர்க்கப் பெற்ற சிறப்பினது. மது . போதை அடிமை, முதியோர் பிரச்சினைகளை மையமிட்டு, பிராந்தியத் தொலைக் காட்சிகளில் தொடர்கள் பல வழங்கியுள்ளார். அவற்றில் 'சுபா' என்ற மெகாத் தொடர் சிறந்த படைப்பாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளது. கண்தானம், உடல் ஊனமுற்றோர், மனம் பாதிக்கப்பட்டோர் தொடர்பானவர்களின் பிரச்சினைகளை கதை, கட்டுரைகளின் வழி வெளிப்படுத்திச் சமூக விழிப்புணர்விற்குப் பாடுபடும் சாதனையாளர் எனக் கூறலாம்.

திருமதி இந்திரா காந்தி, திரு. ஜி.டி. நாயுடு ஆகியோர் குறித்து வாழ்க்கை வரலாற்று நூல்கள் எழுதியுள்ளார். இவரது நாவல்கள் திரைப்படமாக எடுக்கப்பெற்று மக்களிடம் நல்ல வரவேற்பைப் பெற்றுள்ளன.

மறைந்த முன்னாள் பிரதமர் திருமதி. இந்திரா காந்தி, திரு. ராஜிவ் காந்தி, நோபல் பரிசு பெற்ற அன்னை தெரசா ஆகியோர்களையும் மற்றும் சிறந்த வல்லுநர்களையும் சந்தித்துப் பேட்டி கண்டுள்ள பெருமையாளர் சிவசங்கரி. அவர்கள் வாழ்வில் நடைபெற்ற சுவையான நிகழ்ச்சிகளைப் பேட்டி கண்டு தொகுத்துள்ளார்.

தமது கதைகளை ஒளி, ஒலி நாடாக்கள் மூலம் முதன் முதலில் கொண்டு வந்த எழுத்தாளர் சிவசங்கரி ஆவார். ஆக்கபூர்வமான எண்ணங்களைத் தொலைக்காட்சிக்கு ஏற்ற வகையில் தயாரித்தவர். சன் தொலைக்காட்சியில் சமுதாயத்தில் நிலவும் பலதரப்பெற்ற செய்திகளை 'நேற்று இன்று நாளை' என்ற தொடராக நிகழ்த்திக்காட்டி, நேயர்களின் பாராட்டைப் பெற்றவர்.

மறைந்த முன்னாள் பிரதமர் திரு. ராஜிவ் காந்தியுடன் இருமுறை அவர் வெளிநாடுகளுக்குச் சென்றபோது கூடவே சென்று, இரு பயணக்கட்டுரைகளை எழுதியுள்ளார். அப்பயணக் கட்டுரைகள் பொதுமக்களின் பாராட்டுதலைப் பெற்றதுடன் ஜப்பான் மொழியிலும் மொழி பெயர்க்கப் பெற்றமை குறிக்கத்தக்கது (1995).

'வி.ஹச்.எஸ்' மருத்துவமனையுடன் இணைந்து மதுவை மறக்கச் செய்வதற்காக மூதறிஞர் ராஜாஜி அவர்களின் பெயரில் நிறுவனம் ஒன்றை உருவாக்குவதில் பெரும் பங்காற்றியுள்ளார்.

அங்கீகரிக்கப்பெற்ற பதினெட்டு இந்திய மொழிகளில் தலைசிறந்த எழுத்தாளர்களைப் பேட்டி கண்டு 'மொழிகளின் மூலம் இந்திய இணைப்பு' என்ற தலைப்பில் ஒவ்வொரு மொழியிலும் உள்ள பாரம்பரியம், கலாச்சாரம் பற்றி, பேட்டி கண்டு வெளியிட்டுள்ளார். தமிழிலும் ஆங்கிலத்திலும் அப்பேட்டிகள் நூலாக்கம் பெற்றுள்ளன (1998),

## அக்னி அறக்கட்டளை

திருமதி. சிவசங்கரி, திரு. மாலன் ஆகியோரால் 1986–இல் அக்னி அறக்கட்டளை என்கிற நிறுவனம் நிறுவப்பெற்றது. 'Awakened Group for National Integration' என்ற அமைப்புச் சுருக்கமாக 'அக்னி' (AGNI) என்று அழைக்கப் பெறுகிறது. தனி நபரின் விழிப்புணர்வு மூலம் சமுதாயத்தை மேம்படுத்த முடியும் என்பதில் 'அக்னி' பெரும் நம்பிக்கை கொண்டு இயங்கி வருகிறது. சமுதாயத்தின் பலதரப்பெற்ற நடைமுறைகள் பற்றிய விழிப்புணர்வு ஏற்படுத்துதல், மக்களிடையே சரியான மதிப்பீடு, நேர்மையான நோக்கு, நாட்டுப் பற்று, விழிப்புணர்வு போன்றவைகளை வளப்படுத்த கூட்டம், கலந்துரையாடல், திட்டமிட்டக் கருத்தரங்குகள் போன்றவற்றை அக்னி அறக்கட்டளை நடத்திச் சாதனை படைத்துவருகிறது.

'போதை மருந்தினை மறுப்போம்', என்ற தலைப்பில் 1987–இல் ஒரே ஒரு தரம், என்ற படத்தினை எடுத்து, போதை மருந்தின் விளைவு குறித்த விழிப்புணர்வை அக்னி ஏற்படுத்தியுள்ளது. படம் எடுப்பதில் புகழ்பெற்ற பெல் என்ற நிறுவனம் மேற்கண்ட படத்தினை நூறு பிரதிகள் எடுத்துக்கொடுத்து உதவியது. மது அடிமைகளுக்கு மறுவாழ்விற்கான வழிமுறைகள் அக்னி அறக்கட்டளையின் வழி மேற்கொள்ளப் பெறுகிறது.

சமூகப்பணியுடன் இலக்கியப் பணியும் ஆற்றி வருவது கருதத்தக்கதாகும். சிறந்த இலக்கியப் படைப்பாளர்களைக் கண்டறிந்து பாராட்டுவதும் அக்னியின் செயல்பாடாகும். கணையாழி இலக்கியப் பத்திரிகையுடன் சேர்ந்து கதைப்போட்டி நிகழ்த்தி, பத்துப் பேர்களுக்கு ரூபாய் ஐயாயிரம் ரொக்கப் பரிசை வழங்கியுள்ளது. சுபமங்களா இதழுடன் சேர்ந்து கதைப் போட்டிகள் நிகழ்த்தி ரூபாய் பதிமூன்றாயிரம் ரொக்கப் பரிசு வழங்கியமை குறிப்பிடத்தக்கதாகும். சிறந்த படைப்பாளர்களைச் சிறப்பிக்கும் வகையில் அட்சரா விருது வழங்கப்பெறுகிறது.

## சாதனைக்குப் பல பதவிகள்

போதை மருந்திற்கு அடிமையாவதைத் தடுக்க ஏற்படுத்தப் பெற்ற தேசிய உயர் மட்டக்குழுவில் சிவசங்கரி உறுப்பினராக விளங்குகிறார். மத்தியத் திரைப்படத் தணிக்கைக் குழுவில் உறுப்பினராய் பணியாற்றுகிறார். சென்னை வானொலியில் ஆலோசனைக் குழுவில் அங்கம் வகிப்பதுடன் பாண்டிச்சேரி கலாச்சார இலாக்காவில் உயர்மட்டக் குழுவிலும் அங்கம் வகிக்கிறார். அப்போலோ மருத்துவமனையில் இயங்கிவரும் 'அடாப்ட்' என்ற மையத்தின் உயர் ஆலோசனைக் குழுவின் உறுப்பினராகவும் செயலாற்றியுள்ளார். பாரதிதாசன் பல்கலைக்கழகம், காந்தி கிராம கிராமியப் பல்கலைக்கழகம், கோவை அவினாசிலிங்கம் மனையியல் பல்கலைக்கழகம் போன்ற பல்கலைக் கழகங்களில் ஆட்சிப் பேரவை மற்றும் பாடத் திட்டக் குழு உறுப்பினராக இருந்தவர். மத்திய சாகித்ய அகாடமியின் ஆலோசனைக் குழுவில் இடம் பெற்றுள்ளார். மாஸ்கோவில் நடைபெற்ற உலக மகளிர் மாநாட்டில் பங்கு பெற்ற சிறப்பும் சிவசங்கரிக்கு உண்டு.

## முடிவுரை

சமுதாயச் சூழலைத் திறனாய்வு செய்து அவற்றைப் படைப்பாளர்கள் இலக்கியங்களில் பதிவு செய்கின்றனர். சமுதாயச் சிக்கல்கள் பலவற்றை வெளிப்படுத்தும் ஊடகங்களில் நாவல் இலக்கிய வகைக்குச் சிறப்பான இடம் உண்டு. அவ்வகை நாவல்கள் சமகாலச் சான்றாகவும் அமையும். சமகாலத்தின் புற இயல்பை மட்டும் காட்டாமல் அகவியல்பைக் காட்டும் பதிவுகளாக அச்சான்றுகள் விளங்குகின்றன. இவ்வகை இயல்புகள் சமகால இலக்கியங்களுக்கு இருப்பதால் அவைகள் பிற்காலத்தில் செம்மைசார் நாவலாக (Classical Novel) மாறுகின்றன.

படைப்பாளரின் வாழ்க்கை அனுபவமும் அவரின் எழுத்துக்கான மூலவித்தைத் தருகிறது. சமூகச் சூழல் பதிவுகளுடன் அனுபவப் பதிவுகளும் அவர்தம் படைப்பாக்கத்தில் இடம் பெறுவது இயல்பாகும்.

சமுதாயத்தை நேசிப்பவராக சிவசங்கரி இருக்கிறார். சமுதாயத்தில் அவரைப் பாதிக்கிற செய்திகளை மற்றவர்களிடம் பகிர்ந்து கொள்வதற்காக எழுத்தைக் கருவியாகப் பயன்படுத்துவதாகக் கருத்துத் தெரிவிக்கிறார்.

‘அவர்கள் பேசட்டும் (1969)’ என்கிற சிறுகதை கல்கியிலும், ‘எதற்காக (1970)’ என்ற முழுநாவல் ஆனந்த விகடனிலும் முதன்முதலாக வெளிவந்தன. பண்பாட்டுப் போர்வைக்குள் பெண்ணை அடக்கிவிடாமல் எழுத்துலகில் பிரபலமானவராக்க ஒத்துழைத்த சந்திரசேகரனின் பண்பு சிவசங்கரியின் எழுத்துலக நுழைவிற்கு எளிதாக வழிவகுத்தது. கணவரின் இறப்பிற்குப் பிறகு ஏற்பட்ட வேதனை, சிவசங்கரியை முழுநேர எழுத்தாளராக மாற்றியது.

வாழ்க்கை, சமூகம் தரும் படிப்புகளைப் பகிர்ந்து இலக்கியத்தில் வடித்தெழுதுவதில் திறன் பெற்றவர். வாழ்க்கைச் சூழலைக் களஆய்வுக் கண்ணோட்டத்தில் மனதில் பதிவு செய்து, பின் இலக்கியத்தில் பதிவு செய்வது அவரின் இயல்பாகும்.

சிறுகதைத் தொகுப்புகள், நாவல்கள், பயணக்கட்டுரைகள், கட்டுரைத் தொகுப்புகள், வாழ்க்கை வரலாறுகள் போன்ற பலவகை எழுத்துக்களில் சாதனை படைத்துள்ளார்.

‘கலை கலைக்காகவே’, ‘கலை வாழ்க்கைக்காகவே’ என்கிற பாகுபாடு தேவையில்லை என்பது சிவசங்கரியின் கருத்தாகும். கலை என்பதை வாழ்க்கையின் ஓர் அம்சம் என்கிற நிலையில் இரண்டும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவை என்பது சிவசங்கரியின் கருத்தாகும்.

சிவசங்கரி, தன் எழுத்துக்கள் அறிவு ஜீவிகளுக்கு இல்லை, சாதாரண மக்களுக்குத்தான் என் எழுத்துக்களைக் கொண்டு செல்ல விரும்புகிறேன் எனக் கூறுகிறார். தன்னை மற்றவர்கள் அறிவுசார்ந்தவர் (Intellectual) என்று புகழ்வதைவிட ‘நடைமுறை புத்திசாலி’ என்று கூறப் பெறுவதையே பெரிதும் விரும்புகிறார்.

சூழ்நிலை மாற்றத்தைப் புரிந்து கொண்டு அதனைச் சாதாரண மக்களுக்குக் கொண்டு சென்று, அவர்களுக்குப் புரியவைப்பதுதான் தம் எழுத்தின் நோக்கம் என்கிறார்.

எழுத்துக்கள் தெளிவாக இருக்கவேண்டும். இந்நிலைக்கு மகாகவி பாரதியாரின் ‘கூடியவரை பேசுவது போல எழுதுவதுதான் உத்தமம் என்கிற சிந்தனை உடையவர். இஃது அவர் எழுத்தின் நடைக்கொள்கையாகும். குறிப்பாகத் தெளிவுடன் இயல்புத் தன்மை இருக்க வேண்டும், என்பதிலும் உறுதியாக இருக்கிறார். ‘எழுத்தாளர் வேடம் அணியாமல் இயல்பாக இருக்க வேண்டும்’ என்றும் விரும்புகிறார்.

எழுத்தாளர்களை ஆண் எழுத்தாளர் – பெண் எழுத்தாளர் என்று பாகுபடுத்திப் பார்க்கக்கூடாது என்பதை வலியுறுத்துவதுடன்,எழுத்தாளர்கள் இந்தப் பாகுபாட்டைத் தாண்டி மனித நேயங்களுக்கும் உரிமைகளுக்கும் குரல் கொடுப்பதைத் தலையாயக் கடமையாகக் கொள்ள வேண்டும் என்பதில் உறுதியான கருத்துடையவர்.

சிவசங்கரியின் எழுத்தின் பலம், மிக அழகாக உணர்ச்சிகளை வடித்தெடுப்பதில் இருப்பதாக் கருதுகின்றனர். எழுத்துக்களில் படிப்பவர்களை இலயிக்கச் செய்து சிந்திக்க வைக்கிறார் என்பதும் கருதத்தக்கதாகும். இவருடைய கட்டுரைகள் இலக்கியத் தரம் மிகுந்தவை, என்றென்றும் பாதுகாக்கப்பெற வேண்டியவை, என்று விமர்சகர்கள் கருத்துத் தெரிவிக்கிறார்கள். மெல்லிய உணர்வுகள், சமுதாயப் பிரச்சினைகளை எழுதிப் படிப்போரிடம் பாதிப்பை உண்டு பண்ணச் செய்வதாய் இவரின்

எழுத்துக்கள் உள்ளன. 'புதுமை எழுத்துச் செல்வி' என்ற சிறப்பை எழுத்துக்களின் வழி பெற்றவர் சிவசங்கரி. விமர்சனம் பூச்செண்டாக இருந்தாலும், செங்கற்களாக இருந்தாலும், ஏற்றுக் கொள்வதில் தனக்கு உடன்பாடு என்ற நிலையில் விமர்சனத்தை ஏற்றுக் கொள்ளக் கூடியவர். எழுத்தாளர் ஆண் – பெண் அல்லது புகழ் பெற்றவரா, அல்லது வியாபாரப் பத்திரிக்கையில் எழுதுபவரா என்பது போன்ற அளவுகோலைக் கொண்டு எழுத்தாளர்களை மதிப்பிடக்கூடாது. எழுத்தாளர் தரத்தையே விமர்சனம் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும் என்று விரும்புகிறவர்.

பரிசுகள், பாராட்டுகள் அவரின் எழுத்துச் சாதனைகளுக்குக் கிடைத்த அங்கீகரிப்பு ஆகும். நாவல்களின் வழி, குடும்பம், சமூகம் போன்ற தளங்களில் நல்ல விழிப்புணர்ச்சியூட்டும் இவரது எழுத்துக்கள் குறிக்கத்தக்கவை. நடுத்தரப் பெண்கள் சமூகத்தில் இவரது குடும்பம் சார்ந்த நாவல்கள் நல்ல பாதிப்பைத் தோற்றுவித்துள்ளன. மாறிவரும் குடும்பவியல், சமூகவியல் சிந்தனைகளைச் சாதாரண மக்கள் எதிர்கொள்கிற நிலைக்கு இவர் எழுத்துக்கள் பயன்படுகின்றன.

எழுத்துக்களின் வழியல்லாமல் சமூகத்திற்குத் தனிப்பட்ட நிலையில் பணியாற்றி வருபவர், போதை மருந்தின் விளைவுகள், முதியோர் பிரச்சினைகள் குறித்துச் சமூகத்தில் விழிப்புணர்ச்சியூட்ட பல நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளார்.

இவரது நாவல்கள் திரைப்படமாக்கப் பெற்றுள்ளன. தமது சொந்தக் குரலில் சிறுவர்களுக்கான கதைகளை ஒலி நாடாக்கள் மூலம் முதன்முதலில் கொண்டு வந்த எழுத்தாளர் ஆவார். சமுதாயத்தில் நிலவும் பலதரப்பட்ட செய்திகளை 'நேற்று இன்று நாளை' என்ற தொடராகத் தொலைக் காட்சியில் நடத்திக் காட்டிப் பாராட்டுப் பெற்றவர்.

மறைந்த முன்னாள் பிரதமர்கள் திருமதி. இந்திரா காந்தி, திரு. ராஜீவ் காந்தி, நோபல் பரிசு பெற்ற அன்னை தெரஸா ஆகியோரைச் சந்தித்துப் பேட்டி கண்ட பெருமையாளர். அவர்கள் வாழ்வில் தொடர்புபெற்ற சுவையான நிகழ்ச்சிகளைப் பேட்டிகளின் வழி கொடுத்துள்ளார். திரு. ராஜீவ் காந்தியுடன் இரு முறை வெளிநாடுகளுக்கு உடன் சென்று பயணக் கட்டுரைகள் எழுதியிருக்கிறார். அக்கட்டுரை நூல் பொதுமக்களின் பாராட்டுதல்களைப் பெற்றதுடன் ஜப்பான் மொழியிலும் மொழியாக்கம் பெற்றமை கருதத்தக்கது.

அங்கீகரிக்கப் பெற்ற பதினெட்டு இந்திய மொழிகளில் தலை சிறந்த எழுத்தாளர்களைப் பேட்டி கண்டு 'மொழிகளின் மூலம் இந்திய இணைப்பு' என்ற தலைப்பில் சிந்திக்கச் செய்தவர்.

இவர் தோற்றுவித்த அக்னி அறக்கட்டளை (1986) சமுதாய மேம்பாட்டை நோக்கமாகக் கொண்டது. சமூகப்பணியுடன் சிறந்த எழுத்தாளர்களை ஊக்குவிப்பதையும் நோக்கமாகக் கொண்டு அறக்கட்டளை தொடங்கப் பெற்றது. 'Awakened Group for National Integration' என்பதே சுருக்கமாக அக்னி (AGNI) என்றழைக்கப் பெற்றது. தேசிய நிலையிலும், மாநில அளவிலும் பல உயர்மட்டக் குழுவில் இருந்து சமுதாய மேம்பாட்டிற்கான சிந்தனைகளை ஒலித்து வருகிறார், பல பல்கலைக்கழகங்களில் ஆலோசனைக்குழு உறுப்பினராகச் செயல்பட்டு, கல்வி மேம்பாட்டுச் சிந்தனைகளுக்கு வளம் சேர்த்துள்ளார். மத்திய அரசின் சாகித்ய அகாடமி ஆலோசகர் குழுவிலும் இடம் பெற்றுள்ளார்.

※ ※ ※ ※ ※

# சான்றாதாரங்கள்

1. கா. சிவத்தம்பி, நாவலும் வாழ்க்கையும், ப,20.

2. "The Classic Novels make the past familiar to us; that is one reason why we read them. But since we are living in the present immersed in it, it is exceedingly likely that we do not recognise its real nature, any more than we can see ourselves except in a mirror.

3. Contemporary novels are the mirror of the age, but a very special kind of mirror, a mirror that reflects not merely the external features of the age, but also its innerface, it's nervous system, the coursing of its blood and unconscious promotings and conflicts which is "Swayil"

   - Walter Allen P, Reading a Novel

4. சி.இ. மறைமலை, இலக்கியமும் சமூகவியலும், ப,6.

5. வெ. கனகசுந்தரம், ஜெகசிற்பியனின் சமூகப் புதினங்கள், ப,9.

6. சி.இ. மறைமலை, இலக்கியமும் சமூகவியலும், ப,28.

7. காண்க : பின்னிணைப்பு – சிவசங்கரியுடன் வினா வழித் தொடர்பு.

8. காண்க : பின்னிணைப்பு – சிவசங்கரியுடன் வினா வழித் தொடர்பு மூலம் பெற்ற செய்தி.

9. மேலது.

10. மேலது.

11. இளையபாரதி (தொ.ஆ), கலைஞர் முதல் கலாப்பிரியா வரை, (பேட்டிகளின் தொகுப்பு நூல்), ப,278-288.

12. மேலது.

13. காண்க : பின்னிணைப்பு – சிவசங்கரியுடன் வினா வழித் தொடர்பு மூலம் பெற்ற செய்திகள்.

14. எஸ். சௌரிராஜன், சிவசங்கரி நாவல்களில் பெண்கள் (வெளியிடப் பெறாத எம்.ஃபில் பட்ட ஆய்வேடு, தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 1991), வினாப்பட்டியல் செய்தி.

15. சிவசங்கரி, டிரங்கால் (சி.க. தொகுப்பு), அணிந்துரை.

16. சிவசங்கரி, தினமணிச்சுடர், பிப்ரவரி 5, 1994.

17. சிவசங்கரி, சில மனிதர்கள் சில அனுபவங்கள், ப,250.

18. சிவசங்கரி, 'அவன்' என் குறிப்பு, 1986.

19. சிவசங்கரி, 'அம்மா ப்ளீஸ் எனக்காக' என்னுரை.

20. பின்னிணைப்பில் அட்டவணைப்படுத்திக் காட்டப்பெற்றுள்ளன.

21. காண்க : பின்னிணைப்பு – சிவசங்கரியுடன் வினா வழித் தொடர்பு மூலம் பெற்ற செய்திகள்.

22. இளையபாரதி (தொ.ஆ), கலைஞர் முதல் கலாப்பிரியா வரை, (பேட்டிகளின் தொகுப்பு நூல்), ப,278-288.

23. எஸ். சௌரிராஜன், சிவசங்கரி நாவல்களில் பெண்கள் (வெளியிடப் பெறாத எம்.ஃபில் பட்ட ஆய்வேடு, தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 1991), வினாப்பட்டியல் செய்தி.

24. சிவசங்கரி, டிரங்கால் (சி. தொ.), முன்னுரை.

25. சிவசங்கரி, அவர்கள் பேசட்டும் (சி. தொ.), என்னுரை.

26. சிவசங்கரி, புதிய கோணங்கள், ப,116.

27. சிவசங்கரி, அவர்கள் பேசட்டும் (சி. தொ.), முன்னுரை.

28. சிவசங்கரி, காத்திருக்கிறேன், ஜெயகாந்தன் முன்னுரை, ப,6.

29. சிவசங்கரி, புதுமையான அனுபவங்கள், சாவியின் முன்னுரை, ப,6

30. மேலது.

31. சிவசங்கரி, சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது, ப,10.

32. சிவசங்கரி, காற்றுள்ளபோதே, தரமும் சிறப்பும், அ. இராமநாதன் முன்னுரை.

33. சிவசங்கரி, 47 நாட்கள், வானதி திருநாவுக்கரசு பதிப்புரை.

34. சிவசங்கரி, அவர்கள் பேசட்டும் (சி. தொ.), முன்னுரை.

35. சிவசங்கரி, கொஞ்சம் யோசிக்கலாமே, ப,64.

36. தி.சு. நடராசன், பெண்கள் படைப்பில் பெண், ப,102.

37. காண்க : பின்னிணைப்பு – சிவசங்கரியுடன் வினா வழித் தொடர்பு மூலம் பெற்ற செய்திகள்.

ஃஃஃ

# 3. குடும்பமும் உறவும்

ஆய்வுப் பொருள் சிவசங்கரியின் நாவல்களில் 'குடும்ப உறவுகள்' என்பதாகும். படைப்பிலக்கியத்தை ஆராய்வோர் முதலில் படைப்பாளரின் வாழ்வியல் சூழலை அறிதல் வேண்டும். அம்முறையில் முதல் இயல் படைப்பாளரின் வாழ்வியல் சூழலை விளக்குவதாக அமைந்தது. நாவல் படைப்புக்களில் இடம் பெறும் குடும்பம் மற்றும் உறவுகள் குறித்து ஆராய்வதற்கு, அவைகளைக் குறித்த வரைவிலக்கணங்களைச் சுருக்கமாக விளக்கும் வகையில் இவ்வியல் அமைகிறது.

## சமூகமும் குடும்பமும்

மனிதன் தனது உணர்ச்சிகளையும் ஆசைகளையும் கட்டுப்படுத்திக் கொண்டு பிறருடைய உணர்ச்சிகளையும் புரிந்துகொள்ள முயன்றபொழுது சமுதாயம் தோன்றுகிறது என்று கூறுவர். இந்நிலையில் பிறர்க்காக வாழும் பொழுது கூடிவாழ்தல் என்கிற குழு உணர்வு இடம் பெற்றுள்ளது. குழு வாழ்க்கையில் கட்டுப்பாடுகள் வரன்முறைகள் போன்றவை காலப்போக்கில் உருவாக்கப் பெற்றன.

வரன்முறையற்ற பாலுணர்விலிருந்து விடுபட்டு, வரன்முறையான பாலுறவிற்குள் வாழத்தலைப்பட்டனர். இச்சூழலில்தான் 'குடும்பம்' என்ற அமைப்புத் தோற்றம் பெற்றது. குடும்ப வாழ்க்கை, குழு வாழ்க்கை பல படி நிலைகளில் வளர்ச்சி பெற்று நாகரிகமுள்ள, பண்பாட்டுக்களம் பொருந்திய சமுதாயம் உருவாகியது.

சமூகஆய்வியல் சமூக ஆய்வின் அடிப்படை அலகான குடும்பத்திலி-ருந்துதான் தொடங்குகிறது. அவ்வகை ஆய்விற்கு இலக்கியங்கள் துணை நிற்கின்றன. இலக்கியத்திற்கும் சமூகத்திற்கும் நெருங்கியத் தொடர்பு உண்டு. அவ்வகையில் சமூகத்தின் அடிப்படைக் கூறான குடும்பம் மற்றும் உறவுகளில் ஏற்படும் சிக்கல்களும் தீர்வுகளும் படைப்பாளரிடம் பதிவு பெறுகின்றன. அப்பதிவுகள் அவர்கள் படைக்கும் இலக்கியங்களில் வெளிப்படுகின்றன.

## குடும்ப நிறுவனத்தின் தொன்மை

உலகில் மனித சமூகம் நீண்ட பரிணாம வரலாற்றைக் கொண்டது. அம் மனிதச் சமூகத்தின் தொன்மையான நிறுவனங்களுள் (Institution) குடும்பமும் ஒன்று.

> "எந்தவோர் இனக்குழுவியல் பகுதியிலும் (Ethnographic Area) குடும்ப அமைப்பு இடம் பெறாமல் இல்லை. எனவே, குடும்பம் என்னும் அமைப்பே படிமலர்ச்சி காலத்தில் தோன்றிய குலம் (Clan) போன்ற அமைப்புகளைக் காட்டிலும் உலகளாவிய நிலையிலும் சமுதாயவியல் நிலையிலும் தோன்றி முக்கியத்துவம் பெற்று அழியா நிலையில் உள்ளது"[1]

என்பது மாலினோஸ்கியின் கருத்தாகும். இக்கருத்திலிருந்து மனித சமூகத்தின் எல்லாக் குழுக்களிலும் குடும்பம் இடம் பெற்றிருப்பதை உணரலாம். மேலும் தொன்மையான காலத்தில் தோற்றம் பெற்ற குடும்பம் அனைத்துச் சமூகங்களிலும் அழியா இடம் பெற்றுள்ளது.

## குடும்பம் - அழியா அமைப்பு

> "குடும்பம் பழமையானது, மற்றும் மனித சமூகத்திற்குரிய நிறுவனமாக விளங்குகிறது. வரலாற்றுக் காலத்துக்கு முன்பிருந்தே நிலவி வருகின்ற குடும்பம் என்கின்ற அமைப்பு, சமூகத்தின் வளர்ச்சிக்குத் துணையாய் இருந்து வந்திருக்கிறது. மக்கள் குடும்பத்தின் வழி வளர்கிறார்கள். அவரவர்களுக்குச் சொந்தமான குடும்பத்தை நிறுவுகிறார்கள்"[2].

இவ்வாறு ஒவ்வொரு மனிதரும் வளர்ச்சி பெறுவதற்குக் குடும்பம் காரணமாக உள்ளது. வளர்ச்சி பெற்றவர் மறுபடியும் குடும்பத்தைத் தோற்றுவிக்கிறார். இச்சுழற்சி முறையினால் தொன்மைக் காலத்திலிருந்தே குடும்பம் அழியாத அமைப்பாகச் சமூகத்தில் இடம் பெற்று வந்துள்ளது.

மனிதன் தனித்து நின்று செயல்படுவது இயல்பில்லை. அவன் தன் வாழ்க்கையில் பல்வேறு குழுக்களுடன் தொடர்பு கொண்டு செயல்பட

வேண்டியவனாக உள்ளான். அத்தகு குழுக்களுள் முதன்மையானது குடும்பமாகும்.

> "குடும்பத்தில்தான் அவனுடைய வாழ்க்கையின் பெரும்பகுதி அமைகிறது. பிறப்பிலிருந்து இறப்புவரை அவன் இக்குழுவோடு பிணைப்பு வைத்திருக்கிறான். அவனுடைய உடல், உள்ளத் தேவைகளைப் பெரிதும் நிறைவேற்றி அவனுடைய வாழ்க்கையை அமைத்துக் கொடுப்பது குடும்பமே"[3]

இந்நிலையில் மனிதனின் உடல் மற்றும் உள்ளத் தேவைகளுக்குக் குடும்பம் காரணியாக உள்ளது. இக்காரணியால்தான் குடும்பம் என்கிற அமைப்பு எல்லாப் பண்பாடுகளிலும் அழியாத அமைப்பாக இருந்து வந்துள்ளது.

## குடும்ப உருவாக்கம்

குடும்ப உருவாக்கம் பல படிநிலைகளை உடையது. குடும்ப உருவாக்கத்திற்குச் சமூகம் அங்கீகாரம் தருதல் வேண்டும். இவ்வங்கீகாரத்தைப் பெறுவதற்குச் சில விதிமுறைகள் உண்டு. இவ்விதிமுறைகள் சமூதாய மரபுகள், குழு மரபுகள், பழக்க வழக்கங்கள் போன்ற பண்பாட்டுக் கூறுகளுடன் தொடர்பு உடையன. இத்தொடர்புகளின் விளைவால் முற்குறிப்பிடப்பெற்ற விதிமுறைகள் எல்லாச் சமூகத்தாரிடமும் ஒன்று போல இருப்பதற்கான வாய்ப்பைப் பெறவில்லை.

> "குடும்பம் என்னும் அமைப்பானது ஓர் ஆணும் பெண்ணும் அவர்களது சமுதாய மரபுப்படி மணவாழ்வில் ஈடுபடும் நிலையால் மட்டுமே தோன்ற முடியும். அவ்வாறு இணைந்தால் தான் அச்சமுதாயத்தில் அவர்கள் குடும்பமாக ஏற்றுக் கொள்ளப்படுவார்கள்."[4]

இக்கருத்தின் வழி குடும்பம் என்னும் அங்கீகாரம் அந்தந்தச் சமுதாயத்தின் அகவயக் கருத்தாக்கத்தின் (Emic Concept) வழி அளிக்கப் பெறுவதை உணரலாம்.

"குடும்பம் (Family) என்கிற சிறிய குழுவில் ஓர் ஆணும் பெண்ணும் குறைந்த அளவு உறுப்பினராக இருக்க வேண்டும். இந்நிலையில் ஆணும் பெண்ணும் கணவன் – மனைவி என்ற ஓர் உறவு நிலையை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்."[5]

இச்சூழலில்தான் குடும்ப அமைப்பின் உருவாக்கம் நிகழ்கிறது. எனவே குடும்ப அமைப்பில் மணவாழ்க்கை உறவு முதன்மையானதாக உள்ளது.

## குடும்ப உருவாக்கத்தின் வளர்ச்சி நிலைகள்

குடும்ப உருவாக்கத்தின் வளர்ச்சி நிலைகளை நான்கு வகைகளில் பகுக்கலாம் –

1. திருமணத்திற்கு முந்தைய நிலை (Formative Prenuptial Stage)
2. மண நிலை (Nuptial Stage)
3. குழந்தை வளர்ப்பு நிலை (Child Rearing Stage)
4. முதிர்ச்சி நிலை (Maturity Stage)

## 1. திருமணத்திற்கு முந்தைய நிலை

திருமண வாழ்விற்கு முன்னரே ஒருவரையொருவர் புரிந்து கொள்ளுதல் திருமணத்திற்கு முந்தைய நிலையாகும். இந்நிலையில் காதலை இணைத்துப் பார்க்கலாம். ஒருவனும் ஒருத்தியும் தாமே எதிர்ப்பட்டு அன்பு கொண்டு பின் மணம் செய்யும் முறையில் குடும்பம் இயல்பூக்கங்களில் (Instinct) அடிப்படையில் எழுவதாகக் கொள்ளலாம்.

"அடிப்படையில் காதல் ஈடுபாடு என்பது ஒருவரை மற்றொருவரிடம் உண்மையாகவும் நேர்மையாகவும் ஈடுபாடு கொள்ளச் செய்யும் கட்டுப்பாடற்ற உணர்ச்சி ஆகும்"[6]

என்று குறிப்பிடுவர். பொதுவாகக் காதல் மன ஒன்றிப்பில் தோற்றம் பெற்று உடல் ஒன்றிப்பில் முடிவடைகிறது. காதல் சமூக அங்கீகரிப்பைப் பெறுகிற போது நிறைவேறும் காதலாகிறது. சமூக அங்கீகரிப்பில் தடைகள் தோன்றும் பொழுது காதல் நிறைவேறாத காதலாகிறது. அங்கீகரிப்பும் தடைகளும்

ஒவ்வொரு சமுதாயத்தின் மரபுகள் மற்றும் பழக்க வழக்கங்கள் போன்றவைகளோடு தொடர்புடையன.

## 2. திருமண நிலை

திருமணமென்பது சமுதாய ஒப்பந்தமெனலாம்.

"இந்துக்களின் திருமணம் புனிதமானது. அறம், இனவிருத்தி, முதலியவற்றை நிறைவு செய்வதன் அடிப்படையில் நிகழ்வது"[7]

என்று கூறுவர்.

"திருமணம் ஆணையும் பெண்ணையும் இணைக்கிறது. மேலும் இருவருக்கும் சம உரிமைகளையும் சில கடமைகளையும் அமைத்துக் கொடுக்கிறது"[8]

என்று சமூகவியலறிஞர்கள் குறிப்பிடுவர்.

திருமணம் என்னும் நிறுவனம் உலகில் உள்ள மக்களால் ஏற்கப் பெற்று, அதற்குத் தேவையான சில விதிகளையும் வகுத்துள்ளது.

"பெரும்பாலும் அவ்விதிகள் விலக்குதல் (Prohibitions), முன்னுரிமை (Preference), விதியமைப்பு (Prescription) என மூவகைப்படும்"[9]

பாலியல் உறவு கொள்வதில் தாய், சகோதரி தவிர்க்கப்படுதல் விலக்குதலாகும். தம் இனத்துப் பெண்களைத் திருமணம் செய்வதில் முன்னுரிமை அமையும். அத்தை மகள், மாமன் மகள் ஆகியோரைத் திருமணம் செய்வதில் முன்னுரிமை அமையலாம். தேர்ந்தெடுக்கப் பெற்ற மணமகன் / மணமகள் அடிப்படையில் திருமண வாழ்க்கை அமையும். சமூகத்தின் வளர்ச்சி நிலைகளுக்கேற்ப விதிகளிலும் வளர்ச்சி நிலைகள் இடம்பெறும்.

## திருமணத்தின் வகைகள்

*திருமணத்தை இருவகைகளில் பகுத்துப் பார்க்கலாம் –*




## மரபுத் திருமணம்

*தாய் – தந்தையரே பிள்ளைகளின் திருமணத்தைப் பேசி முடித்து நடத்துவது இவ்வகையில் அடங்கும். சுருங்கக் கூறின், தாய் – தந்தையரின் இசைவுடன் நடக்கும் திருமணம் ஆகும்.*

## மரபு மீறிய திருமணம்

*ஓர் ஆணும், ஓர் பெண்ணும் காதலித்துத் திருமணம் செய்து கொள்ளும் முறை இவ்வகையில் அடங்கும். தாய் தந்தையரின் இசைவின்றியும் நடக்கலாம்; இசைவுடனும் நடக்கலாம்.*

## முதல் மணமும் மறுமணமும்

*முற்குறிப்பிட்ட இருவகைகளிலும் முதல் மணம் நடக்கலாம். கணவன் அல்லது மனைவி இறந்துபடின் மறுமணம் செய்யலாம். மறுமணம் முற்குறிப்பிட்ட இருவகைகளிலும் இடம் பெறும். கணவன் இறப்பின் பெண்ணும் மறுமணம் செய்யலாம். சமூக விதிமுறைகளுக்குட்பட்டதாக இவ்வகைத் திருமணங்கள் அமைகின்றன.*

## திருமண விதிகள்

*சமூகத்தில் சமயத்தின் ஆட்சியும் இடம் பெற்றிருப்பதை வரலாறு உணர்த்துகிறது. பழம் சமயத்தைச் சார்ந்த பழக்க வழக்கங்கள் திருமணத்தில் நெருக்கமாகத் தொடர்பு பெற்றுள்ளன. இச்சூழலில் பெண்களுக்குப் பல உரிமைகள் மறுக்கப்பட்டிருந்தன. பெண்களுக்குத் திருமணமென்பது*

தெய்வீகச் சடங்கோடு தொடர்பு பெற்றிருந்தது. இந்நிலை சமூக விழிப்புணர்வின் காரணமாக அண்மைக் காலங்களில் மாறி வருகிறது.

அரசும் புதுப்புது சட்ட விதிகளை ஏற்படுத்திப் பெண்களுக்கு உரிமைகள் பலவற்றை வழங்கியிருக்கிறது.

> "1954–ஆம் ஆண்டு தனித் திருமணச் சட்டம் நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டது. இச்சட்டம் இனவேறுபாடின்றி மணமக்களே தத்தமக்குரியோரைத் தேர்ந்தெடுக்கலாம் என்ற உரிமையளிக்கிறது. 1956–ஆம் ஆண்டு இந்து பரம்பரைச் சட்டம் (Hindu Succession Act) மேற்கூறிய முறையில் மணந்தோர்க்கும் சொத்துரிமை உண்டு என்று வலியுறுத்துகிறது. மேலும் மணவிலக்கு (Divorce) உரிமையும் அளிக்கப்பட்டுள்ளது. பெண்களுக்கும் ஆண்களைப் போல மகவேற்பு (Adoption) உரிமை அளிக்கப்பட்டுள்ளது."[10]

இச்சட்ட விதிகள் திருமணம் என்பது தெய்வீகச் சடங்கு (Religious Secrement) என்ற கொள்கை தளர்ந்து திருமணம் சமுதாய ஒப்பந்தம் (Social Contract) என்ற கொள்கை வெகுவாகப் பரவி வருவதற்குத் துணை நிற்கின்றன.

## 3. குழந்தை வளர்ப்பு நிலை

இந்நிலை திருமண நிலைக்குப் பிந்தியதாகும். திருமண நிலையில் கணவன் மனைவியர் இன்ப துன்பங்களைப் பகிர்ந்து குழந்தைப் பேற்றினை விரும்புகின்றனர். எனவே கணவன் மனைவி என்ற நிலை குழந்தைப் பேற்றிற்குப் பிறகு தாய் தந்தையராக மாறுகிறது. குழந்தைகளை வளர்க்கும் கடமை பெற்றோர்க்குரியதாகும்.

> "குடும்பம் என்கிற சமூக அமைப்புக்கூறில் குழந்தைகள் பிறக்கிறார்கள். குழந்தைகளுக்குப் பாதுகாப்பும் பயிற்சியும் குடும்பத்தில் தரப்பெறுகிறது. குழந்தைப் பிறப்பிற்குப் பிறகு தாய் தந்தையர் கவனிப்பும் பல வருடங்களுக்குத் தேவைப்படுகிறது. குடும்ப வாழ்க்கையில்தான் குழந்தைகள் தங்கள் சமூகத்தில் இடம் பெறும் பண்பாடுகளைப் பற்றி அறிந்து கொள்கிறார்கள்"[11]

என்று சமூகவியல் அறிஞர்கள் குறிப்பிடுகின்ற கருத்தும் இங்கு சிந்திக்கத்தக்கதாகும்.

### 4. முதிர்ச்சி நிலை

குழந்தைகளை வளர்த்து அவைகள் தாங்களாகக் குடும்பம் அமைக்கிற தகுதிக்கு ஆளாக்கிய பின் முதிர்ச்சி நிலை அமையும். குழந்தையின்மை, கணவன்-மனைவி ஆகியோரில் ஒருவர் இறத்தல் போன்ற காரணங்களால் முதிர்ச்சி நிலை தொடராமலும் போகலாம்.

### குடும்பத்தின் வகைகள்

திருமண உறவின் அடிப்படையில் குடும்பம் அமைகிறபோது திருமண வாழ்க்கைக் குடும்பம் (Conjucal Family) தோற்றம் பெறுகிறது. குடும்பம் இருவகைப்படும் –

1. தனிக்குடும்பம் (Nuclear Family)
2. கூட்டுக்குடும்பம் (Joint Family)

### தனிக்குடும்பம்

கணவன் மனைவியை உறுப்பினராகக் கொண்டு அமையும் குடும்பம் தனிக்குடும்பமாகும். நாகரிகமடைந்த அண்மைக்காலச் சமூகத்தில் பெரும்பாலும் தனிக்குடும்ப நிலையே நிலவுகிறது. தற்காலத்தில் விஞ்ஞான கண்டுபிடிப்புகளும் சமூகப் போக்கில் ஏற்பட்ட பெரும் மாற்றங்களும் குடும்பத்திற்குரிய கடமைகள் பலவற்றைப் பிரித்துவிட்டதாகக் கருதவியலும். எ.டு. "பொருள் உற்பத்தி, உற்பத்தி செய்த பொருட்களைப் பயன்படுத்துதல், கல்வி கற்பித்தல், சமய வழிபாடு பெரியோர்களைப் பராமரித்தல்" போன்றவைகளைக் குறிப்பிடலாம்.

> "நகரக் குடும்பங்களில் மேற்கூறியவைகள் பணத்தைக் கொடுத்து வாங்கும் நிலை ஏற்பட்டுள்ளது."[12]

அக்காலக் கூட்டுக் குடும்பங்களில் கடமைகளாக இருந்தவைகள் தற்காலத்தில் பிரிந்து விட்டன. நகரக் குடும்பங்கள் பெரும்பாலும் தனிக்குடும்பமாகவே

உள்ளன. கணவன்-மனைவி குழந்தைகள் போன்ற நிலையில் தனிக்குடும்பம் அமையும். கீழ்க்கண்ட வரைபடம் தனிக் குடும்பத்தின் விளக்கத்தைத் தெளிவாக்க உதவும்.




△ ஆண் ○ பெண் = திருமண உறவு

1 – கணவன்-மனைவி 2 – குழந்தைகள்

## கூட்டுக் குடும்பம்

தனிக் குடும்பத்தைச் சார்ந்த நெருக்கமான உறவினர்கள் சேர்ந்து வாழும் போது கூட்டுக் குடும்பம் பிறக்கிறது. தனிக் குடும்பத்தோடு தொடர்புடைய உறவினர்களை முதல்நிலை உறவினர்கள் (Primary Relatives) என்றும் இரண்டாம்நிலை உறவினர்கள் (Secondary Relatives) என்றும் வகைப்படுத்தலாம்.

கூட்டுக் குடும்பம் பெரும்பாலும் முதல்நிலை உறவினர்களுடன் அமையும். குடும்பத்தின் விரிவாக்கத்தில் பாட்டன், பாட்டி, பேரன், பேத்தி என்ற விரிவாக்கம் அமையலாம்.




## கூட்டுக் குடும்பம் - வரைபட விளக்கம்

1. முதல் பரம்பரை (பாட்டன், பாட்டி)

2. இரண்டாம் பரம்பரை (மகன்–மருமகள், மகள்–மருமகன்)

3. மூன்றாம் பரம்பரை (பேரன், பேத்தி – மகன் வழி, பேரன், பேத்தி – மகள் வழி)

கூட்டுக் குடும்பத்தின் தோற்றம் தொன்மையானது. இக்குடும்பத்தின் அடிப்படைத் தத்துவம் பின்வருமாறு அமையும் –

- பொது இருப்பிடம்
- பொது உணவு
- பொது வழிபாடு

இருப்பிடமும் உணவும் மனிதனின் அடிப்படைத் தேவைகளோடு தொடர்பு கொண்டவை. தம் குடும்ப உறுப்பினர் அனைவர்க்கும் அடிப்படைத் தேவை, தேவை என்கிற உணர்வு குழு மனப்பான்மையை வளர்க்கிறது. இம்மனப்பான்மையில் சமூகம் தோற்றம் பெற்றது. அக்காலச் சமூகத்தில் உழவுத் தொழில் சிறப்பிடம் பெற்றிருந்தது. மனிதனுடைய தேவைகளும் மிகுதியாக இல்லாமல் மன நிறைவுடன் இருந்தனர்.

பொதுத்தலைமைக்குள் இயங்கி வேலைகளைப் பகிர்ந்து (Division of Labour) வாழ்ந்தனர்.

## கூட்டுக் குடும்பத்தின் நன்மை தீமைகள்

கூட்டுக் குடும்பத்தில் இடம் பெறும் நன்மை தீமைகளை விளக்கமாகக் காணலாம்.

- மனித வாழ்க்கையின் ஒற்றுமைக்குக் கூட்டுக் குடும்பம் முன் மாதிரியாகத் திகழ்ந்தது.
- வயது வந்த குடும்ப உறுப்பினர்களைப் பாதுகாக்கும் பொறுப்புக் கூட்டுக் குடும்பத்தில் உண்டு.
- உடல் ஊனமுற்றோர், மூளை வளம் குன்றியோர், நோயுற்றோர் போன்றவர்களுக்கு அன்பும் அடைக்கலமும் கூட்டுக்குடும்பத்தில் வழங்க வாய்ப்பிருந்தது.
- கூட்டுக் குடும்பத்தில் விதவைக்குத் தக்க பாதுகாப்பு வழங்கப் பெற்றது.
- சமயக் கோட்பாடுகள் பழக்க வழக்கங்கள் போன்றவைகளை உறுப்பினர்களுக்கு வழங்கும் பயிற்சிக்களமாகக் குடும்பம் இருந்தது. நன்னடத்தை, குடும்பக் கடமைகள் குடும்ப உறுப்பினர்களுக்குக் கற்பிக்கப் பெற்றன.

மேற்குறித்தவைகள் கூட்டுக் குடும்பத்தினால் கிடைக்கப்பெற்ற நன்மைகளாகும்.

தற்காலத்தில் அறிவியல் வளர்ச்சி மேலோங்கி இருப்பதால் பழைய சமூக அமைப்பு வெகுவாக மாற்றங்கண்டுள்ளது. விவசாய யுகத்திலிருந்து மனித சமூகம் விடுபட்டு அசுரத்தனமான அறிவியல் யுகத்தில் ஆட்பட்டிருக்கிற நிலை மறுப்பதற்கில்லை. அறிவியல் யுகத்தில் விவசாய யுகத்தின் பாரம்பரிய மதிப்புகள், வரலாற்று மதிப்புகள் (Historical Values) இயங்குகிற நிலை கேள்விக்குறியாக உள்ளது.

மனிதன் தன் கல்வி, தொழில் இவற்றின் பொருட்டுத் தன் குடும்பத்தை விட்டு வெளியேறி வாழ வேண்டிய சூழ்நிலையில் உள்ளான். இச்சூழலில் கூட்டுக் குடும்பத்தில் இருப்பிற்கு வாய்ப்பில்லை. எனவே கூட்டுக் குடும்பத்தைச் சார்ந்த பரம்பரையான வாழ்வியல் மதிப்புகளுக்கு வரவேற்பும் எதிர்பார்ப்பும் இல்லாமல் போகிறது. கூட்டுக் குடும்ப அமைப்புச் சிதைந்து வருகின்ற நிலை, தற்கால நகர. வாசிகளிடம் இயல்பாக இருக்கிறது. கிராமத்தைச் சார்ந்த மக்கள் விவசாய யுகத்தின் பின்னணியில் இருப்பதால் ஓரளவு கூட்டுக் குடும்பம் அவர்களிடம் நிலை பெற்றிருப்பதாக மதிப்பிடலாம்.

கூட்டுக் குடும்பம் வரையறுத்த கடமையுணர்வின் செயல்பாடுகளைத் தற்காலத்து ‘சமதர்மக் கொள்கை’ சார்ந்த சமுதாயப் போக்கு (Sociolostic Pattern of Society) நிறைவேற்றுவதாகக் கொள்ளலாம்.

## தந்தைவழிக் குடும்பமும் தாய்வழிக் குடும்பமும்

தந்தைவழிக் குடும்பத்தில் ஆடவர்க்கும் தாய்வழிக் குடும்பத்தில் பெண்டிர்க்கும் சிறப்பிடம் இருக்கும். தந்தை வழிக் குடும்பத்தில் தந்தைவழி உறவினர்களும் தாய்வழிக் குடும்பத்தில் தாய்வழி உறவினர்களும் சிறப்பிடம் பெறுவார்கள்.

தொடக்கக் காலத்தில் தாய்வழிச் சமூக அமைப்பு இருந்தது. பிற்காலத்தில் அந்நிலை மாற்றம் கண்டது.

> “தந்தை வழிக் குடும்பம் ஏற்பட்ட பின்னரே ஆடவர்கள் தாங்கள் மணக்கும் பெண்கள் தூய்மையைக் காத்துக் கொண்டவர்களாக இருக்க வேண்டுமென விழையத் தலைப்பட்டனர். தாய்வழிச் சமூக முறை நிலவிய பொழுது வாலிபர்களைப் போன்றே இளம் பெண்களும் தம் விருப்பப்படித் தங்கு தடையின்றிக் காமக் கேளிக்கைகளில் ஈடுபட்டனர். ஆனால் மணத்திற்குப் புறம்பான சிற்றின்ப உறவுகள் கொள்வது நெறிகெட்ட நடத்தை என்று பெண்களுக்கு அறிவுறுத்தும் நிலை ஏற்பட்டதும் அவர்கள் தவறிழைப்பதைச் சமூகம் பொறுத்துக் கொள்வதற்கில்லை என்ற நிலை விளங்கியது”[13].

இந்நிலையில் 'கற்பு' என்கிற பண்பு பெண்களுக்கு வலியுறுத்தப் பெற்றது. தந்தை வழிக் குடும்பத்தில் ஆணாதிக்கம் இழையோடும் நிலை உருவாகியது. பெண்ணுரிமைகள் பல மறுக்கப் பெறும் நிலையும் தோற்றம் பெற்றது. இச்சூழலால் அண்மைக் காலத்தில் பெண்ணுரிமைகளுக்காகப் போராடும் (Feminism) நிலை உருவாகியது. ஒவ்வொரு போராட்டத்திற்குப் பின்னரும் அவற்றுக்கியைந்த சமூகப் பின் புலங்கள் உள்ளன. அச்சமூகப் பின்புலங்களுக்கென பாரம்பரிய வரலாறும் உண்டு.

## பிற குடும்ப வகைகள்

ஒருவன் - ஒருத்தி என்ற நிலையில் குடும்பம் அமைந்தால் அஃது ஒருதுணைக் குடும்பம் அல்லது ஒருதாரக் குடும்பம் ஆகும். ஒருவனுக்குப் பல மனைவியர் அல்லது ஒருத்திக்குப் பல கணவர் என்ற நிலையில் குடும்பம் உருவாகலாம். பெரும்பாலும் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாடே வளர்ந்த சமூகத்தில் இடம் பெறுவதாக மதிப்பிடலாம்.

திருமணவாழ்க்கைக்குப் பிறகு குடும்பம் தந்தையிடமிருந்தால் தந்தையகத்துக் குடும்பம் என்றும், தாயிடமிருந்தால் தாயகத்துக் குடும்பம் என்றும் வகைப்படுத்துவர். நிர்வாக நடைமுறையினைக் கொண்டு தந்தையாட்சிக் குடும்பம், தாயாட்சிக் குடும்பம், சமத்துவக் குடும்பம் என்றும் வகைப்படுத்திப் பார்க்க வாய்ப்புண்டு.

## குடும்பத்தின் பணிகள்

குடும்பத்தின் பணிகள் பலதிறத்தின. குடும்பம் சமுதாய அலகாகவும் (Social Unit) பொருளாதார அலகாகவும் (Economical Unit) வாழ்வியல் மதிப்புகளை வரலாற்றுக் காலத்திலிருந்து காத்துவரும் பெட்டகமாகவும் (Life Values) விளங்குகிறது.

பாலியல் உந்துதல் இயற்கையானது. இனப்பெருக்க முறை, வளர்ச்சியின் அடையாளம் இவ்விரண்டையும் ஒவ்வொரு சமுதாயமும் அதனதன் மரபுக்கேற்ற விதிகளைக் கொண்டு 'குடும்பத்தின்' வழியாக ஆதரிக்கிறது. எனவே முறையான பிறப்புக் கிடைக்க ஏதுவாகிறது.

தாமசு என்ற அறிஞர் ஒரு மனிதனுக்கு உள்ள அடிப்படை விருப்பங்களில் ஒன்று தன்னைப் பிறர் கவனிக்க வேண்டும் என்கிறார். இது முதன்மையான மனித விருப்பமாகும். காட்டன், கன்ட் ஆகிய அறிஞர்கள் பாலின உறவை விட மனிதனுக்கு இது முக்கியமான வலிமையான சமூகத் தேவை என்று குறிப்பிடுவர். இந்தத் தேவையைக் குடும்பம் தன் அன்பு, அரவணைப்பு இவற்றின் மூலம் நிறைவேற்றித் தருகிறது.

குடும்பத்தில் தாய்மை, பிள்ளைப் பாசம், சகோதர – சகோதரிப் பாசம் போன்ற உணர்வுகள் வளர வாய்ப்பிருக்கின்றன. தன் முனைப்புக் குறைந்து அன்பு, விட்டுக் கொடுத்தல், தியாகம் போன்ற அருங்குணங்கள் வளரக் குடும்பம் நாற்றங்காலாக இருக்கிறது. இவ்வாய்ப்பைக் குடும்பத்தைத் தவிர வேறெந்த நிலையிலும் மனிதன் பெற முடியாது. பணம் கொடுத்து வாங்கவும் இயலாது.

சமூகம் அமைத்துத் தருகிற விதிமுறைகளை ஒட்டிக் குடும்பம் தனி இயக்கமாகச் செயல்படுகிறது. எனவே மனிதன் சமூக மயமாவதற்குக் குடும்பம் அத்திவாரக் களமாக விளங்குகிறது.

## குடும்ப உறவுகள்

குடும்பத்தில் திருமண உறவு அடிப்படையாக உள்ளது. இவ்வுறவின் வழி ஆணும், பெண்ணும் கணவன் – மனைவியாகின்றனர். இவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் மகன் / மகள் ஆகின்றனர்.

திருமண உறவின் தோற்றம் ஆய்தற்குரியது.

> "மனிதர் சேர்ந்து ஒன்றாகக் கூடி வாழ்ந்தமையால் உறவிலும் வேறுபாடில்லை. பல பெண்களை உறவாடுவதில் போட்டி ஏற்பட்டிருக்க வேண்டும். அப்போட்டியின் விளைவால் இன்னின்னாரோடு உறவு கொள்ளலாம் இன்னின்னாரோடு உறவு கொள்ளலாகாது என்ற வரையறை வந்திருக்க வேண்டும். இவ்வரையறை ஒரு கட்டுப்பாட்டுடன் வளர்ந்திருக்க வேண்டும்"[14]

என்று கூறுவர் மானிடவியலார். விலக்கு (Taboo) என்று குறிப்பிடுவதை மேற்குறித்த கட்டுப்பாட்டுடன் இணைத்து விளக்கலாம்.

## விலக்கும் உறவின் பெருக்கமும்

விலக்கின் செயல்பாட்டால் உறவு முறைகள் விரிந்தன. தந்தை மகளுடன் உறவு கொள்வது விலக்கப்படுகிறது. தாயும் மகனும் உறவு கொள்வது விலக்கப்படுகிறது. சகோதரன் சகோதரியுடன் உறவு கொள்வதற்குக் கட்டுப்பாடு உருவாகியது. இச்சூழலில் குறுகிய வட்டத்திற்குள் இருந்த உறவுகள் விரிந்து பெருகின. இரத்த உறவு உடையவர்கள் உறவு கொள்ள இயலாது. விலக்கு வளர்ச்சியடைந்த சமூகத்தின் நிலைப்பாட்டிற்கு உதவியதைப் போல உறவுகளின் பெருக்கத்திற்கும் காரணமாகியது.

ஆண் தன் கூடப் பிறந்த சகோதரியைத் திருமணம் செய்தல் இல்லை. சகோதரியின் மகளைத் திருமணம் செய்யலாம். அவள் அக்கா மகள் / தங்கை மகள் ஆவாள். தந்தையின் கூடப்பிறந்தவள், தாயின் கூடப்பிறந்தவன் மகன் / மகளைத் திருமணம் செய்து கொள்ளுதலுக்குத் தமிழ்ச் சமூகத்தில் முன்னுரிமை கொடுக்கப் பெறுகிறது. எனவே அப்பா, அம்மா, அண்ணன், தம்பி, அக்கா, தங்கை போன்ற உறவு வட்டங்கள் விரிகின்றன. மருமகள், மருமகன், மாமனார், மாமியார், கொழுந்தன், கொழுந்தியாள், பாட்டன், பாட்டி, பேரன் போன்ற நிலைகளில் உறவுகள் விரிவடைந்தன. தாய்வழி உறவுகள் ஒரு பக்கம், தந்தை வழி உறவுகள் ஒரு பக்கம் என்ற நிலையில் மேலும் உறவுகளை வகைப்படுத்தலாம்.

முழுமையான நிலையில் குடும்பம் என்பது கணவன் – மனைவி என்ற உறவு, பெற்றோர் – மக்கள் என்ற நேர்வரை உறவு, உடன் பிறந்தோர் என்கிற இணைவரை உறவு ஆகிய பல உறவுகள் பின்னிப் பிணைந்திருப்பதைக் காணலாம். அகமண உறவு தடைப்பட்டுப் புறமண உறவு வளர்ச்சி கண்டதால் மோதலும் சகிப்புத் தன்மையும் இயல்பாயின.

> "மகன்கள் அனைவரும் ஒரே மாதிரியான மனநிலை உடையவர்களாக இருக்க முடியாது. வெவ்வேறு சமுதாயப் பின்னணியிலிருந்து வரும் மருமகள்கள் வித்தியாசமான கண்ணோட்டங்களையும் புதிய பழகு முறைகளையும் கணவன் குடும்பத்திற்குக் கொண்டு வருகின்றனர். இதை இயல்பாக ஏற்றுக் கொண்டு அந்த வேறுபாடுகளுக்கும் குடும்பத்தில் இடமளிக்க முயற்சிகள் மேற்கொள்ளப் படுகின்றன."[15]

எனவே மருமகள்கள் புறமண உறவால் வெளிப் பண்பாட்டிலிருந்து வருகின்ற நிலையை உணரலாம். பண்பாட்டைத் தக்க வைத்துக் கொள்ள மாமியார் – மருமகள் மோதல்கள் உருவாகின்றன; அல்லது மோதலின்றி ஏற்றுக் கொண்டு கலப்புப் பண்பாட்டுக் கூறுகள் கலந்த குடும்பம் உருவாகிறது.

கணவன் – மனைவி உறவுகள், குழந்தையுடன் உள்ள உறவுகள், கணவன் வழிக் குடும்ப உறவுகள், மனைவி வழிக் குடும்ப உறவுகள், இப்படித்தான் இயங்க வேண்டுமென்ற விதிமுறைகள் எல்லாச் சமூகத்திலும் ஒன்று போல இருக்கும் என்று கூற இயலாது. சமூகத்திற்குச் சமூகம் சாதிக்குச் சாதி, பண்பாட்டிற்குப் பண்பாடு வேறுபட்டு அமையும் இயல்பின.

## தமிழ்ச் சமூகத்தில் குடும்பமும் உறவுகளும்

மேலே பொதுவாகச் சமூகத்தில் இடம் பெற்றக் குடும்பம், குடும்ப உறவுகள் குறித்த வரைவிலக்கணங்கள் விளக்கம் பெற்றன. அவ்வரைவிலக்கணங்கள் சமூகத்திற்குச் சமூகம் மாறுபடும் இயல்பு கொண்டவைகளாகும். இந்நிலையில் தமிழ்ச் சமூகத்தையொட்டிய கருத்து மதிப்புகளும் வரைவிலக்கணங்களும் குடும்பத்தைப் பற்றியும் குடும்ப உறவுகள் குறித்தும் எத்தகைய கருத்துக்களைக் கொண்டுள்ளன என்பதைப் பின்வரும் பகுதியில் விளக்கமாகக் காணலாம்.

## இயற்கை அறம் இல்லறம்

(குடும்பம் என்பது இல்லறமாகும். இல்லறம் என்பது அறத்தின் கூறாகும். இல்லறத்திற்கு மறுதலையாகத் துறவறம் கூறப்படுவதுண்டு. ஆனால் திரு.வி.க. இதனை மறுப்பார்.

> "மனமாசினின்றும் நீத்தல் இல்லறத்தின் ஒரு கூறு. இல்லறத்தின் பற்பல நோக்கங்களுள் ஒன்றாயிருப்பது நீத்தல் அல்லது துறவு. இத்துறவு இல்லறத்திற்கு வேறுபட்டு எங்ஙனம் நிற்கும்? ஆகவே துறவு என்பது இல்லறம் என்னும் அறத்தின் ஒரு கூறு என்றே கொள்க"[16]

என்று குறிப்பிடுவார்.)

"இறைவழியையும் இயற்கை நோக்கையும் படைப்பமைப்பையும், இன்னோரன்ன பிறவற்றையும் கூர்ந்து நோக்குழி, ஒருத்தி ஒருவனுடனும் ஒருவன் ஒருத்தியுடனும் கூடி வாழ்தலே அறம் என்பது புலப்படும். அதுவே வாழ்விற்குரிய இயற்கையாதலின் அதனை இயற்கை அறம் என்ற தலைப்பில் பொறித்தேன்"[17]

எனத் திரு.வி.க. இல்லறத்தை இயற்கை அறம் என நிறுவியதைக் காணலாம்.

எனவே இல்லறம் நடத்துவது இன்பத்திற்காக மட்டுமன்று. அறத்திற்காகவும் இல்லறம் நடத்தப் பெறுகிறது என்ற கருத்து உட்கிடக்கையாய் இருத்தலைக் காணலாம்.

மண உறவு என்கிற ஆண் – பெண் கூட்டுறவால் மட்டும் இல்லறம் முழுமையடைவதில்லை. 'அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின்' (46) 'இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன்' (47), 'வையத்து வாழ்வாங்கு வாழ்பவன்' (50) போன்ற குறட்கள் இங்குக் கருதத்தக்கன. அறமும் பண்பும் உடைய குடும்பமே பயனுடைய வாழ்வாகும் என்று வள்ளுவம் வலியுறுத்துகிறது.

தமிழ்ச் சமூகத்தில் குடும்பம் அறமாக மதிக்கப்படுதலையும் அறவாழ்க்கையே பயனுடைய வாழ்க்கை என்று கருதப் பெறுவதும் புலனாகிறது. ஆண், பெண் இருபாலரின் கூட்டுறவின் பயனாக மலர்வது அறமாகும்.

குடும்ப உருவாக்கத்தில் திருமணத்திற்கு முந்தைய நிலை (Formative Prenuptial Stage) முன்பு குறிக்கப் பெற்றது. இந்நிலை காதல் நிலை ஆகும். பண்டைத் தமிழர் வாழ்க்கையில் களவும் கற்பும் இடம் பெற்றிருந்தன. களவு என்கிற காதல் வாழ்க்கை அறப்படுத்தப் பெறும் பொழுது கற்பு வாழ்க்கையாகிறது. காதலுக்குத் தடை வரும் நிலையில் உடன் போக்கு மணமும் அக்காலத்தில் இருந்திருக்கிறது. இம்முறையில் பெற்றோர் / உற்றோர் ஒப்புதலின்றித் திருமணம் நிகழ்ந்ததாகத் தெரிகிறது. யாரைப் பெண் விரும்புகிறாளோ அவனையே மணத்தல் அறத்தோடு தொடர்புடைய கற்பு வாழ்க்கை என்று கருதப் பெற்றது.

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே"[18]

என்பது தொல்காப்பியம்.

இக்கருத்தின் வழியே தொல்காப்பியர் காலத்திலேயே கரணம் என்கிற திருமண முறை இருந்தது பெறப்பெறுகிறது. எனவே ஆடவர்க்கும் பெண்டிர்க்கும் இடையேயுள்ள அன்பு திருமணத்திற்கு முன்பே உறுதிப்பட்டதாயினும் ஊரறியத் திருமணம் நிகழ்ந்த பின்னரே இல்லறத்தில் அடியெடுத்து வைத்தனர் என்பதும் பெறப்பெறுகிறது.

"மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத் தீவலம் செய்து மணம் செய்து கொள்ளும் முறையைச் சிலப்பதிகாரம் கூறுகிறது"[19].

இச்செய்தியின் வழியே சிலப்பதிகாரக் காலத்தில் சடங்குகள் இடம்பெறத் தொடங்கியிருப்பதைக் காண முடிகிறது. காலப் போக்கில் சாதியம் மற்றும் மரபுப் பழக்க வழக்கங்களின் பிடியில் திருமணச் சடங்குகள் மேலும் இறுக்கம் பெற்றன.

திருமணத்தைப் பண்டைத் தமிழகத்தார் வதுவை, மணம், மன்றல், வரைவு, கடி போன்ற சொற்களால் குறித்தனர். தற்போது திருமணத்தைக் 'கல்யாணம்' என்ற சொல்லால் குறித்து வருகின்றனர்.

"இச்சொல்லாட்சி சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படவில்லை. ஆனால் ஆரியச் சார்பு மிகுந்த காலமான சங்கம் மருவிய காலக்கட்டத்தில் இச்சொல்லாட்சி இலக்கிய வழக்குப் பெற்றதனை பதினென் கீழ்க்கனக்கு நூல்கள் தெரிவிக்கின்றன."[20]

திருமணத்திற்குப் பிறகு அறத்தின் அடிப்படையான இல்லற வாழ்வு தொடங்குகிறது. இல்லறக் கடமைகளுள் தலை சிறந்தது குழந்தைகளை வளர்த்து உருவாக்குவதாகும். அவர்களை அன்புடன் வளர்த்தல் மட்டும் போதாது. நல்லறிவுடையோர்களாக்குவதும் பெற்றோரின் கடமையாகும். திருக்குறளில் வரும் 'நன்மக்கட்பேறு', 'அறிவறிந்த மக்கட்பேறு', 'பண்புடைய மக்கள்' போன்ற தொடர்கள் இங்குக் கருதத்தக்கதாகும். தம் குழந்தைகளை

‘அவையத்து முந்தியிருப்பச் செயல்’ (67) பெற்றோரின் முதல்தரமான கடமையாகும்.

புறநானூற்றில் பொன்முடியார்,

“ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே,

சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே”[21]

என்று கூறியுள்ளார். எனவே குழந்தைக்குக் கல்வி கற்பிப்பதிலும் சான்றோன் ஆக்குவதிலும் தந்தைக்குப் பெரும் பங்கு இருப்பதை உணரலாம்.

“ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச் சான்றோன் எனக் கேட்டதாய்” (69) என்று தாய் மகிழ்ந்த நிலை வள்ளுவத்தில் கூறப் பெறுகிறது.)

குழந்தை வளர்ப்பில் தாய் – தந்தை இருவர்க்குமே பொறுப்புண்டு. சமூகத்தில் ஆணாதிக்கம் விசுவரூபமெடுத்த போது பெண் குழந்தைகளுக்குக் கல்வி மறுக்கப் பெற்றது. ஐரோப்பியர் வரவிற்குப் பிறகு, சமூகத்தில் ஏற்பட்ட மாறுதல்கள் பலவற்றுள் பெண் கல்வியும் ஒன்று. பெண்களும் கல்வி கற்றிருந்தால்தான் அறிவுடைய மக்களை உருவாக்க முடியும் என்கிற விழிப்புணர்வு தற்காலத் தமிழ்ச் சமூகத்தில் இடம் பெற்றிருக்கிறது. சமயம் சார்ந்த நம்பிக்கைகள் பண்பாட்டு நடவடிக்கைகள் போன்றவை பெண்களிடம் குடிகொண்டிருக்கின்றன. அவைகளைக் குடும்ப உறுப்பினராகிய குழந்தைகளுக்கு வழங்குவதில் பெண் தலைமையிடம் பெற்றிருப்பதாக மதிப்பிடலாம்.

குடும்பத்தின் முதிர்ச்சி நிலை தமிழ்ச் சமூகத்தில் இடம் பெற்றிருக்கும் நிலையைக் காணலாம். மனிதனின் வாழ்வில் பிரமசரியம், கிருகஸ்தம், வானப் பிரஸ்தம், சந்நியாசம் போன்ற நான்கு நிலைகளைக் குறிப்பிடுவர்.

> “இக்கருத்து பண்டைக்காலத்து இந்திய நாட்டில் சிறப்பாக வடமொழி நூல்களில் பயிலப் பெற்று வந்ததேயாகும். நூல்களில் இவ்வாறு கூறப்படினும் வாழ்க்கையில் இந்நான்கு நிலைகளையும் பெரும்பாலோர் மேற்கொள்ளவில்லையென இந்திய வரலாற்றை ஆராய்ந்தோர் கூறுகின்றனர். பலர் இல்லறத்தை மேற்கொள்ளாமலேயே துறவு

பூண்டனர். பலர் இல்லறத்தில் ஈடுபட்டுப் பின்னிரு நிலைகளையும் ஏற்காதொழிந்தனர்”[22]

என்று கூறப்படுகிறது. இக்கருத்தின் வாயிலாக முற்குறித்த நான்கு நிலைகள் வடநாட்டுப் பண்பாட்டுடன் தொடர்வுடையது என்றும் நடைமுறை வாழ்க்கையில் பின்பற்றப் பெறாததையும் உணரலாம்.

முதிர்ச்சி நிலையில் குடும்பம் பல விளைவுகட்கு ஆட்பட்டிருக்கும். வாழ்வியல் மதிப்புகளுடன் போராட்டம் (Emotion Conflict) தலைமுறைப் போராட்டம் (Generation Conflict) போன்றவைகளுடன் நிகழ்ந்த தொடர் போராட்டங்களின் பயன் முதிர்ச்சி நிலையில் வெளிப்படும் எனலாம். கணவன் – மனைவி இருவரில் ஒருவர் இறப்பதால் பிரிந்து இருக்கிற நிலை ஏற்படலாம். கணவன் இறந்தால் மனைவி விதவையாகலாம். தமிழ்ச் சமூகத்தின் விதவை இளம் வயதினளாக இருந்தாலும் மறுமணத்திற்கு வழியில்லை. ஆனால், கணவன் எந்த வயதில் இருந்தாலும் மறுமணம் செய்ய வாய்ப்புண்டு. ஆணாதிக்கச் சமூகத்தில் பெண்களுக்கொரு நியதி, ஆண்களுக்கொரு நியதி இருப்பது வரவேற்பதற்கில்லை. பிரிவு இறப்பால் அன்றி மணமுறிவால் (Divorce) நிகழலாம். மணமுறிவிற்கான காரணம் ஆய்தற்பாலது. வரையறுத்துக் கூறவியலாது. சில சமூகக் குழுக்களில் மணமுறிவு ‘தீர்த்துக் கட்டுவது’ என்று கூறப்பெறும். அம்முறையில் கணவன் – மனைவி பிரிந்து வாழவும், மறுமணம் செய்யவும் வாய்ப்புண்டு. கல்வி அறிவு பெற்ற சமூகத்தில் அம்முறை வரவேற்கப்படுவதில்லை. இருப்பினும் நகரச் சமூக வாழ்க்கையில் நீதிமன்றத்தின் மணவிலக்குப் பெறும் நிலை வளர்ந்து வருவதையும் காணமுடிகிறது.

‘குழந்தையின்மை’ எனும் குறை கணவன் மனைவியர்க்கிடையில் எழுந்தாலும் குடும்பம் முதிர்ச்சியடைந்ததாகக் கூறவியலாது. நடைமுறைச் சமுதாயத்தில் குழந்தையின்மையால் மிகுதியாகப் பாதிக்கப் பெறுபவள் பெண்ணாகவே இருக்கிறாள். குழந்தையில்லாவிட்டால் மனைவி குழந்தைக்காக மறுமணம் செய்ய இயலாது. மேலும் ‘மலடி’ என்கிற பட்டத்தால் சமூகத்தால் மிகவும் இழிவு செய்கின்ற நிலையும் உண்டு. உண்மையில் ஆடவர் மலடாக இருந்தாலும் பழியெல்லாம் பெண்டிர் பக்கமே செல்கிறது.

எனவே பிரிதல் இயற்கையிலும் செயற்கையிலும் இல்லாமல் கணவன் மனைவி வாழ்தலுடன் குழந்தைப் பேற்றையும் பெற்று அவர்களை வளர்த்து ஆளாக்கிய நிலையில் 'முதிர்ச்சி நிலையை' அடைகிறார்கள். வளர்த்து ஆளாக்கப் பெற்ற குழந்தைகள் தங்களுக்கெனக் குடும்பம் அமைத்துக் கொள்ளும் தகுதியும் பெறுகிறார்கள்.

## தமிழ்க் குடும்ப வகைகள்

உழவுத் தொழிலை அடிப்படையாகக் கொண்ட சமூகத்தில் கூட்டுக் குடும்ப வாழ்க்கை இடம்பெறுதல் இயல்பு. அம்முறையில் கிராமப்புறக் குடும்பங்களில் கூட்டுக் குடும்ப வாழ்க்கையே பெரும்பான்மை, வளர்ந்த நாகரிகச் சமுதாயத்திலும் நகர்சார் சமூகத்திலும் தனிக்குடும்ப நிலை இடம் பெற்றிருக்கின்ற நிலைமை உணரலாம்.

கூட்டுக் குடும்பத்தின் சிதைவு இக்காலத்தில்தான் தோற்றம் பெற்றது என்று கூறுதல் இயலாது. இவ்விடத்து இலக்கிய வழக்குச் செய்திகளைக் காணுவது பயனுடையதாயிருக்கலாம்.

> "வாழ்க்கைத் துணை நலம் என்னும் அதிகாரமும், மனைவியே குடும்பத் தலைவியாக இருந்து இல்லறத்தை நடத்தும் நிலையை எண்ணியே எழுப்பட்டதாகவே தோன்றுகிறது"[23]

என்பாரின் கருத்து வழி வள்ளுவர் காலத்துக் குடும்பம் தனிக்குடும்பம் என்று கூறப்பெறுகிறது. இதே கருத்து சிலப்பதிகாரத்திலும் இடம் பெற்றிருக்கிறது. கோவலனின் பெற்றோரும் கண்ணகியின் பெற்றோரும் புகார் நகரத்திலேயே வாழ்ந்தாலும் அவர்கள் தனி இல்லத்தில் வாழ ஏற்பாடு நிகழ்ந்ததை சிலப்பதிகாரம் மனையறம் படுத்த காதையில் உறுதிப்படுத்தும்.

பொதுவாக மதிப்பிடுமிடத்துத் தனிக்குடும்பமும் கூட்டுக் குடும்பமும் தமிழ்ச் சமூகத்தில் இடம் பெற்றிருந்ததென மதிப்பிடலாம். சமுதாய வளர்ச்சியில் சூழலுக்கேற்ப ஒன்றின் ஏற்றமும் ஒன்றின் இறக்கமும் ஏற்படுவது இயல்பு. எனவே தற்காலச் சூழலில் எது பொருந்தும் என்பதை நடைமுறைச் சமுதாயம் உணர்த்தி நிற்கும் என்பதில் ஐயமில்லை.

அண்மைக் காலங்களில் கல்வி, தொழில் போன்றவைகள் ஆடவரை ஒரு குடும்ப வட்டத்திற்குள் முடக்கி வைக்கவில்லை. இடம் பெயர்ந்து வாழ்தல் ஏற்றுக் கொள்ளப்பெற்ற நியதியாகும். இந்நியதி பெரும்பாலும் தனிக்குடும்ப நிலைக்கு அத்திவாரமிடுகிறது. கூட்டுக் குடும்பத்திலிருந்த கடமைகள் தற்பொழுது அரசு மற்றும் நிறுவனங்களைச் சார்ந்ததாக மாற்றம் கண்டுள்ளன. எடுத்துக்காட்டாக முதியோர் இல்லம், அனாதை இல்லம், ஊனமுற்றோர் இல்லம், மருத்துவ நிலையம் போன்றவற்றைக் குறிப்பிடலாம். சமயக் கட்டுப்பாடுகள் நெகிழ்ந்து, வாழ்வா? மறைவா? என்ற போராட்டத்தில் இருக்கின்றன. எனவே வரலாற்றுப் பெருமையுடைய பரம்பரையாக வரும் வாழ்வியல் மதிப்புகள் கேள்விக் குறிகளாக உள்ளன.

விவசாய யுகத்திலிருந்து அறிவியல் யுகத்திற்குள் சமூகம் மாறுகின்ற 'மாற்றிடைக் காலத்தில்' (Transition Period) தமிழ்ச் சமூகம் இருப்பதாக மதிப்பிடலாம். இக்காலத்தின் வாழ்க்கைச் சூழலுக்கேற்ற வாழ்வியல் மதிப்புகளே நிலைத்து நிற்கும்.

இம்மாற்றிடைக் காலத்தில் தமிழ்ச் சமூகத்தார் பல பிரச்சினைகளை எதிர் கொண்டிருக்கின்றனர். பிரச்சினைகளுக்கான தீர்வுகளும் எதார்த்த வாழ்வில் தோற்றம் பெறுகின்றன.

## தமிழ்ச் சமூகம் - தந்தை வழிச் சமூகம்

தமிழ்ச்சமூகம் தந்தைவழிச் சமூகத்தோடு தொடர்புடையது. இத்தொடர்பால் ஆணாதிக்கம் ஏற்படுவது இயல்பாயிற்று. பெண்களுக்குக் 'கற்பு' பற்றிய கோட்பாடு வரையறுக்கப் பெற்றது. சமூகத்தின் சிந்தனை வளர்ச்சிக்குத்தக இக்கோட்பாட்டுச் சிந்தனையில் மாற்றமும் இருந்து வந்திருப்பதை வரலாறு மெய்ப்பிக்கிறது.

(வள்ளுவரும் கற்பெனும் திண்மையுண்டாகப் பெறின் பெண்ணிற் சிறந்தது பிறிதில்லை என்கிறார். திண்மை பெண்ணிடம் உள்ள மன உறுதியாகும்.

"தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழு தெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை" (55)

என்பது வள்ளுவர் காலத்துக் கற்புச் சிந்தனையாகும். புத்துலகச் சிந்தனையில் எழுச்சி நாயகனாக வந்த பாரதியார் –

"கற்பு நிலை என்று சொல்ல வந்தார் இரு
கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்"[24]

என்று குரல் கொடுக்கிறார்.

எனவே கற்பென்னும் தூய்மைக் கோட்பாடு பெண்களிடம் மட்டும் எதிர்பார்க்கக் கூடாது. ஆடவரிடமும் அத்தூய்மை இருக்க வேண்டுமென்கிற கருத்து இன்றைய தமிழ்ச் சமூகத்தின் கருத்தாகவும் இருக்கிறது. இங்கு ஆண் – பெண் இருபாலரும் சமம் என்கிற சிந்தனைப் பக்குவம் ஏற்பட்டதால் கல்வி, வேலை, நிர்வாகம்,அரசியல் போன்ற நிலைகளிலும் பெண்களின் உரிமை பற்றிப் பேசப் பெறுகிறது. பெற்றோர்கள் பார்த்துப் பேசுகிற திருமணங்கள் வரவேற்கப் படாத நிலை பெண் சமூகத்தாரிடம் காணப் பெறுகிறது. சாதகப் பொருத்தம் பார்த்துப் பெண்ணை நிச்சயிக்கும் பெற்றோர்களின் முயற்சியை இளைய சமுதாயம் ஏற்றுக் கொள்ளத் தயங்குகிற நிலை உருவாகி வருகிறது. மூட நம்பிக்கைகள் பல பெண்கள் சமூகத்தின் எழுச்சிக்குத் தடைக்கற்களாக இருந்த நிலை ஆட்டம் காணுகிறது.

ஆணாதிக்கச் சமுதாயம், தன் இறுக்கமான பிடியிலிருந்து நழுவி வருவதாகக் கூறலாம். ஆணும் பெண்ணும் இணைந்து உருவாகிற 'சமத்துவச் சமுதாயச் சிந்தனை' பரிணாமத்தில் புதியதொரு கோட்பாடாகத் தலையெடுத்து வருகிறது.

## ஒருவனுக்கு ஒருத்தி

பண்டைத் தமிழகத்தில் அரசர்களிடையே பலதாரம் கொள்ளும் வழக்கம் இருந்தது. எனினும் பொது மக்களிடம் அவ்வழக்கம் இருந்தது எனக் கூறுவதற்கில்லை. சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காப்பியங்களில் ஒருதார மணமே சித்தரிக்கப் பெறுகிறது. செல்வக்குடும்ப ஆடவர் பரத்தையருடன் தொடர்பு கொண்டிருந்தனர். இதனை வள்ளுவர் ஏற்கவில்லை. வரைவின் மகளிர் என்ற அதிகாரத்தில் கண்டிக்கிறார். இக்கண்டிப்பு வள்ளுவர் காலத்துச் சமுதாயக் குரலாக இருக்கலாம். அல்லது வள்ளுவரின் இலட்சிய நோக்காகவும் இருக்கலாம்.

வளர்ந்த சமூகக் குழுவில் ஒருதார முறையே இடம்பெறுகிற நிலையைக் காண முடிகிறது. நாட்டுப்புறச் சமுதாயக் குழுக்களிடம் பலதார முறை வழக்காக இருப்பதைப் பழமொழி வழக்கு வெளிப்படுத்துகிறது. 'அறுவடைக் காலத்தில் எலிக்கும் ஐந்து பெண்சாதி' என்கிற வழக்கு இவ்விடத்து நோக்கத் தக்கதாகும். பொதுவாக நாட்டுப்புறச் சமுதாயத்தில் உழவுத்தொழில் தலைமைத் தொழிலாகும். அத்தொழில் சார்ந்த வேலைகளுக்குப் பெண்களும் பயன்படுத்தப் பெறுவர். கூடுதலாக மனைவிகளைப் பெற்றிருப்பதும் பிள்ளைகளைப் பெற்றிருப்பதால் வேலை செய்து பணம் ஈட்ட வாய்ப்பாக இருக்கும் என்கிற கருத்தும் நிலவி வந்தது.

தமிழ்ச் சமூகத்தில் ஒருவனுக்குப் பல மனைவியர் என்கிற வழக்கம் வழக்கொழிந்த நிலையென மதிப்பிடலாம். ஒருத்திக்குப் பலர் என்கிற அமைப்பே இல்லை.

தந்தைவழிச் சமூகமாக இருப்பதால் புதிதாகத் திருமணம் செய்தோர் கணவனின் தந்தை இல்லத்திலேயே வந்து தங்குகின்றனர். பொருளீட்டுவது பெரும்பாலும் ஆடவன் கடமையாக இருந்தது. குடும்பத்தின் நலம் மட்டுமின்றிச் சமூக நலத்தையும் நாட்டின் நலம் குறித்து மிகுதியாக எண்ணுகிற வாய்ப்பும் ஆடவர்க்கு இருந்தது.

தற்காலத்தில் மகளிரும் பொருளீட்டும் பணியில் ஈடுபட்டுள்ளனர்.

> "சில நாடுகளில் இந்தியாவில் இலங்கையில் இரண்டொரு ஆண்டுகளின் முன் இசுரேல் நாட்டில் பெண்களே நாட்டின் தலைவியர்களாக இருந்தனர். இக்காலத்திலும்கூட இல்லத்தில் தலைமை, பெரும்பாலும் ஆடவர்க்கே உரியதாக இருப்பதைக் காணலாம். கொடுக்கல் வாங்கல் முதலிய பொருள் விபரங்களைக் குறித்தோ அறப்பணிக்கு உதவுதலைக் குறித்தோ இல்லங்களில் மகளிரை வினவும்போது, அவரைக் கேட்டுச் சொல்கிறேன் என்றோ ..... அவரைத்தான் கேட்க வேண்டும், என்று கூறுவதே இயல்பாக உள்ளது,"[25]

எனவே பொருளீட்டலில் பெண்களின் பங்கு இருந்தாலும் வெளியுலகத் தொடர்பு ஆடவரைப் போலப் பெண்களுக்கு இல்லாத நிலை இருப்பதால் ஆடவர் ஆட்சியிலே குடும்ப நிர்வாகம் இருக்கிறது.

## குடும்ப உறவுகள்

தமிழ்ச் சமூகம் வளர்ச்சியடைந்த சமூகமாகும். குழு வாழ்க்கையில் சமூக மேன்மைக்காகத் தோன்றிய விலக்குகள் (Taboos) பல தமிழ்ச் சமூகத்தின் வளர்ச்சிக்கு அடிகோலியுள்ளன.

"காமம் சான்றக் கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
நயம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இருந்ததன் பயனே"[26]

என்பது தொல்காப்பியச் சிந்தனையாகும். இரண்டு பேரின் அன்பு இருவருக்கே உரியது போலத் தோன்றி, ஒரு சிலருக்கு மட்டும் உரியது போல விரிந்து, பிறர்க்காக நிகழ்த்தும் பெருவாழ்வே இந்நூற்பாவில் சுட்டப் பெறுகிறது.

"இரண்டே இரண்டு பேருக்காக வாழத் தொடங்கியவர்கள் உலகத்து எல்லோருக்குமாக வாழ வேண்டும் என்னும் கோட்பாட்டை இதன் மூலம் வாழ்க்கை இலக்கணமாக வகுத்துத் தருகிறது தொல்காப்பியம்"[27].

மக்கள் இயல்பு சேர்ந்து வாழ்வதென்பது உயிர்நூலார் கண்ட உண்மை. இச்சேர்க்கைக்கென்றே புனிதக் காதல் இயற்கையில் அமைந்துள்ளது. காதல் சேர்க்கை குடும்பமாகிறது. சேர்க்கைக் குடும்பத்தின் குறிக்கோள், ஊராய், கோட்டமாய், வட்டமாய், நாடாய், உலகாய் விரிந்து பொலிதல் வேண்டும் என்பது சிந்தனையாளர்களது கருத்தாகும்.

வள்ளுவர் பயன்படுத்தும் 'குடி' என்ற சொல்லாட்சி 'குடும்பம்' என்னும் சொல்லை, சற்று விரிந்து பயன்படுத்தப் பெறுவதாய் உள்ளது. வள்ளுவர் குடும்பம் என்னும் சொல்லை ஒரு குறளில் குடிக்குப் பதிலாகப் பயன்படுத்துகிறார் (1029). எனவே வள்ளுவரின் குடிசெயல்வகைக் கருத்து இங்கு கருதத்தக்கதாகிறது. ஒருவன் தன் குடும்பத்தை உயரச் செய்வதற்கு அரும்பாடுபடுவது இயல்பு. குடும்பத்திற்கு மட்டுமின்றித் தான் பிறந்த குடிக்கும் அவன் அரும்பாடுபடுவது சுற்றம் காத்தலோடு தொடர்பு உடையதாகும்.

சுற்றம் என்பது உறவுகள் ஆகும். இது அக்காலத்தில் குறிப்பிடப் பெறும் விருந்திலிருந்து வேறானது. சுற்றம் அல்லது உறவுகள் உயர்வதற்கும் வாழ்வதற்கும் குடும்பத் தலைவன் கடமையுடையவனாக இருக்கிறான். ஓரிடத்து நீர் பக்கத்துக் கசிந்து செல்லுமாப்போல ஒரு குடும்பத்தின் நல்லவும் தீயவும் உறவுக் குடும்பங்களைச் சாரும். இக்கருத்தோட்டத்தோடு தொடர்புடையதாய்,

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூவும்
உண்பதூவும் இன்றிக் கெடும் (166)

என்பது வள்ளுவமாகும்.

குடும்ப உறவுகளில் கணவன் மனைவி உறவு கருப்பகுதியாகும். கணவன் வழிச் சுற்றம் தந்தைவழிச் சமூகத்தின் முதன்மை இடம்பெறும் அம்முதன்மைதான் பெண்களுக்கு வாழ்க்கைப் போராட்டத்தில் பெருத்த சவால்களாக அமைகின்றன. தனிக் குடும்ப நிலையில் கணவன் – மனைவி பிள்ளைகளைத் தவிரச் சுற்றத்தின் தாக்கம் மிகுதியாக இல்லை. கூட்டுக் குடும்பத்தில இடம் பெறும் உறவுநிலைகள் மிகுதி. உறவுகளும், கடமைகளும் மோதும் நிலையில் சிக்கல்களும் மிகுதியாக உள்ளன.

குடும்ப உறவுகளில் கணவன் – மனைவி உறவு கருப்பகுதியாகும். இங்கு ஆணும் பெண்ணும் திருமணம் என்கிற உறவின் வழியே குடும்ப அமைப்பிற்குள் அடியெடுத்து வைக்கின்றனர். உறவு முறையில் திருமணம், உறவற்ற முறையில் திருமணம் என்கிற உறவின் வழியே குடும்ப அமைப்பிற்குள் அடியெடுத்து வைக்கின்றனர். உறவு முறையில் திருமணம் நிகழ்வதற்கான வாய்ப்புத் தமிழ்ச் சமூகத்தில் உண்டு. முதன்வகை பாரம்பரிய மதிப்புகளைப் பின்பற்றும் இறுக்கமான சமூகத்தில் காணக்கூடியது.

கணவன் – மனைவி பிள்ளைகளுடன் வாழுகிற நிலையில் தனிக்குடும்ப நிலை அமைகிறது. இங்கு பிள்ளைகள் உறவு முறைக்கு அமைகிறது. நகரமயமாதல் விளைவால் அண்மைக் காலங்களில் தனிக்குடும்ப நிலை பரவலாக உள்ளது.

கூட்டுக் குடும்பம் பெரும்பாலும் ஆணாதிக்கச் சமுதாயம் சார்ந்தது. ஆகவே பெண் தன் உறவுகளிலிருந்து விடுபட்டு, கணவன் உறவுகளுடன் வாழ வேண்டியவளாகிறாள். மனைவி வழி கூட்டுக் குடும்ப நிலை பெண்ணியம் காரணமாக விழிப்புப் பெற்று வருகிறது.

கணவன் உறவு சார்ந்த கூட்டுக் குடும்பத்தில் கணவனின் தாய், தந்தை மூத்தத் தலைமுறையைச் சார்ந்தவர்கள். கணவனின் சகோதரர், சகோதரர் மனைவி, பிள்ளைகள் ஆகியோரும் கூட இக்குடும்பத்தில் அமையலாம். கணவனின் சகோதரி வழிக்குடும்பம் பெரும்பாலும் கூட்டுக் குடும்பத்தில் இணைவதில்லை. சகோதரி வாழாமலோ, விதவையாகவோ இருந்தால் இக்கூட்டுக் குடும்ப வாழ்க்கைக்குள் இருக்க வேண்டியவளாகிறாள். கணவனுடன் உடன் பிறந்த திருமணம் ஆகாத சகோதரன் / சகோதரி கூட்டுக் குடும்ப வாழ்க்கைக்குள் இருக்க வேண்டியவளாகிறார்கள். கணவனுடன் உடன்பிறந்த திருமணம் ஆகாத சகோதரன் / சகோதரி கூட்டுக் குடும்பத்தில் இருப்பது, கூட்டுக் குடும்பம் பெரும்பாலும் கிராமியப் பின்புலத்தில் விவசாயத் தொழில்சார் சமூகத்தில் காணப்பெறுவதாகும். பாரம்பரிய மதிப்புகள் போற்றப்பெறும் நிலை இங்கு இடம் பெறுகிறது. இவ்வுறவுகளைக் கீழ்க்கண்ட வரைபடத்தின் வழி விளக்கலாம்.


ஆண் – பெண்
திருமண உறவு
உறவு முறைத் திருமணம்
உறவில்லா முறையில் திருமணம்
மரபு சார்ந்த திருமணம்
மரபு மீறிய திருமணம்


குடும்பம்
தந்தை வழிக் குடும்பம்
தாய் வழிக் குடும்பம்
தனிக்குடும்பம்
கூட்டுக் குடும்பம்
கணவன்
மனைவி
பிள்ளைகள்
தந்தைவழிக் கூட்டுக் குடும்பம்
தாய்வழிக் கூட்டுக் குடும்பம்
கணவனின் தந்தை
கணவன் மனைவி பிள்ளைகள்
கணவன் சகோதரன் மனைவி, பிள்ளைகள்
திருமணம் ஆகாத பிற சகோதரன் சகோதரி

ஆணாதிக்கப் போக்கு, சாதிய முரண், வலுவிழந்த பாரம்பரிய மதிப்புகள், வரதட்சணை, சீர்வரிசை போன்ற சீர்கேடுகள், குழந்தையின்மை போன்ற பிரச்சினைகள் உறவுகளின் முரண்களுக்குப் பின்புலங்களாகின்றன. சமூகப் போக்கின் மாற்றம், பழைய வாழ்வியல் முறை நாகரிக வாழ்வியல் முறையுடன் முரண்படுகின்ற நிலை நடைமுறையில் காணப்பெறுகின்றன. இவ்வாறு உறவுகளைச் சோதனைக்குள்ளாக்கும் சிக்கல்கள் நாள்தோறும் அண்மைக்காலத் தமிழ்ச்சமூகத்தில் காணப்பெறுவதாக உள்ளன. தமிழ்ச் சமூகத்தின் ஆணிவேராகிய பண்பாட்டின் கருத்துருவாக்கம் நிலைபேறு பெற்றிருக்கின்ற காரணத்தால், சிக்கல்களை எதிர்கொண்டு புதியதோர் அறிவியல் யுகத்தில் நடைபயின்று கொண்டிருப்பதாகக் கருதலாம்.

## குடும்ப உறவும் பண்புகளின் பரிணாமங்களும்

> "இல்லறம் மனிதன் பால் இயல்பாக அமைந்துள்ள அன்பு ஊற்றினின்றும் அரும்புனல் எழாதவாறு தகைந்து நிற்கும் தன்னலம் என்னும் பாறையை உடைத்தெறியும் கருவி"[28]

என்று கூறுவர். தன்னலம் அழிவதற்குக் குடும்பத்தின் செயல்பாடு ஆதாரமாக இருக்கிறது. (தன்னலம் அழிந்தால்தான் குடும்பம் உலகநோக்கை எய்தவியலும். "இல்லறத்தின் உயிர்நிலை தியாகத்தில் இருக்கிறது. தியாகமில்லாத இல்லறம், இல்லறமாகாது. உடல், பொருள், ஆவி மூன்றையும் பிறர்க்கு உரிமையாக்கி, வாழவே இல்லறம் நல்லறம் ஏற்பட்டது. அன்பு வளர்ச்சிக்கு அடிப்படை இல்லறமெனின், அதன்கண் தியாகம் நிகழ்ந்தே தீர வேண்டும்"[29].) குணப் பண்புகளின் பரிணாமத்தில் தியாகப்பண்பே உச்ச நிலையெனக் குறிப்பிடலாம்.

தியாகப் பண்பின் ஆக்கத்திற்கு இல்லறம் காரணமாகிறது. அகத்தில் அன்பு, புறத்தின் செயல்பாடுகளில் அறம். ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் இருப்பதைப் போலக் குடும்பத்தின் இரு பக்கங்களாக அன்பும் அறனும் இருக்கின்றன.

அன்பின் வளர்ச்சி – அறத்தின் முதிர்ச்சி எத்தகையது? இவ்வினாவிற்குப் பக்குவப்பட்டதாகத் தமிழ்ச் சமூகத்தின் குடும்ப மாண்பு இருக்கிறது. இம்மாண்பு எல்லாச் சமூகத்திலும் ஒன்றுபோல இருப்பதில்லை.

அளவு மாறுபடலாம். சமூகவியலார் குடும்பத்திற்காகச் சுட்டும் பணிகள் / கடமைகள் அன்பிலும் அறத்திலும் சுருக்கமாக அடங்கிவிடும் என மதிப்பிடலாம்.

## முடிவுரை

துவக்கத்தில் கூடிவாழத் தலைப்படுகையில் வரன்முறையான பாலுணர்வில் வாழ முற்பட்டனர். இச்சூழலில் குடும்பம் தோற்றம் பெற்றது.

மனித சமூகத்தின் பரிணாமத்தின் தொன்மையான நிறுவனம் (Institution) குடும்பமாகும். இந்நிலை அனைத்துச் சமூகங்களுக்கும் பொதுவான மற்றும் அழியாத அமைப்பாகும்.

குடும்ப உருவாக்கம் பல படி நிலைகளை உடையது. அவ்வுருவாக்கத்திற்குச் சமூக அங்கீகாரம் வேண்டும். அவ்வங்கீகாரம் தொடர்புடைய விதிமுறைகள் சமுதாய மரபுகள், குழுமரபுகள் பழக்க வழக்கங்கள் போன்றன ஆகும்.

ஓர் ஆணும் பெண்ணும் சமுதாய மரபுப்படித் திருமண வாழ்க்கையில் ஈடுபடுதல் வேண்டும். இம்முறையில் குடும்பம் என்னும் அங்கீகாரம் அவ்வகைச் சமுதாயத்தின் அகவயக் கருத்தாக்கத்தின் வழி (Emic Concept) அளிக்கப் பெறுகிறது.

குடும்ப உருவாக்கத்திற்கான வளர்ச்சி நிலைகள் நான்கு நிலைகளில் அமையும். முதல்வகை, திருமணத்திற்கு முந்தைய நிலையாகும். இந்நிலையைக் காதலுடன் இணைத்துப் பார்க்கலாம். காதல் சமூக அங்கீகரிப்பைப் பெறுகிற போது நிறைவேறும் காதலாகிறது. அங்கீகரிப்பைப் பெறாதபோது நிறைவேறாத காதலாகிறது.

திருமணம் குடும்ப உருவாக்கத்தின் இரண்டாம் நிலையாகும். திருமண விதிகள் விலக்குதல் (Prohibitions) முன்னுரிமை (Preference) விதியமைப்பு (Prescription) என முத்திறத்தன. தாய் தந்தையர் பேசி முடிக்கும் திருமணம் மரபுத் திருமணம். பெற்றோர் இசைவின்றி அமைவது மரபு மீறிய திருமணமாகும். இங்கு குறிப்பிடப்பெற்ற இருவகைகளிலும் மறுமணம் நிகழலாம். இம்மணம் சமூக விதிமுறைகளுக்குட்பட்டது. இவ்விதிமுறைகள்

சடங்குகள் மற்றும் சாதியப் பழக்க வழக்கங்களுடன் நெருங்கியத் தொடர்பின.

மூன்றாம் வகையான குழந்தை வளர்ப்பு நிலையில் கணவன் – மனைவியர் பிள்ளைகளுடன் தாய் தந்தையராகின்றனர். பிள்ளைகளைச் சமூக வயமாதலுக்குத் தகுதிப் படுத்துகிற பொறுப்புப் பெற்றோர்களுக்குக் கடமைகளாக உள்ளன.

பிள்ளைகளைக் குடும்பம் அமைக்கிற நிலைக்குத் தகுதியாக்கியபின் குடும்பத்தின் நான்காம் வகையான முதிர்ச்சி நிலை அமைகிறது. குழந்தையின்மை, கணவன்–மனைவி பிரிதல் மற்றும் ஒருவர் இறத்தல் போன்ற காரணங்களால் குடும்பம் முதிர்ச்சி நிலையை எட்டாமல் போகலாம்.

குடும்பம் தனிக்குடும்பம் (Nuclear Family) கூட்டுக்குடும்பம் (Joint Family) என்ற இரு திறத்தது. கூட்டுக் குடும்பத்தின் தோற்றம் தொன்மையானது. தற்காலத்தில் உள்ள வாழ்க்கை முறையில் கூட்டுக் குடும்பம் இருத்தலுக்கான வாய்ப்பில்லை. கூட்டுக் குடும்பம் வரையறுத்த கடமையுணர்வின் செயல்பாடுகளைத் தற்காலத்துச் சமதர்மக் கொள்கை சார்ந்த சமுதாயப் போக்கு (Sociolistic Pattern of Society) நிறைவேற்றுகிறது.

குடும்பத்தைத் தந்தைவழிக் குடும்பமென்றும், தாய்வழிக் குடும்பமென்றும் வகைப் படுத்தலாம். தந்தைவழிக் குடும்பத்தில் ஆணாதிக்கம் இருந்தது. ஒருவன்–ஒருத்தி என்ற நிலையில் அமையும் குடும்பம் ஒருதாரக் குடும்பமாகும். முற்குறித்த எண்ணிக்கை மாறுகிற பொழுது பலதாரக் குடும்பம் அமைகிறது. நிர்வாக நடைமுறையினைக் கொண்டு தந்தையாட்சிக் குடும்பம், தாயாட்சிக் குடும்பம், சமத்துவக் குடும்பம் என்று வகைப்படுத்தலாம்.

குடும்பம் சமுதாய அலகாகவும் (Social Unit), பொருளாதார அலகாகவும் (Economical Unit) வாழ்வியல் மதிப்புகளை வரலாற்றுக் காலத்திலிருந்து காத்து வரும் பெட்டகமாகவும் உள்ளது.

விலக்கின் (Taboo) செயல்பாட்டில் குடும்ப உறவுகள் விரிந்தன. கணவன்–மனைவி உறவுகள், பெற்றோர் – குழந்தை உறவுகள் கணவன் வழிக் குடும்ப உறவுகள் மனைவி வழிக் குடும்ப உறவுகள் போன்றவைகளும் இயங்க வேண்டிய விதிமுறைகளும் சமூகத்திற்குச் சமூகம் மாறுபடும்.

தமிழ்ச் சமூகத்தில் குடும்பம் பல பரிணாமங்களைப் பெற்றுள்ளது. குடும்பம் அறத்தின் கூறு என்ற அடிப்படையில் இல்லறம் என அழைக்கப் பெற்றது. அறமும் பண்பும் உடைய குடும்பமே பயன் உடைய வாழ்வென்று வள்ளுவம் கூறும். ஆண், பெண் இருபாலரின் கூட்டுறவின் பயனாக மலர்வது அறமாகும்.

குடும்ப உருவாக்கத்தில் திருமணத்திற்கு முந்தைய காதல் நிலை பண்டைத் தமிழர் வாழ்வில் சிறப்புற்றிருந்தது. 'களவு' என்கிற காதல் வாழ்வு அறப்படுத்தப் பெறும்போது 'கற்பு' வாழ்க்கையாகிறது. தொல்காப்பியர் காலத்திலேயே 'கரணம்' என்கிற திருமணம் இடம் பெற்றது. சிலப்பதிகார காலத்தில் திருமணத்தில் சடங்குகள் தோற்றம் பெற்றிருந்தன. பிற்காலங்களில் அதன் இறுக்கம் வளர்ந்து சாதியத்துடன் தொடர்பு பெற்றன.

தம் குழந்தைகள் அவையத்து முந்தியிருப்பச் செயல் பெற்றோரின் கடமையாகும். குறிப்பாக, சான்றோன் ஆக்குவது கடமையாகும். ஆணாதிக்கச் சமுதாயத்தில் பெண் குழந்தைகளுக்குக் கல்வி மறுக்கப் பெற்றது. சமயம் சார்ந்த நம்பிக்கைகள், பண்பாட்டு நடவடிக்கைகள் போன்றவைகளைப் பெண்கள், குழந்தைகளுக்கு வழங்கினர்.

முதிர்ச்சிநிலைச் சமூகத்தில் கணவன் இறந்தால் மனைவி விதவையாகிறாள். விதவைகளுக்குத் திருமணம் என்பது தமிழ்ச் சமூகத்தில் ஆதரவாக இல்லை. மண முறிவு சாதியம் மற்றும் பழக்க வழக்கங்களுக்குத்தக மாறும். குழந்தையின்மை ஆண் பெண் இருபாலார்க்கும் பிரச்சினையாக, பொதுப் பிரச்சினையாக இருந்தாலும் சமூகத்தில் பெண்களே மிகுதியாகப் பாதிப்பிற்குள்ளாகிறாள். வளர்ந்து ஆளாக்கப் பெற்ற குழந்தைகள், மறுபடியும் குடும்பச் சுழற்சியில் ஈடுபடுகின்றனர்.

தமிழ்ச் சமூகத்தில் தனிக் குடும்பமும் கூட்டுக் குடும்பமும் இருந்த நிலை தெளிவாகிறது. விவசாயம் சார்ந்த கிராமப்புறச் சமூகத்தில் கூட்டுக் குடும்பங்கள் உள்ளன. நகர்ப்புறச் சமுதாயங்களில் தனிக் குடும்பங்கள் உள்ளன.

தமிழ்ச் சமூகம் தந்தைவழிச் சமூகமாதலால் 'கற்பு' கோட்பாடு பெண்களிடம் வற்புறுத்தப் பெறுகிறது. 'கற்பு' என்பதை இருபிரிவினருக்கும் (ஆண் – பெண்) பொதுவில் வைக்க வேண்டுமென்பது சான்றோரின் சிந்தனையாகும். பெண் சமூகத்தார்க்கு நிகழ்காலச் சமூகத்தில் உரிமைகளை மீட்கும் மன நிலை எழுச்சி பெற்றுள்ளது.

'ஒருவன்–ஒருத்திக் கோட்பாடு' தமிழ்ச் சமூகத்திற்கு ஏற்புடைத்தது. தமிழ்ச் சமூகம் தந்தைவழிக் குடும்பமாக இருப்பதால் புதியதாகத் திருமணம் செய்தவர்கள் கணவனின் தந்தை இல்லத்திலேயே தங்குகின்றனர். ஆடவர் மட்டுமின்றிப் பெண்டிரும் பொருள் ஈட்டும் நிலை அண்மைக்காலத்தில் மாறிவரும் சமூகத்தில் உண்டு. இருப்பினும் ஆடவர் ஆட்சி முற்றிலும் நீங்கியதாகக் கூறவியலாது.

இரண்டு பேருக்காகக் குடும்பம் தோன்றி, ஒரு சிலருக்கு மட்டும் உரியது போல விரிந்து பிறர்க்காக வாழ்க்கை நிகழ்த்துவது குடும்பம் என்கிற சிந்தனை தொல்காப்பியர் காலத்திலிருந்தே உண்டு. சங்க இலக்கியங்கள் சுட்டும் 'சுற்றம்' வள்ளுவர் காலத்தில் 'குடிசெயல் வகையுடன்' தொடர்பு பெறுகிறது.

குடும்ப உறவுகளில் கணவன் மனைவி உறவு கருப்பகுதியாகும். கணவன் வழிச் சுற்றம் தந்தை வழிச் சமூகத்தில் முதன்மையானது. கூட்டுக் குடும்பத்தில் சுற்றத்தின் / உறவின் பெருக்கம் மிகுதி. தனிக்குடும்ப உறவுகள் நகர வாழ்க்கையில் பரவலாக மதிப்புக்களைத் தக்க வைக்க முரண்பட்டிருக்கின்றன. மாறிவரும் சமூகம் புது மதிப்புகளை உருவாக்கி வருகிறது.

பொதுவாகக் குடும்பம் மற்றும் குடும்ப உறவில் அன்பும் அறமும் இருப்பது தேவையானதாகும். அகத்தில் அன்பு, புறத்தில் அறம் என்றநிலை வளர்ந்த சமுதாயத்தின் முத்திரைகளாகும்.

⁕ ⁕ ⁕ ⁕ ⁕

# சான்றாதாரங்கள்


1. சீ. பக்தவசல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப,336.

2. "Family is one of the oldest and most common human Institutions Since prehistoric period, the family has been an important organisation in society. Most people grow up in a family and as adults, establish a family of their own". - The World Book Encyclopedia (Vol. 7) P,22.

3. வாழ்வியல் களஞ்சியம், (தொகுதி – ) ப,599.

4. சீ. பக்தவசல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப,336.

5. வாழ்வியல் களஞ்சியம், (தொகுதி – ) ப,591.

6. சித்ரலேகா, லட்சுமி – சூடாமணி நாவல்கள், ப,32.

7. மேலது, ப,61.

8. "Marriage is a special type of person to person relationship, involving mutual rights and duties"" - Robert L. Sutherland, Introductory Sociology, P, 249.

9. கல்பகம், சமூகவியல், ப,60.

10. மேலது, ப,63.

11. "In most societies the family is the social unit into which children are born. The family also provides protection and training for the children. Human beings are born helpless and need care for several years after birth. Family life also helps children learn the culture of their society". - The World Book Encyclopedia (Vol.7), P,23.

12. கல்பகம், சமூகவியல், ப,56.

13. பெட்ராண்ட் ரஸல், திருமண முறைகள், கே. மாதவன் (தமிழாக்கம்), ப,29.

14. தாயம்மாள் அறவாணன், உறவு முறைகள், ப, 27.

15. சியாமா தூபே சரஸ், இந்தியச் சமுதாயம், ப,87.

16. திரு.வி.க. பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை நலம், ப,181.

17. மேலது, ப,178.

18. தொல் – பொருள் – நூ.எ,142.

19. சிலப்பதிகாரம், மங்கல வாழ்த்துப் பாடல் : வரி 52-53.

20. க. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப,35.

21. புறநானூறு, பா.எ,69.

22. மேற்கோள் காட்டப் பெற்றது. (A.L. Basham, The Wonder that was Indica). காமாட்சி சீனிவாசன், குறள் கூறும் சமுதாயம், ப,87.

23. மேலது, ப,45.

24. பாரதியார் கவிதைகள், ப,465.

25. காமாட்சி சீனிவாசன், குறள் கூறும் சமுதாயம், ப,87.

26. தொல் – பொருள் – கற்பியல் 1138.

27. சாலினி இளந்திரையன், சங்கத் தமிழரின் மனிதநேய மணிநெறிகள், ப,9.

28. திரு.வி.க. பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை, ப,27.

29. திரு.வி.க. மனித வாழ்க்கையும் காந்தியடிகளும், ப,158.

# 4. சிவசங்கரி நாவல்களில் குடும்பம்

சமுதாயத்தின் அடிப்படை நிறுவனம் குடும்பம். அஃது காலச்சூழலுக்கு ஏற்றத் தகவமைப்பைப்பெற வேண்டியுள்ளது. நடைமுறையில் குடும்பத்தில் மரபியல் கூறுகள் ஆதிக்கம் செலுத்துகின்றன. அந்நிலைக்கு எதிர்ச்சூழலும் உருவாகின்றன. முரண்படும் நிலையில் சிக்கல்களும் அவற்றிற்கான தீர்வுகளும் கிடைக்கின்றன. படைப்பிலக்கியவாதிகள் இந்நிலையைத் தங்கள் இலக்கியங்களில் பதிவு செய்கின்றனர்.

அம்முறையில் குடும்பங்கள் பற்றிய கருத்துப் பதிவுகள் மற்றும் அதன் வளர்ச்சி நிலைகளில் உள்ள நிலைகளை சிவசங்கரி தம் நாவல்களில் எங்ஙனம் இடம்பெறச் செய்துள்ளார் என்பதை மதிப்பிடுவதாக இவ்வாய்வுப் பகுதி அமைகிறது. குறிப்பாக முன்னியலில் விளக்கப்பெற்ற கோட்பாட்டுச் சிந்தனைகளின் அடிப்படையில் இவ்வியல் விளக்கம் பெறுகிறது.

## தலைமைச் சிந்தனை

சிவசங்கரி எண்பதுக்கும் மேல் நூல்கள் கண்டவர். பல தரப்புகளிலும் அவருக்கு நூற்றுக் கணக்கான வாசகர்கள் உண்டு. அவர்களிடம் தன் சிந்தனைகளைத் தன் கதைகளின் வழியே கொண்டு சென்றிருக்கலாம்.[1] அவர் எத்தகு சிந்தனைகளுக்கத் தலைமை இடம் கொடுத்துள்ளார் என்பது ஆய்விற்குரியதாகும்.

சமூகத்தில் 'பெண்கள் சமூகம்' குறிப்பிடத்தகுந்தது. அவர்களின் பங்குகளும் உறவுகளும் புதிய பரிணாமப் பாதையில் அடியெடுத்து வைத்துள்ளன. சிவசங்கரி பெண் எழுத்தாளராக இருப்பதால் அப்பரிணாமச் சிந்தனையை இயல்பாகப் பெற்றிருக்கலாம்.

> "ஒரு படைப்பாளியை ஆண் எழுத்தாளர் பெண் எழுத்தாளர் என்று பாகுபடுத்திப் பார்ப்பது சரியானதல்ல"[2]

என்ற கருத்து சிவசங்கரியிடம் உண்டு. எனினும் பெண் எழுத்தாளர்களுக்குப் பெண் சமூகம் குறித்த விரிவான சிந்தனை இடம் பெற்றிருக்கிற நிலை முற்றிலும் மறுப்பதற்கில்லை.

சிவசங்கரியின் நாவல்களில் தனி மனிதம், குடும்பம், சமூகம் என்ற வகைப்பாட்டினைப் பொருத்திப் பார்க்கலாம். அவ்வகைப் பொருத்தத்தின் வழி எவ்வகை நாவல்கள் சிவசங்கரியின் நாவல்களில் மிகுந்துள்ளன என்பதை மதிப்பிடலாம்.

> "சிவசங்கரியின் பெரும்பாலான நாவல்களுக்குத் தளமாக அமைவது குடும்பம் என்னும் நிறுவனம்தான். சிவசங்கரியின் பெண்கள் இந்த நிறுவனத்தை விட்டு அதிகம் வெளியே செல்வதில்லை. அதாவது அவர்களுடைய அனுபவங்கள், செயல்பாடுகள் எல்லாம் பெரும்பாலும் குடும்பம் என்னும் அலகிற்குள் சுழன்று வருபவையே. இது சிவசங்கரியின் இலச்சினைகளில் (Marking) முக்கியமான தாகும்"[3]

என்று குறிப்பிடுகிற கருத்துக் குறிக்கத்தக்கதாகும். அவ்வகையில் குடும்பம் சார்ந்த நாவல்கள் மிகுந்திருப்பதை உணரலாம்.

## குடும்பம் கருத்துருவாக்கம்

சிவசங்கரி தன் படைப்புருவாக்கம் பற்றிக் குறிப்பிடுவதாவது :

> "கண், காது, மனம், ஆகியவற்றைத் திறந்து வைத்து நம்மைச் சுற்றியுள்ளவற்றைக் கூர்ந்து கவனித்தால் பற்பல அனுபவங்களும் பிரச்சினைகளும் தென்படும். இவை என் மனதில் ஏற்படும் பாதிப்புகளே கதைகளாகின்றன"[4]

இக்கருத்தின் வழி நடைமுறைச் சூழலின் சிக்கல்கள் சிவசங்கரியின் எழுத்துக்களில் பதிவாவதை உணரலாம்.

> "அழகான பெரிய கட்டிடம் ஒன்றை உருவாக்க அஸ்திவாரம் பலமாக அமைய வேண்டும் என்ற நியதியின்படி கூடுமான வரையில் நிஜமான அனுபவம் அல்லது சம்பவத்தை நான் என் கதைக்கு அஸ்திவாரமாகப் போடுகிறேன்"[5]

என்று சிவசங்கரி குறிப்பிடுவதும் முற்சுட்டிய கருத்தை அரண் செய்கிறது.

அனுபவங்கள் வாழ்க்கைக்கான அறிவைப் புலப்படுத்துகின்றன. குடும்பம் சார்ந்த தலைமைச் சிந்தனைகள் சிவசங்கரியிடம் மிகுந்திருப்பதால் குடும்பம் பற்றிக் கருத்துருவாக்கச் சிந்தனைகளும் அவரின் எழுத்துக்களில் இடம் பெறுவது இயல்பெனலாம். அவைகளில் சிலவற்றைக் காண்பது இவ்விடத்தில் பொருத்தமானதாகும்.

## நல்ல குடும்பத்தின் அடையாளம்

'அது சரி அப்புறம்' நாவலில் சித்தரிக்கப் பெறும் ஜானா முற்போக்கு எண்ணமுடையவள். தன் கொள்கைப்படியே வாழ்வினை அமைத்துக் கொண்டவள். வேலை பார்க்கும் ஜானா தன் தோழிகளிடம் தாம்பத்தியம் பற்றிக் கூறுவதாவது :

"அன்பைக் கொடுத்து அன்பை வாங்கறதும் மரியாதையைக் கொடுத்து மரியாதையைப் பதிலுக்கு வாங்குவதும் தான் ஆரோக்கியமான தாம்பத்தியம்"[6]

என்று கூறுகிறார்.

மேலும்,

"பரஸ்பர அன்பு, மரியாதை, மதிப்பு, விட்டுக் கொடுத்தல், இத்தனையும் தனக்குள் அடக்கிக் கொண்டு இருக்ககிறதுதான் நிஜமான சத்தியமான தாம்பத்தியம். இதைப் புரிஞ்சுகிட்டு வாழ்ந்தால் எந்தப் பிரச்சினையும் இல்லை"[7]

என்கிற கருத்தையும் அழுத்தமாகக் குறிப்பிடுகிறார்.

அன்பு, மரியாதை போன்றவைகளைக் கொடுத்து வாங்குதல் நல்ல குடும்பத்தின் அடித்தளம் என்பது சிவசங்கரியின் கருத்தாகத் தெரிகிறது. ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்தும், ஒருவரையொருவர் புரிந்து கொள்வதும் என்கிற நிலையில் குடும்பத்தின் சிக்கல்கள் தோன்றுவதற்கான வாய்ப்புகள் குறையும். இக்கருத்துக்கள் சிவசங்கரியின் அடிப்படைக் கருத்துக்கள் ஆகும். அவரின் பல நாவல்களில் இக்கருத்துக்களே எதிரொலிக்கின்றன.

"மேடு பள்ளங்கள் நிறைந்த வாழ்க்கையில் விட்டுக் கொடுப்பதும் கேட்டு வாங்குவதும் அனுசரித்துச் செல்வதும் ஒரு அங்கம்"[8]

என்ற கருத்தைச் 'சுட்டமண்' நாவலில் ஆசிரியர் குரல் ஒலிப்பின் வழி குறிப்பிடுகிறார்.

"தப்பு பண்றதும் திருந்தி மன்னிப்புக் கேக்கிறதும் மனுஷ சுபாவம்.. குடும்பம்னா சண்டை, சச்சரவு, ஊடல், கொஞ்சல், எல்லாம் மாறி மாறி வரத்தான் செய்யும். எதையும் பெரிசு படுத்தாம நல்லதை எடுத்துக்கிட்டுக் கெட்டதை ஒதுக்கிக் குடும்பம் நடத்தற பெண்களோட வாழ்வுதான் நிம்மதியாக இருக்கும்"[9]

இச்சிந்தனைகள் முற்சுட்டிய கருத்தை அடியொற்றி இருப்பதைக் காணலாம்.

வாழ்வியல் அனுபவம் குறித்து சிவசங்கரியின் சொந்தக் கருத்தை இங்கே குறிப்பிடலாம்.

"திருமணமான புதிதில் காட்டாறாகத் தலைகால் புரியாமல் நான் பொங்கிய பொழுது அந்த ஆற்றின் இருகரைகளாக இருந்து என்னை நிதானப்படுத்தி எந்தச் சூழ்நிலையிலும் நான் குலைந்து போகாமல் அழுத்தமான நங்கூரமாக நின்று, போட வேண்டிய தருணங்களில் லகான் போட்டு, சொல்ல வேண்டியவற்றைச் சொல்லி, மரியாதை, அன்பு, ஆராதனை ஆகிய மூன்றும் கலந்ததுதான் தாம்பத்தியம் என்பதைப் புரிய வைத்தார்"[10]

என்று தன் கணவரைப் பற்றி சிவசங்கரி தற்கூற்றில் தெரிவிக்கிறார்.

"ஒருவர் பால் ஒருவர் வைக்கும் மதிப்பு, ஆராதனை, அன்புஇவையே நல்ல உரங்களாக அமைந்து கடைசி வரை செழித்து வளர வைக்கிறது"[11]

என்று குறிப்பிடுவதும் இவண் கருதத்தக்கது ஆகும்.

## குடும்ப இயக்கத்தில் பெண்

குடும்ப இயக்கத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் பெரும் பங்கு உண்டு. பெண்ணின் பங்கு கூடுதலாக இருக்க வேண்டும் என்பது சிவசங்கரியின் கருத்தாக இருக்கிறது. சிவசங்கரியின் நாவல்களில் இடம் பெறும் பெண்கள் தம் பங்கை உணராத பொழுது, தாய் பாத்திரக் கூற்றில் வெளிப்படும் அறிவுரைக் கருத்துக்களில் சிவசங்கரியின் குரல் ஒலிக்கக் காணலாம். இந்நிலையை 'நதியின் வேகத்தோடு', 'அது சரி அப்புறம்', 'ஆயிரம் காலத்துப் பயிர்' போன்ற நாவல்களில் காணலாம்.

'நதியின் வேகத்தோடு' நாவலில் வரும் தர்மாவுக்கு அவளின் தாய் கூறுவதாவது :

> "என்னதான் பொம்பளை உசத்தியா இருந்தாலும் ஆம்படையானை அரவணைச்சுகிட்டுப் போனாத்தான் வாழ்வு"[12]

என்று கூறுகிறாள்.

'அது சரி அப்புறம்' நாவலில் இடம் பெறும் நந்தினி என்ற பாத்திரத்தின் தாய்,

> "இவள் நம்மளைவிட அதிகமாகச் சம்பாதிக்கிறாள் என்ற ஏக்கம் மாப்பிள்ளைக்கு வரவும் இடம் தரக்கூடாது. புருஷன் பெண்டாட்டிக்கு நடுவுல எது நடந்தாலும் அது அந்த நாலு சுவத்தைத் தாண்டிகிட்டு வெளியே வரக்கூடாது. இது ரொம்ப முக்கியம்"[13]

என்று குறிப்பிடுவதும் கருதத்தக்கது ஆகும்.

குடும்ப இயக்கத்தில் பெண்களின் பங்கு மிகுதி ஆகும். அவ்வியல்பால் அவள் அருங்குணங்களுக்குப் பிறப்பிடமாய், அடக்கமாய், ஆற்றலுள்ளவளாய் ஒருவருக்கொருவர் புரிந்த நிலையைப் பொருளுடையதாக ஆக்குபவளாய்த் திகழ வேண்டியுள்ளது.

## குடும்பங்களும் சரிநிகர் நிலையும்

தமிழ்ச்சமுதாய அமைப்பு ஆணாதிக்கச் சமுதாய அமைப்பில் இயங்கிக் கொண்டிருக்கிறது. அவ்வமைப்பில் குடும்ப நிலைகளில் சில மரபுகளும் உள்ளன. திருமணமானபின் மனைவி கணவன் வீட்டுடன் ஐக்கியமாகிவிட வேண்டும். மனைவி, தன் பிறந்தகத்திலிருந்து பொருட்கள் வாங்கலாமே தவிர உதவிகள் செய்யப்படுகின்ற நிலை வரவேற்கப் படுவதில்லை. கணவன் வழிக் குடும்பமும் மனைவி வழிக் குடும்பமும் சரி நிகர் நிலையாகக் குடும்பத்தில் கருதப் பெற வேண்டும் என்பது சிவசங்கரியின் சிந்தனை ஆகும். இச்சிந்தனையைத் தம் நாவல்களில் இழையோட விடுகிறார்.

'இவர்களும் அவர்களும்' நாவலில் வரும் அபிராமி அலுவல் பார்ப்பவள். தந்தையிழந்த குடும்பம் அவளது குடும்பம். வருமானமற்ற நிலையில் தம்பி தங்கைகள் படித்துக் கொண்டிருக்கின்றனர். தன் சம்பளத்தில் இருந்து உதவி செய்ய விரும்புகிறாள். இவ்விருப்பத்திற்குக் கணவனின் குடும்பம் தடை போடுகிறது. வேறு வழியின்றி அபிராமி குடும்பத்தை விட்டே வெளியேறுகிற சூழல் உருவாகிறது.

## மனைவிக்கு அலுவல்பணி தேவையா?

சிவசங்கரி நாவல்களில் வரும் பெண் பாத்திரங்கள் சிலர் செல்வந்தர் குடும்பம் சார்ந்தவர்கள். பலர் பட்டப்படிப்பைத் தாண்டாதவர்கள். இவர்கள் அலுவலகங்களுக்குச் சென்று அலுவல்பணி மேற்கொள்வதற்கான தேவையும் இல்லாதவர்கள். உயர்கல்வி சார்ந்த பெண் பாத்திரங்கள் மிகக் குறைவு. 'தவம்' நாவலில் சித்தரிக்கப் பெறும் காயத்ரி பி.எச்டி. வரைக்கும் கல்விகற்று ஆய்வு முடித்தவள். இவ்வகையில் அமையும் நாவல்கள் மிகக் குறைவு. குடும்பம் தொடர்பான மற்றைய நாவல்களில் இவ்வகை உயர்கல்வி கற்றவர்கள் பெரும்பாலும் இல்லை.

சிவசங்கரி நாவல்களில் படைக்கப்பெறும் பெண்கள் அலுவலுக்குச் செல்ல வேண்டும்; ஆணுக்கு நிகராகப் பொருள் ஈட்ட வேண்டும் என்ற விருப்பம் இல்லாதவர்கள் என்பது சுட்டத்தக்கதாகும். இந்நிலை குறித்து அப்பாத்திரங்களின் கூற்றை இனி வரும் பகுதிகளில் மதிப்பிடுவது உகந்ததாகும்.

‘மாலையில் பூக்கும் மலர்கள்’ என்ற நாவலில் கௌரி தன் நாத்தனார் மகளிடம்,

> “வேலை பார்த்து நாலு காசு சம்பாதித்தால்தானா? உன் புருஷன் நல்லா சம்பாதிக்கின்றார். வேலை பண்ணனும்கிற அவசியம் உனக்கில்லை. வெளியே போய் வேலை பண்ணினாத்தானா? சமையலுக்கு ஆள் வைச்சுக்காமே நீயே சமைச்சுக்கிறே, டைலருக்குக் கூலி தாரமே நீயே தைக்கிறே, குழந்தை, வீடு, புருஷனை அருமையா பாத்துக்கிறே, இதெல்லாம் வேலை இல்லியா, சோம்பேறித்தனமா வம்படிச்சுகிட்டு வெட்டியா பொழுது போக்கறதுக்குத்தான் வெக்கப்படணும்”[14]

என்று கூறிச் சிவசங்கரியின் சிந்தனை ஒலியினையும் ஒலிக்கச் செய்கிறாள்.

சிவசங்கரியின் நாவல்களில் அலுவலகத்திற்குப் போகும் பெண்களிடம், அலுவலகப் பணிச்சூழல் சார்ந்த களங்களை, சிவசங்கரி அமைக்கவில்லை. அலுவலகத்திற்குப் போகும் பெண்ணுடன் தொடர்புடைய குடும்பப் பின்புலமே பெரும்பாலான நாவல்களில் சித்தரிக்கப் பெறுகின்றது. பொதுவாகக் குடும்பப் பங்கைச் செம்மையாக நிகழ்த்தும் அலுவலகப் பெண் பாத்திரப் படைப்புக்களே குறிக்கத் தகுந்ததாகக் காணப்பெறுகின்றன.

## குடும்பப் பெண்

‘குடும்பப் பெண்’ என்பவள் எப்படி இருக்க வேண்டும். இவ்வினாவிற்கு சிவசங்கரியின் நாவல்களில் இடம்பெறும் பெண்கள் கூறுகிற கூற்றுக்கள் இங்கு கருதத்தக்கவை. சிவசங்கரியே தன் கண்ணோட்டத்திலும் அதற்கான விடையை வெளிப்படையாகவேக் குறிப்பிடுகிறார்.

> “ஒரு பெண் மனப்பூர்வமாக அன்புக்கு அடிமையாகி கொண்டவனுக்குத் தன்னைச் சர்வத் தியாகம் செய்யலாம், தவறில்லை. ஆனால் அன்பின் கூடவே மரியாதையையும் நட்பும் ஆராதனையும் அவளுக்குக் கிடைக்கின்றனவா என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.”[15]

என்பது சிவசங்கரியின் கருத்தாகும். மேலும்,

"சுயமரியாதை, தன்னம்பிக்கை இல்லாமல் ஒரு பெண் வாழ முயற்சிப்பது வாழ்க்கையை அர்த்தம் இல்லாததாக ஆக்குகிறது"[16]

என்ற கருத்திலும் உறுதியாக இருக்கிறார்.

*சிவசங்கரி நாவல்களில் வரும் பாத்திரங்கள் பின்வருமாறு :*

| | | |
|---|---|---|
| அநுசரி அப்புறம் | - | ஜானா |
| மூக்கணாங்கயிறு | - | சந்திரா |
| பொய் | - | துர்க்கா |
| கப்பல் பறவை | - | சுஜா |

மேற்குறித்த நாவல்களில் இடம் பெறும் பெண் பாத்திரங்கள் சுயமரியாதை மற்றும் தன்னம்பிக்கைக்குக் குரல் கொடுப்பவர்களாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளனர்.

விட்டுக் கொடுத்தல், அனுசரித்து வாழ்தல் போன்றவை குடும்பக் கலையின் அங்கங்கள். இதனை உணர்ந்தால் எதனையும் பெரிதுபடுத்தாத மனநிலை வளரும். மன்னிக்கும் பக்குவம் பெருகும். நல்லதை எடுத்துக் கொண்டு தீயதை விலக்கும் பண்பு மலரும். இந்நிலை நேர் எண்ணங்கள் (Positive thinking) வகையில் தொடர்பு படுத்தப் பெறும். இவ்வகை எண்ணங்கள் சிவசங்கரியின் முதன்மைக் கோட்பாடுகளில் ஒன்றென்பதும் இங்குக் கருதத் தக்கதாகும்.

## குடும்பமும் வளர்ச்சி நிலைகளும்

குடும்ப உருவாக்கத்திற்கான, வளர்ச்சிக்கான நிலைகளை நான்காக முன்னியலில் கூறப்பெற்றன. அவையாவன :

- திருமணத்திற்கு முந்தைய நிலை
- திருமண நிலை
- குழந்தை வளர்ப்பு நிலை
- முதிர்ச்சி நிலை

இந்நிலைகள் குறித்த சிந்தனைகள் சிவசங்கரியின் நாவல்களில் இடம் பெற்ற விதம் மதிப்பிடப் பெறலாகிறது.

## திருமணத்திற்கு முந்தைய நிலை

திருமணத்திற்கு முந்தைய நிலை காதலாகும். மனிதன் தோன்றிய ஆதாம் ஏவாள் காலத்திலிருந்து காதலும் தோன்றியது. இயற்கையின் நியதியாய்த் தோன்றும் காதலை 'பாலது ஆணை' எனத் தொல்காப்பியம் குறிப்பிடும். காதலில் கலந்த உள்ளங்களைச் "செம்புலப் பெயல் நீர் போல் அன்புடை நெஞ்சம் தான் கலந்தனவே" என்று சங்கப் பாடலும் எடுத்துரைக்கும். பண்டைத் தமிழரின் அகவாழ்க்கையில் காதலுக்கென்று சிறப்பிடம் இருந்தது.

> "காதல் என்பது வயதுவந்த ஓர் ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே மலரும் அன்பு என்று கருதப் பெறும். அத்தகு காதல் பாலுறவு விருப்புணர்வுடன் கூடியதாகவோ அத்தகைய விருப்புணர்வு இல்லாமலோ அமையலாம்"[17]

என்பது உளவியலார் ஸடீஃபன்ஸ் என்பாரின் கருத்தாகும். பொதுவாகக் காதல் என்பது மிக நுண்மையான உணர்வு என்று மதிப்பிடலாம்.

## சிவசங்கரியின் நாவல்களில் காதல்

காதல் பற்றிய மதிப்பு (value) காலச் சூழலைப் பொறுத்து அமையும். மாறிவரும் சமூகச் சூழலில் காதலுக்குரிய மதிப்பைப் பற்றிய சிந்தனை உருவாக்கம் சிவசங்கரியின் நாவல்களில் இடம் பெறுவது இயல்பாகும். அவ்வியல்பை அறிதல் மற்றும் சிவசங்கரியின் காதல் கொள்கைகளை மதிப்பிடுவது இவ்விடத்தில் சாலப் பொருந்தும்.

## மணம் வீசும் காதல்

திரிவேணி சங்கமம் நாவலில் வரும் மரியா தாம்சன் சங்கருக்கு எழுதிய கடிதத்தில்,

> "காதல் போன்ற உணர்வுகள் தாமாக வர வேண்டும். அப்பொழுது தான் அவை இயற்கையாக இருக்கும். ஆயுள் முழுவதும் இருக்கும்"[18]

என்று குறிப்பிட்டுள்ளார். அவ்வகையில் காதல் உணர்வு இயற்கையாகத் தாமாக எழு வேண்டும் என்பதும் இத்தகு காதல்தான் வாழ்க்கை முழுவதும் இணைந்து மணம் வீசும் என்றும் குறிப்பிடுகின்றார். இக்குறிப்புப் பொதுநிலைக் கருத்தாகும். எனினும், காதல் தோன்றுவதற்குச் சூழலில் பலவிதக் காரணிகளும் இருப்பதைச் சிவசங்கரி நாவல்களில் குறிப்பிடத் தவறவில்லை.

## அழகும் ஆளுமையும்

'நதியின் வேகத்தோடு' நாவலில் சித்தரிக்கப் பெறும் தர்மா மிகவும் அழகானவள். முரளி என்பவனின் நட்பு அவளுக்குக் கிடைக்கிறது. நட்பு படிப்படியாகக் காதலாக மலர்கிறது. காதல் வயப்பட்ட முரளியின் கூற்றாக வரும் வரிகளாவன :

> "உன் அழகு எனக்கு மயக்கம் தருகிறது தர்மா, இது ஏன்? உன்னைப் பார்க்காவிட்டால் உன்னோடு பேசாவிட்டால் எனக்குப் பைத்தியம் பிடித்த மாதிரி இருக்கு. இது ஏன்? இதெல்லாம் எனக்குப் புது அனுபவமா இருக்கு"[19]

என்று கூறுகிறான்.

தர்மாவின் அழகுக் காதலாகிப் புது அனுபவத்தை முரளிக்குத் தருகிறது. அழகு மட்டும் அல்ல பிற இயல்புகளும் காதல் உருவாக்கத்திற்குக் காரணிகளாக இலங்குவதை, தப்புக்கணக்கு என்ற நாவலின் வழி, சிவசங்கரி விளக்குகிறார். அந்நாவலில் வரும் ஆத்மா சாருலதாவை விரும்புகிறான். சாருலதாவிடம் உள்ள அழகு, குணம், எளிமை போன்றவைகளை விரும்பிக் காதல் கொள்வதாகக் கதைஅமைகிறது.

பெண்களும் ஆண்களின் அழகில் மயங்கிக் காதல் கொள்வதை, 'அவர்களுக்குப் புரியாது' நாவலில் குறிப்பிடுகிறார். அலுவலக மேலாளரின் மகள் கமலி, வாசுதேவன் மீது காதல் கொள்கிறாள். அக்காதலுக்கு வாசுதேவனின் அழகும் கம்பீரமும் காரணமென்று கூறப்படுகிறது.

எனினும் காதல் என்ற நுண்ணுர்வு மனம் தொடர்பானது என்பதையும் குறிப்பிட்டுச் செல்கிறார் சிவசங்கரி. மனம் தொடர்பான காதலில்,

"காதலிக்கிற இருதயத்தோட ஆசைகளுக்கு வயசோ படிப்போ குறுக்கே நிற்பதில்லை"[20]

என்ற கருத்தின் வழி மனதின் நிலைக்கு முதலிடம் தரப்பெறுவதைக் காணலாம்.

காமம் சார்ந்த காதலுக்கு சிவசங்கரி வலிந்த ஆதரவு தரவில்லை, என்பதையும் அறிய முடிகிறது.

"காமத்திற்கு இடம் கொடுக்காமல், உடல் சுகத்திற்காக ஏங்காமல், ரசனைகளின்கலப்பின் மூலம் ஆன்ம சங்கமத்திற்கு வழி செய்யும் அற்புதமான உணர்வு"[21]

என்கிற சிந்தனை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

முற்குறிப்பிட்ட கருத்தை ஆசிரியர் தற்கூற்றின் வழியாகவும் நாவலில் வெளிப் படுத்தியுள்ளார்.

"காதல் என்பது நிஜமாகவே மனசு மட்டும் சம்பந்தப் பட்டதுதான். எல்லோரும் எண்ணுவது போல உடம்பு சம்பந்தப் படாமலேயே அதை அற்புதமாக வளர்க்க முடியும் என்பதில் இருவருக்கும் ஆழ்ந்த நம்பிக்கை இருக்கிறது"[22]

என்ற சிந்தனை இணைந்து நோக்கத்தக்கது.

'ஏரிக்கடியில் சில கனவுகள்' நாவலில் தேவியும் மனோகரும் காதலர்கள். காமத் தொடர்பு இல்லாத மன ஒருமைப்பாட்டுக் காதலைக் காதலாகக் கருதுகிறார்கள். உடம்பு சுகம் உண்மையான காதலுக்கு

அடையாளமில்லை, என்ற கருத்து உடையவர்கள். ஒரு வகையில் இவ்வகைக் காதல் ஆன்ம நேயக் காதலாக இருக்கலாம்.

## காதலின் வகைகள்

காதலைக் கீழ்க்கண்டவாறு இரு வகைகளில் பகுத்துப் பார்க்கலாம் :

- நிறைவேறும் காதல்
- நிறைவேறாக் காதல்

## காதல் வகைப்பாடு : வரைபடம்




ஆய்விற்குட்படுத்தப் பெற்ற சிவசங்கரியின் நாற்பத்துநான்கு நாவல்களில் இடம்பெறும் மேற்குறித்த காதல் வகைகள் பின்வருமாறு அட்டவணைப் படுத்தப் பெற்றுள்ளன. வரையறை கருதித் தலைமைப் பாத்திரத்தோடு தொடர்புடைய காதல் செய்திகளே மதிப்பீட்டிற்குள்ளாக்கப் படுகின்றன.

அட்டவணை 4 : 1

## காதல் வகைப்பாடு

| வ. எண் | ஆண்டு | நாவலின் பெயர் | காதலர் பெயர் | நிறை வேறும் காதல் | நிறை வேறாக் காதல் |
|---|---|---|---|---|---|
| 1. | 1971 | திரிவேணி சங்கமம் | சங்கர்–அனுராதா | + | - |
| 2. | 1975 | நதியின் வேகத்தோடு | முரளி – தர்மா | + | - |
| 3. | 1978 | தப்புக் கணக்கு | ஆத்மநாதன் – சாருலதா | + | - |
| 4. | 1979 | ஆயுள் தண்டனை | பரத் – மோஹனா | + | - |
| 5. | 1979 | வளர்த்த கடா | பாஸ்கர் – துளசி | + | - |
| 6. | 1979 | துள்ள முடியாத புள்ளிமான் | ரமணி – புஷ்பா | - | + |
| 7. | 1980 | அவர்களுக்குப் புரியாது | வாசுதேவன் – கமலி | + | - |
| 8. | 1981 | பிராயச்சித்தம் | தயாநிதி – மதுரா | - | + |
| 9. | 1981 | போகப்போக | விசுவநாதன்–புஷ்பா | + | - |
| 10. | 1982 | தவம் | சுதாகர் – காயத்ரி | - | + |
| 11. | 1982 | பாலங்கள் | சித்தார்த்தன் – அபர்ணா | + | - |
| 12. | 1983 | ஆயிரம் காலத்துப் பயிர் | கண்ணன் – மலர்விழி | + | - |
| 13. | 1984 | கருணைக் கொலை | சத்யமூர்த்தி –ஜனனி | + | - |
| 14. | 1986 | அம்மா பிள்ளை | ராஜா – புஷ்பா | + | - |
| 15. | 1987 | மலையின் அடுத்த பக்கம் | கோபி – சித்ரா | + | - |
| 16. | 1987 | வேரில்லாத மரங்கள் | மாதவன் – வசுந்தராமேரி | + | - |
| 17. | 1988 | ஏரிக்கடியில் சில கனவுகள் | மனோகர் – தேவி | + | - |
| 18. | 1989 | வானத்து நிலா | சந்தானம் – மாலினி | + | - |
| 19. | 1991 | சுட்டமண் | ரமணன் – யமுனா | + | - |
| | | | | 16 | 3 |

ஆய்விற்குட்படுத்தப் பெற்ற நாற்பத்துநான்கு நாவல்களில் பத்தொன்பது நாவல்களில் காதல் இடம் பெற்றுள்ளது. அவ்வகையில் பதினாறு நாவல்கள் நிறைவேறும் காதல் வகையில் இடம் பெறுகின்றன. மூன்று நாவல்களில் இடம்பெறும் காதல்கள் நிறைவேறாக் காதல் வகையில் அமைகின்றன. காதலர்கள் திருமணத்தில் சங்கமமாகிவிட வேண்டும் என்கிற நேர்எண்ணங்கள் (Positive thinking) சிவசங்கரியின் நாவல்களில் இடம் பெற்றிருக்கும் நிலை மதிப்பிடப் பெறுகிறது.

## நிறைவேறும் காதல்

இவ்வகைக் காதலில் திருமணம் நிகழ்வுறும். நிறைவேறும் காதல் இரு மனங்கள் தொடர்பு கொண்ட காதலாகும்.

ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் விரும்பிக் காதல் கொள்ளும் நிலை இருமனக் காதலாகும். காதல்சூழல் இடம்பெற்றுள்ள பத்தொன்பது நாவல்களில் 16 நாவல்களில் இருமனக்காதல் இடம் பெற்றுள்ள நிலையை அட்டவணையின் (4 : 1) வழி உணரலாம்.

காதல் உணர்வில் ஆண் மற்றும் பெண் மனங்கள் ஒன்றுபட்டு இருக்க வேண்டும் என்பது சிவசங்கரியின் கருத்து ஆகும். தவம் நாவலில் வரும் காயத்ரி என்ற பாத்திரம் சுதாகர் என்ற பாத்திரத்துடன் பேசுகிற உரையாடல் வருமாறு :

> "நல்ல நட்பு, ஈடுபாடு, ஈர்ப்பிலிருந்து ஜனிக்கிறதுதான் காதல்"[23]

என்று குறிப்பிடுவதும் இவண் கருதத்தக்கது. காதல் இருமனக் காதலாக இருந்தாலும் இயல்பாக வரவேண்டுமென்ற கருத்தில் உறுதிபட இருக்கிறார். திரிவேணி சங்கமத்தில் இடம் பெறும் மரியா – தாம்சன் என்ற பாத்திரக் கூற்றில்,

> "காதல் போன்ற உணர்வுகள் தாமாக வரவேண்டும். அப்பொழுதுதான் அவை இயற்கையாக இருக்கும். ஆயுசு முழுவதும் இருக்கும்"[24]

என்று குறிப்பிடுகிறார்.

ஒத்த உணர்வுடன் உருவாகும் இருமனக் காதலுக்குத் தடைகள் இருப்பதில்லை. இதனை 'இன்னொருத்தி + இன்னொருத்தி' என்ற நாவலில் வரும் கல்பனா என்ற பாத்திரக் கூற்றின் வழி உணரலாம். அப்பாத்திரம் விஜயன் என்ற பாத்திரத்துடன் உரையாடும் பொழுது,

> "காதலிக்கிற இருதயத்தோட ஆசைகளுக்கு வயசோ படிப்போ குறுக்கே நிற்பதில்லை"[25]

என்று கூறுகிறது.

நிறைவேறும் காதலான இருமனக் காதலைப் பின்வருமாறு இரு நிலைககளில் பகுத்துப் பார்க்கலாம்.

- இயல்புக் காதல்
- உயர் காதல்

## இயல்புக் காதல்

இவ்வகைக் காதலில் உடல் உறவும் மன உறவும் சமமாக இருப்பதால் இயல்பக் காதல் எனக் கூறப்பெறுகிறது. சிவசங்கரியின் நிறைவேறும் காதல் வகைப்பாடான பதினாறு நாவல்களில் இயல்புக் காதல் இடம் பெற்றறுள்ளது. எதார்த்தமான வாழ்வியல் சிறக்க இயல்புக்காதல் துணை நிற்குமென்பது சிவசங்கரியின் கருத்தெனத் தெரிகிறது.

'சுட்டமண்' நாவலில் யமுனா என்ற பாத்திரம் இடம் பெற்றுள்ளது. இப்பாத்திரம் ரமணன் என்ற பாத்திரத்துடன் உரையாடும் பொழுது,

> "பசி உறக்கம் மாதிரி காதலும் ஒரு இயற்கையான உணர்வு. இது எல்லார்கிட்டேயும் நினைச்ச சமயத்திலே உண்டாகிற விஷயம் இல்லே. நாம ரொம்ப மதிப்பு வைச்சிருக்கிற நபர்கிட்டதான் காதல் உருவாகும்"[26]

என்று கூறுகிற கருத்துக்கள் இங்கு கருதத்தக்கவையாகும். ஒருவரையொருவர் மதித்து அன்பு கொள்கிற பொழுது இயற்கைக் காதல் உருவாகும்.

மேலும்,

> “பரஸ்பர மரியாதை, பாராட்டு, அன்பு என்ற மூன்று குணங்கள் மிகவும் முக்கியம். நாம் பலர்கிட்ட இந்த மூணு குணங்கள் ஜனிக்க நெருங்கிப் பழகினாலும் அது காதல் ஆகாது. ஆனால் இந்த மூன்றையும் அடிப்படையாகக் கொண்டு அந்த உறவு இன்னும் வளரும் பொழுது உண்டாகிற உணர்வுதான் காதல். இது எல்லார்கிட்டேயும் தோன்றாது”[27]

என்கிற கூற்றும் இயல்புக் காதலின்நிலை வளர்ச்சி பெறுவதற்கான அடிப்படைச் சூழலைக் குறிப்பிடுகிறது.

இயல்புக் காதலை மேலும் இருவகைகளாகப் பகுத்துப் பார்க்கலாம்.

- உறவினரிடையே தோன்றும் இயல்புக் காதல்.
- உறவு இல்லாதவரிடையே தோன்றும் இயல்புக் காதல்.

மேற்குறித்த வகைப்பாட்டினை மையமாகக் கொண்டு பின்வரும் அட்டவணை அமைகிறது.

அட்டவணை 4 : 2

## இயல்புக் காதல் வகை

| வ. எண் | நாவலின் பெயர் | காதலர் பெயர் | உறவினர் இடையே தோன்றும் காதல் | உறவு இல்லாத வரிடம் தோன்றும் காதல் |
|---|---|---|---|---|
| 1. | திரிவேணி சங்கமம் | சங்கர்–அனுராதா | - | + |
| 2. | நதியின் வேகத்தோடு | முரளி – தர்மா | - | + |
| 3. | தப்புக் கணக்கு | ஆத்மநாதன் – சாருலதா | - | + |
| 4. | ஆயுள் தண்டனை | பரத் – மோஹனா | - | + |
| 5. | வளர்த்த கடா | பாஸ்கர் – துளசி | - | + |
| 6. | அவர்களுக்குப் புரியாது | வாசுதேவன் –கமலி | - | + |
| 7. | போகப்போக | விசுவநாதன்–நித்யா | - | + |
| 8. | பாலங்கள் | சித்தார்த்தன் – அபர்ணா | - | + |
| 9. | ஆயிரம் காலத்துப் பயிர் | கண்ணன் – மலர்விழி | - | + |
| 10. | கருணைக் கொலை | சத்யமூர்த்தி –ஜனனி | - | + |
| 11. | அம்மா பிள்ளை | ராஜா – புஷ்பா | + | - |
| 12. | மலையின் அடுத்த பக்கம் | கோபி – சித்ரா | - | + |
| 13. | வேரில்லாத மரங்கள் | மாதவன் – வசந்தராமேரி | - | + |
| 14. | ஏரிக்கடியில் சில கனவுகள் | மனோகர் – தேவி | - | + |
| 15. | வானத்து நிலா | சந்தானம் – மாலினி | - | + |
| 16. | சுட்டமண் | ரமணன் – யமுனா | - | + |
| | | | 1 | 15 |

## உறவினரிடையே தோன்றும் இயல்புக் காதல்

இவ்வகைக்காதல் உறவினர்களாக உள்ள ஆண் மற்றும் பெண் இருபாலர்க்குமிடையே தோன்றும் காதலாகும். இவ்வகையில் இருபாலரும் சிறுவயது முதல் ஒரே வீட்டில் வளரும் சூழ்நிலை அமையலாம். அத்தகு சூழல் இல்லாமலும் அமையலாம். மாமன் மகன்–மகள், அத்தை மகன்–மகள் என உறவுகள் அமையும். முறை சார்ந்த உறவுகள் தமிழ்ப்பண்பாட்டில் முன்பு கோலோச்சிய நிலையை வரலாற்றின் வழி உணரலாம்.

சிவசங்கரியின் நாவல்களில் உறவினர்களிடைய தோன்றும் காதல் ஒரு நாவலில் மட்டுமே இடம் பெற்றுள்ளது. 'அம்மா பிள்ளை' நாவலில் வரும் ராஜா சிங்கப்பூருக்குச் சுற்றுலா செல்கிறான். அங்கு மாமா வீட்டில் தங்குவதற்கான சூழல் உருவாகிறது. மாமன் மகள் புஷ்பாவிடம் காதல் கொள்கிறான். தன் தாய் இசைவுடன் புஷ்பாவை ராஜா திருமணம் செய்து கொள்வதாகக் கதை அமைகிறது.

மொத்தம் உள்ள நாற்பத்து நான்கு நாவல்களில் ஒரே ஒரு நாவலில் உறவினரிடையே காதல் என்ற நிலை அமைகிறது. இந்நிலையானது சிவசங்கரியின் மனநிலையைத் தெளிவாக விளக்குவதாக உள்ளது.

இவ்வகையில் சிவசங்கரி உறவினர்க்கிடையே தோன்றும் காதலை ஆதரிக்கவில்லை என்பதும் அறியப் பெறுகிறது. அறிவியல் பரிணாமம் பெற்ற இன்றையச் சமுதாயச் சூழலில் உறவினர் தொடர்பான உறவுநிலைத் திருமணங்கள் வரவேற்கப் பெறுவதில்லை. இந்நிலையின் தாக்கம் சிவசங்கரியின் குடும்ப நாவல்களில் பிரதிபலிக்கக் காணலாம்.

## உறவு இல்லாதவரிடம் தோன்றும் காதல்

முன்பின் அறியாத ஓர் ஆணும் பெண்ணும் சந்தித்து, நட்பாகி அஃது காதலாகிப் பரிணமிப்பது இவ்வகையில் அடங்கும். இவ்வகைக் காதல் பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் இருந்ததை,

"யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே"

என்ற சங்கப் பாடலின் வழி உணரலாம். சிவசங்கரி இவ்வகைக் காதலைப் பதினைந்து நாவல்களில் இடம் பெறச் செய்துள்ளமை நோக்கத் தக்கதாகும். இவ்வகைக் காதலை மேலும் இரு வகைப்படுத்திப் பார்க்கலாம். அவையாவன :

- ஒரே சாதியில் (இனம்) அமையும் காதல்.
- வேறு சாதியில் (இனம்) அமையும் காதல்.

மேற்குறித்த வகைப்பாட்டினைக் கருத்தில் கொண்டு அதற்கான அட்டவணைக் கொடுக்கப் பெற்றுள்ளது.

அட்டவணை 4 : 3

## உறவு இல்லாதவரிடம் தோன்றும் காதல்

| வ. எண் | நாவலின் பெயர் | காதலர் பெயர் | ஒரே சாதியில் அமையும் காதல் | வேறு சாதியில் அமையும் காதல் |
|---|---|---|---|---|
| 1. | திரிவேணி சங்கமம் | சங்கர்–அனுராதா | + | - |
| 2. | நதியின் வேகத்தோடு | முரளி – தர்மா | + | - |
| 3. | தப்புக் கணக்கு | ஆத்மநாதன் – சாருலதா | - | + |
| 4. | ஆயுள் தண்டனை | பரத் – மோஹனா | - | + |
| 5. | வளர்த்த கடா | பாஸ்கர் – துளசி | - | + |
| 6. | அவர்களுக்குப் புரியாது | வாசுதேவன் –கமலி | + | - |
| 7. | போகப்போக | விசுவநாதன்–நித்யா | - | + |
| 8. | பாலங்கள் | சித்தார்த்தன் – அபர்ணா | - | + |
| 9. | ஆயிரம் காலத்துப் பயிர் | கண்ணன் – மலர்விழி | - | + |
| 10. | கருணைக் கொலை | சத்யமூர்த்தி –ஜனனி | - | + |
| 11. | மலையின் அடுத்த பக்கம் | கோபி – சித்ரா | - | + |
| 12. | வேரில்லாத மரங்கள் | மாதவன் – வசந்தராமேரி | - | + |
| 13. | ஏரிக்கடியில் சில கனவுகள் | மனோகர் – தேவி | - | + |
| 14. | வானத்து நிலா | சந்தானம் – மாலினி | - | + |
| 15. | சுட்டமண் | ரமணன்– யமுனா | - | + |
| | | | 3 | 12 |

ஒரே சாதி அல்லது இனத்தில் அமையும் காதலாக மூன்று நாவல்கள் அமைந்துள்ளநிலை அட்டவணையின் வழி மதிப்பிடப் பெற்றது. உறவு இல்லாதவர்களிடம் தோன்றும் காதல்களில் வெவ்வேறு சாதி அல்லது இனத்தைச் சார்ந்தவர்களாக பனிரெண்டு நாவல்கள் அமைக்கப் பெற்ற நிலையும் அட்டவணையின் வழி மதிப்பிடப் பெற்றது.

பொதுவாகக் காதல் இனம், மொழி, பண்பாடு போன்ற எல்லைகளைத் தாண்டி இயங்கும் தன்மைத்து ஆகும். சிவசங்கரியின் காதல் கோட்பாட்டில் காதலை 'மனம்' தொடர்பானதாகவே கருதுகிறார். மனம் ஒன்றினால் சாதி அல்லது இனம் என்கிற வேறுபாடு தேவையில்லை என்ற சிந்தனையும் இயல்பாகிறது. இந்நிலையை உட்கொண்டு பிற சாதி சார்ந்த காதல்களை, சிவசங்கரி படைத்துக் காட்டியுள்ளார் என மதிப்பிடலாம்.

மாதவனும் வசுந்தராமேரியும் ஒருவரையொருவர் விரும்புகின்றனர். இருவரும் வெவ்வேறு சமயத்தைச் சார்ந்தவர்கள். குடும்ப வாழ்வில் சமயமாற்றம் குறித்த சிக்கல் எழுந்தது. இந்த நிலையில் வசுந்தராமேரியின் கூற்றில்,

> "நீங்க நீங்களா இருங்க. நா, நானா இருக்கேன். அன்பு இருக்கிறப்போ மதம் மாறவேண்டிய அவசியம் இருக்கிறதா நா நினைக்கலே, ஒருத்தர் மதப் பழக்க வழக்கத்தை மற்றவர் மதிக்கக் கத்துகிட்டாப் போதும், ஏற்று வாழணும்கிறது கட்டாயம் இல்ல. நாம ஒருத்தரை ஒருத்தர் நேசிக்கிறோம். இதுதான் முக்கியம் இல்லியா .. மாது"[28]

என்று கூறுகிறாள். கூறுவதும் பெண் என்பது கருதத் தக்கது. காதலுக்குச் சமய மாற்றம் தடையாக இருக்கக் கூடாது என்கிற பெண்மைச் சிந்தனை சற்றுப் புரட்சி சார்ந்த குரலெனவும் கூறலாம். பண்பாட்டுச் சூழலில் அத்தகு குரலை ஒலிக்க விடமாட்டார்கள். ஆனால் சிவசங்கரி தொலை நோக்குப் பார்வையுடன் ஒலிக்க விடுகிறார்.

உறவு இல்லாதவர்களிடம் அமையும் காதல் ஒருவகையில் கலப்புத் திருமணத்திற்கு ஆதாரமான கலப்புக் காதல் என்றும் கூறலாம். பெண்கள் தங்கள் காதலைப் பெற்றோர்களிடம் உறுதியுடன் எடுத்துக் கூறுபவர்களாக சிவசங்கரி சித்தரித்துள்ளமையும் கருதத்தக்கது. 'போகப் போக' நாவலில் வரும் நித்யா, விசுவநாதனை விரும்புகிறாள். விசுவநாதன் ஏழ்மையானவன்

என்று தெரிந்தும் காதல் கொள்கிறாள். தன் காதலைப் பெற்றோர்களிடம் தைரியமாக எடுத்துக் கூறித் திருமணத்திற்கு அனுமதி கேட்கிறாள். அவர்கள் மறுத்த பொழுது, தன் செல்வ வாழ்க்கையை உதறிவிட்டுத் தைரியமாக வெளியேறி, காதல் மணம் செய்து கொள்கிறாள்.

'மலையின் அடுத்த பக்கம்' நாவலில் சித்ரா தன் பேராசிரியரின் தம்பி கோபியிடம் காதல் கொள்கிறாள். அவர்கள் சாதியினால் வேறுபட்டவர்கள் என்று தெரிந்தும் காதலிக்கிறாள். பெற்றோர்களிடம் எடுத்துரைக்கும் துணிவு பெற்றவளாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளாள்.

'ஆயிரம் காலத்துப் பயிர்' மலர்விழியும் காதலனான கண்ணனும் வெவ்வேறு சாதியைச் சார்ந்தவர்கள். வேலை பார்ப்பவர்கள். பெற்றோர்கள் சம்மதத்துடன் திருமணம் செய்து கொள்கின்றனர். வேறு சாதியில் (இனத்தில்) காதல் அமைவதாக உள்ள நாவல்களை உருவாக்கியமை சிவசங்கரியின் அடித்தள எண்ணங்களின் வெளிப்பாட்டு நிலையெனக் கருதலாம். இவ்வகைக் காதலில் பெண்கள் கற்றவர்களாகவும் அலுவல் செய்பவர்களாகவும், நகரத்தைச் சார்ந்தவர்களாகவும் இருக்கின்றனர். பெற்றோர்களிடம் காதலைத் துணிவாக வெளிப்படுத்தும் மனப்பாங்கு உடையவர்களாகவும் உள்ளனர். குறிப்பாகச் செல்வந்தர் வீட்டுப்பெண்கள் தாங்கள் நினைத்ததைச் சாதிக்கும் ஆளுமையில் 'கலப்புக் காதலை' இணைத்துச் சாதிக்கிற நிலையும் கருதத்தக்கதாகும்.

## உயர் காதல்

உயர் காதல் என்பது இயல்புக் காதலினின்றும் வேறுபட்டது. இவ்வகைக் காதலில் காதலர்கள் தங்கள் காதலியின் உடல் அழகிற்கு முதன்மை தராமல் மன அழகிற்கு முதலிடம் தருவார்கள். 'ஏரிக்கடியில் சில கனவுகள்", 'மாலையில் பூக்கும் மலர்கள்' என்பது போன்ற சில நாவல்களிலேயே இவ்வகைக் காதல் சித்தரிக்கப் பெற்றுள்ளது.

'ஏரிக்கடியில் சில கனவுகள்' நாவலில் தேவியும் மனோகரும் காதலர் ஆவர். இவர்கள் இயல்பான காதலின்றும் மேன்மை பெற்றவர்கள்.

"எல்லாரும் எண்ணுவது போல உடம்பு சம்பந்தப்படாமலேயே காதலை அற்புதமாக வளர்க்க முடியும் என்பதில் ஆழ்ந்த நம்பிக்கை இருந்ததால் இது நாள் வரை ஒருவரையொருவர் தீண்டியது இல்லை"[29]

என்பது ஆசிரியர் குரலாகும். "உடல் நெருக்கத்தைப் பெரிய விஷயமாக நினைத்துக் கொண்டு ஏங்காமல், விவாதிக்காமல் ஒருவரைப்போல அடுத்தவரும் இருப்பதை உணர்ந்து, மகிழ்ந்து மௌனம் மூலமாகவே புரிந்து ஏற்றுக் கொண்டிருந்தனர்". இத்தகு காதலர்கள் எதார்த்த வாழ்வியலுக்கு அரிதுதான்.

'மாலையில் பூக்கும் மலர்களில்' வரும் சாந்தி, பாலாஜி ஆகிய இருவரும் காதலர்கள். ஆணுக்குக் காதல் உணர்வைக் கடந்த வயது; எனினும் முதுமையில் துணையாக அமையும் வயது கடந்த காதலுக்கு இளமை வேண்டுமென்பது விதியல்ல. மன அழகு காதலுக்கு உரமூட்டுகிறது. மாலையில் பூக்கும் மலர்களை இனங்கண்டு வரும் வண்டுகளுக்கு மலரின் அழகு, கவர்ச்சி தேவையில்லை. மகரந்த மணத்தை நாடி இயல்பாக வண்டு வரும். அது போல கவர்ச்சியற்ற மன அழகான குணத்தின் பரிணாமம் முதுமைக் காதலின் அடித்தளமாக்கப் பெற்றுள்ளது.

## நிறைவேறாக் காதல்

நிறைவேறாக் காதல் நிலையில் மூன்று நாவல்கள் அமைந்துள்ளன.

ஆணும் பெண்ணும் ஒருவர் மீது ஒருவர் அன்பு கொண்டிருந்தும், அக்காதல் திருமணத்தில் முடியாத நிலை இவ்வகையில் அடங்கும். எடுத்துக்காட்டு விளக்கமாக,

'துள்ள முடியாத புள்ளிமான்' நாவலில் வரும் ரமணியையும் புஷ்பாவையும் குறிப்பிடலாம். இருவரும் ஒருவரையொருவர் விரும்பிக் காதலித்தனர். புஷ்பாவிற்கு வெண்குட்ட நோய் வந்தது. காதலன் ரமணித் தன் காதலை உதறித் தள்ளுகிறான். ரமணியின் காதலில் நோய்க்கு முன் புஷ்பாவிடம் இருக்கும் அழகுதான் முதன்மை பெற்றிருந்தது. அழகைச் சிதைக்கும் நோயில், அவளின் அன்பு என்ற மன அழகைச் சற்றும்

புரியாதவனாகின்றான. புரியாமையும் காதலைப் புனிதமாகவும் கருதப் பெறாத ரமணியிடமிருந்து புஷ்பா நோயால் விலக்கப் பெறுகிறாள்.

## II திருமண நிலை

குடும்ப உருவாக்கத்தின் வளர்ச்சி நிலைகளில் திருமணம் இரண்டாவது நிலையாகும். தமிழ்ச் சமூகத்தில் திருமணம் மிகப் புனிதமாகக் கருதப் பெறும். பழம் மரபைச் சார்ந்த வாழ்வியல் மதிப்புகள் பல திருமண நிலையுடன் தொடர்பு கொண்டுள்ளன. அத்தகு திருமணம் குறித்து சிவசங்கரியின் கருத்துருவாக்கங்களை அவரின் நாவல் படைப்பாக்கத்தின் வழி மதிப்பிடும் முயற்சி மேற்கொள்ளப் பெற்றுள்ளது.

## ஆயிரம் காலத்துப் பயிர்

சிவசங்கரி திருமணம் பற்றிய சிந்தனைகள் பலவற்றை, அவர் படைத்துக் காட்டும் பாத்திரக் கூற்றுகளின் வழிக் காணலாம். ‘அம்மா பிள்ளை’ நாவலில் ராஜா என்கிற பாத்திரம் இடம் பெற்றுள்ளது. மிகுந்த செல்லத்துடன் வளர்க்கப் பெறுகிறாள். அவனுடைய முதல் திருமணம் வேண்டாத காரணங்களால் முழுமையடையவில்லை. ராஜா நாட்டியக்காரியுடன் தொடர்பு கொண்டு ஊரைப் பகைத்துத் திருமணம் செய்து கொள்கிறான். இவனது பணத்தைக் கவர்ந்து கொண்டு அவள் திரைப்படத் துறைக்குப் போய்விடுகிறாள். மனச்சோர்வைப் போக்க சிங்கப்பூர் செல்கிறான். அங்கு மாமா மகள் புஷ்பாவைக் காதலிக்கிறான். திருமணம் செய்து கொள்ள பிடிவாதம் செய்கிறான். அப்பொழுது

> “இது தப்பு தம்பி, ஒரு பெண்ணோடு உறவு கொள்ளும் திருமணம் என்பது விளையாடும் சமாச்சாரம் இல்லை. அது ஆயிரம் காலத்துப் பயிர். உன் மனதைச் சரி பண்ணிக் கொண்டு ஒழுங்காக வாழ முயற்சி செய்”[30]

என்று தாய் ரங்கம்மாள் ராஜாவுக்கு அறிவுரை கூறுகிறாள்.

சுட்ட மண் நாவலில் இடம் பெறும் ரமணன் – யமுனா இருவரும் தனித் தன்மையைக் காப்பாற்றுகிற கொள்கையுடையவர்கள். அறிவார்ந்த முதிர்ச்சியும் உடையவர்கள். நட்பால் ஈர்க்கப் பெற்றுத் திருமணம் செய்து

கொள்கின்றனர். தனித்தன்மையைக் காப்பாற்றும் நியைில் பலப் பிரச்சினைகளை எதிர்கொள்ளுகின்றனர். அப்பொழுது ஆசிரியர் கூற்றில்

"கல்யாணம்கிறது ஆயிரம் காலத்துப் பயிர். அதுல பல தினுசான அநுபவங்கள் இருக்கத்தான் செய்யும். ஒதுக்க வேண்டியதை ஒதுக்கிக் கொண்டு, எடுத்துக்க வேண்டியதை எடுத்துக்கிடறது தானே விவேகம்"[31]

என்ற கருத்துக் கூறப்படுகிறது. இக்கூற்றும் கதையும் 'சுட்டமண்' நாவலில் இடம் பெறுவதாகும்.

திருமணம் என்பது விளையாட்டுச் செயல் அல்ல; வேகமான முடிவுடன் தொடர்புடையதும் அல்ல. திருமணம் என்கிற பயிர் நீண்டகாலம் உயிரோடு இருக்க வேண்டிய பயிர். இடையிலே கருகி விடக் கூடாது. அத்திருமண வாழ்க்கைக்கு மன ஒழுங்கு மிகவும் தேவையானதாகும். திருமண வாழ்வில் பல வகையான அனுபவங்கள் இருக்கத்தான் செய்யும். ஏற்றுக் கொள்ள வேண்டியதை ஏற்றும், ஒதுக்க வேண்டியதை ஒதுக்குவதும் விவேகமான செயல்கள் என சிவசங்கரி கருத்துக்களைத் தெரிவிக்கிறார்.

## திருமண வயது

வேறுபட்ட தலைமுறைகளைச் சார்ந்த பாத்திரங்கள் தங்கள் தங்கள் காலத்துக்குரிய குரலை நாவலில் ஒலிக்கின்றனர். ஆண், பெண் இருபாலரில் பெண்ணுக்குத்தான் விரைவாகத் திருமணம் செய்துவிட வேண்டும் என்கிற கருத்து, சமூகத்தின் குரல் என மதிப்பிடத் தோன்றுகிறது.

'பாலங்கள்' மூன்று காலக் கட்டங்களுக்குரிய கதையமைப்பைக் கொண்ட நாவலாகும். அந்நாவலில் இரண்டாம் கால கட்டத்தில் வாழும் ஆனந்தம் பாட்டி தன் மகன் சுந்தரத்திடம்,

"அந்தக் காலத்தில் பெண் குழந்தைகள் இளசா இருக்கிறப்பவே ஒருத்தன் கையிலே பிடிச்சுக் கொடுத்துடுவா. நினைவு தெரிஞ்ச நாளிலிருந்து அவன் மொகத்தை மட்டும் பார்த்து வளர்ந்ததாலே ஒழுக்கம் கட்டுப்பாடுன்னு எல்லாம் இருந்தது"[32]

என்று கூறுகிறாள். பெண்களுக்கு அக்காலத்தில் சிறுவயதுகளில் திருமணம் செய்யும் பழக்கம் இருந்ததை அப்பாத்திரம் அக்காலத்துக் குரலில் தெரிவிக்கிறது.

'ஆனந்தம் பாட்டி' பெண்களுக்குரிய திருமண வயதும் குறித்துக் கருத்து தெரிவிக்கிறார்.

> "பெண்ணோ பீர்க்கங்காயோனு சொல்லுவா. இப்பவே மைதிலிக்குப் பதினெட்டு பொறந்தாச்சு. . முத்திப் போனப்புறம் கல்யானம் பண்ணறது அசிங்கம்"[33]

என்றும் குறிப்பிடுகிறாள்.

பீர்க்கங்காய் வேகமாய் வளரும் இயல்புடையது. அதுபோல பெண்களின் உடல் வளர்ச்சியும் விரைவில் நிகழும். இந்நிலையைக் கருத்தில் கொண்டு அவர்களின் திருமண வயது 'பதினெட்டு' எனக் குறிப்பிடுவதைக் காண முடிகிறது.

'திரிசங்கு சொர்க்கம்' நாவலில் கமலி என்பவள் அண்ணன்–அண்ணி பாதுகாப்பில் இருக்கிறாள். அண்ணி திருமணம் பற்றிப் பேசும்பொழுது திருமணத்திற்கு என்ன அவசரம் .... என்று கமலி வினவுகிறாள். அப்பொழுது அண்ணி,

> "இப்போதைக்கு வேணாம்னு சொல்ல நீ இன்னும் குழந்தையா. இருப்பத்திரண்டு முடிஞ்சி, அடுத்த மாதம் இருபத்து மூணு துவங்கப் போகுது. பெண்ணும் பீர்க்கங்காயும் ஒண்ணுன்னு சொல்வாங்க ..... இளசா இருக்கறப்பதான் மவுசு .... முத்திட்டா செல்லாதும்மா ...."[34]

என்று குறிப்பிடுவதும் முற்சுட்டிய கருத்தை வலியுறுத்தக் காணலாம்.

மூத்த தலைமுறையினரின் காலத்தில் பதினெட்டு வயதிற்கு முன்பே கூடத் திருமணம் நடந்ததை அத்தலைமுறைப் பாத்திரங்களின் உரையாடல் வழியே தெரிய வருகிறது.

'நதியின் வேகத்தோடு' நாவலில் தர்மாவிற்குப் பதினெட்டு வயது நடக்கிறது. வீட்டில் நிச்சயதார்த்தம் நிகழ இருக்கிறது. காலையில் தர்மா விரைவில் எழுந்து காரியங்களைப் பார்க்கவில்லை. அப்பொழுது அவளின் பாட்டி,

"உன் வயசிலே நேக்குக் கல்யாணமாகி ரெண்டு குழந்தைகள் கூடப் பொறந்தாச்சு . . கார்த்தால மூணு மணிக்கு எழுந்து முதுகெலும்பு உடைய வேலை பண்ணுவேன். நீ ஆறு மணி வரைக்கும் தூங்கறையே...."[35]

என்று இடித்துரைக்கிறாள்.

மூத்த தலைமுறையினரில் பெண் பாத்திரங்கள் மட்டுமின்றி, ஆண் பாத்திரங்களும் பெண்களுக்கு விரைவில் திருமணம் நிகழ்த்த வேண்டும் என்கிற கருத்து உடையவர்களாகவே இருப்பது இங்கு கருத்ததக்கது. 'தான் தன் சுகம்' நாவலில் முத்துக்கிருஷ்ணன் தன் மனைவி பாக்கியத்திடம் உரையாடுகிறார். தன் மகளைப் பற்றிய அவ்வுரையாடலில்,

"தனத்தை ரொம்பச் சீக்கிரம் கட்டிக் கொடுத்திடணும் பாக்கியம். உனக்குப் பதினெட்டு வயசிலேயே கல்யாணம் ஆச்சு இல்லை. அதே போல் இவளையும் அந்த வயசிலேயே கட்டிக் கொடுத்திடணும். முத்திப் போக விடாம, பெண் பிஞ்சா இருக்கிறப்பவே புருஷன் கையிலே ஒப்படைச்சிடணும்"[36]

என்று குறிப்பிடுகிறார்.

திருமண வயதில் ஆண்களைக் காட்டிலும் பெண்களுக்கு வயது குறைவாக இருக்க வேண்டுமென்பது வாழ்வியல் மரபில் நீண்டகாலமாகவே இருந்து வருகிறது. 'கோழைகள்' என்கிற குறுநாவலில் அம்மரபுத் தொடர்பான சிந்தனையைப் பாத்திரக் கூற்றில் வைத்து சிவசங்கரி வெளிப்படுத்துகிறார். சேஷன் என்பவன் சமையற்கார மாமியின் பேத்தியை விரும்புகிறான். அவ்விருப்பத்தை அறிந்த தாய் ஜெயம்மா கூறுவதாவது,

"அவளுக்குக் கிட்டத்தட்ட பத்தொன்பது இருபது வயசாறது தெரியுமா. இப்பவே உன்னைவிடப் பெரியவா மாதிரி இருக்கா . . இன்னும்

கொஞ்சம் வருஷம் போனா உனக்கு அக்கா மாதிரித்தான் இருப்பா ...... பெண்டாட்டிங்கிறவ, ஆம்படையானைவிட ஏழெட்டு வயசு சின்னவளா இருந்தாத்தான் அழகு. நாளைக்கு உனக்கு முடியாதப்போ அவ சின்ன வயசா இருந்து, ஓடி ஓடி கவனிச்சிப்பா. இளமையா கட்டு விடாம இருப்பா. நாங்க உனக்கு பெண் பார்த்திருக்கமே .... இவளுக்குப் பதினாறு வயசுதாண்டா."[37]

இக்கூற்றுத் தாயின் கூற்றாகும். அத்தாயின் கூற்று அவள் காலத்திய சூழலை மனதில் கொண்டு கூறப் பெறுவதாகக் கருதலாம்.

மேற்குறிப்பிட்டது போல சிவசங்கரியின் பாத்திரங்களில் மூத்த தலைமுறையினர் பெண்ணைப் பதினெட்டு வயதிலேயே திருமணம் செய்து வைக்க விரும்புவதை உணர முடிகிறது. அடுத்த தலைமுறையினரிடம் வயதைப் பற்றிய கண்டிப்பு இல்லாவிட்டாலும் வயதிற்கு வந்த பெண்ணை வீட்டில் வைத்திருப்பதை விரும்பவில்லை என்பதையும் உணர முடிகிறது. காட்டாக 'ருசி கண்ட பூனை' நாவலில் ராஜம் தன் மகள் ரத்னாவிடம்,

"வயசுப் பொண்ணை வச்சுகிட்டுத் தனிப் பொம்பளையா இருக்கப் பயமாத்தான் இருக்கு. நீ படிப்பை முடிச்சதும் நல்லப் பையனாப் பார்த்துக் கல்யாணத்தைச் செஞ்சு கிட்டாத்தான் எனக்கு நிம்மதி"[38]

என்கிற கூற்று இக்காலத் தலைமுறையைச் சார்ந்த தாயர்க்கும் பெண்களை வீட்டில் வைத்திருப்பது எதார்த்த வாழ்விலும் விரும்பத் தகாததாக இருப்பதை அறியலாம்.

சிவசங்கரி நாவல்களில் படைத்துக் காட்டும் பாத்திரக் கூற்றுகளிலிருந்து, பெண்களுக்குரிய வயது பதினெட்டிற்கு மேம்பட்டதெனக் குறிப்பது தெளிவாகிறது. அழகும் இளமையும் உடைய இப்பருவமே திருமணத்திற்கேற்ற பருவம். பருவம் தப்பிச் சற்று முதிர்வு நேரின் பெண்கள் திருமணம் சற்றுச் சிக்கலானதாக அமையும். பெண்களைப் பெற்றவர்களும் வயதிற்கு வந்த பெண்ணை வீட்டில் வைத்துக் காப்பாற்றுவது எப்படி என்று அச்சப்படுகின்றனர். காலாகாலத்தில் ஒருவன் கையில் பிடித்துக் கொடுத்து விட்டால் பொறுப்பு நிறைவேறுவதாகக் கருதுகிறார்கள். ஆண்களை விடப் பெண்களின் வயது திருமணத்தில் குறைவாகவே இருக்கும் எதார்த்தப் போக்கும் வெளிப்படுத்தப் பெறுகிறது.

சிவசங்கரியின் நாவல்களில் திருமணம் குறித்த கதைப்போக்குகளில் பெண்களின் வயது பதினெட்டிலிருந்து இருபத்து மூன்றிற்குள் இருப்பதை ஆய்வின் வழி உய்த்துணர முடிகிறது. கல்லூரியில் பட்டப் படிப்பை முடித்தோ அல்லது இறுதியாண்டில் படிப்பவளாகவோ படைக்கப்பட்டுள்ளமையும் இங்குக் கருதத்தக்கதாகும். ஆண்கள் வயதில் குறிப்பிட்ட வரையறைகள் காட்டப் பெறவில்லை. பெண்களைக் காட்டிலும் கூடுதல் என்கிற நிலையில் மட்டுமே சுட்டப் பெறுகிறது. பெரும்பாலான நாவல்களில் இருபத்து ஐந்து வயதிற்குள் அமையக் கூடியவர்களாகவே ஆண்கள் சித்தரிக்கப் பெற்றுள்ளனர். ஆண்களைக் காட்டிலும் பெண்களின் உடல் வளர்ச்சி வெகு வேகமானது, என்பது பல சூழல்களில் அடிக்கடி சுட்டப்பெறுகிறது.

## திருமணத்தில் வரதட்சணை

சமூகத்தின் மேன்மையை வீழ்த்துகிற தீய சக்திகளில் வரதட்சணையும் ஒன்று. திருமணத்தில் இச்சக்தியின் தொடர்பு ஓங்கி நிற்கிறது. அவ்வோங்குதலினால் பெரும் பாதிப்பிற்குள்ளாவது பெண்கள் சமூகம்தான்.

வரதட்சணை வாங்கும் நிலையில் தாய், தந்தை, மகன் மூவர்க்கும் தொடர்பு உண்டு. மகனைப் பெற்றவர்கள் பெண்ணைப் பெற்றவர்களிடம் வரதட்சணை வாங்குவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். இவ்வழக்கத்திலிருந்து மீட்சி பெற வேண்டுமென்பது சிவசங்கரியின் விருப்பமாகும். தம் விருப்பத்தை நாவல் இலக்கியத்தை ஊடகமாகக் கொண்டு தெரியப்படுத்துகிறார்.

'ஆயிரம் காலத்துப் பயிர்' நாவலில் கண்ணனும் மலர்விழியும் காதலிக்கின்றனர். பெற்றோர் விருப்பத்துடன் திருமணம் செய்து கொள்ளுகின்றனர். அப்பொழுது மலர்விழியின் தந்தையிடம், கண்ணன்,

> "வரதட்சணை, சீர் செனத்தி, இதிலெல்லாம் எனக்கு நம்பிக்கை இல்லை"[39]

என்று கூறுகிறான். ஆனால் தாயைச் சமாதானப் படுத்தி, தாய் கேட்ட முப்பது பவுனுக்காகத் தானே தனது சம்பாத்தியத்தில் பெற்றோருக்குத் தெரியாமல் வருங்கால மனைவிக்காக ஐந்து பவுன் நகைக்கான பணத்தை அலுவலகத்தில் கடன் வங்கித்தர முன் வருகின்றான். வரதட்சணையால்

மலர்விழி பாதிக்கப் பெறாமல், அதே சமயத்தில் தாயின் விருப்பத்தையும் கண்ணன் ஈடேற்ற விரும்புகிறான். சமூகத்தில் வரதட்சணை வாங்க வேண்டுமென்கிற எண்ணம் இளஞ் சமூகத்தைச் சார்ந்த கண்ணன் பொன்றவர்களிடம் இல்லை. மூத்த தலைமுறையினரிடம் இருக்கும் எண்ணத்தை மெல்ல மெல்ல அகற்றுதல் வேண்டும் என்பது கதைப் போக்காக இருக்கிறது.

சிவசங்கரி சில நாவல்களில் இலட்சியப் பெற்றோர்களைப் படைக்கிறார். இப்பெற்றோர்களின் உரையாடல் வழி வரதட்சணையைக் களைய வேண்டுமென்ற சிந்தனையை உலவ விடுகின்றார். 'நான் நானாக' நாவலில் வரும் ரமணியின் தந்தை மகாலிங்கம் தன் மகனுக்குப் பெண் பார்க்கிறார். அப்பொழுது,

> "எங்களுக்குப் பெண்ணைப் பிடிச்சிருக்கு. மற்றபடி வரதட்சணை, சீர், செனத்தினு எதைப் பற்றியும் பேச வேண்டிய அவசியம் இல்லை. இத்தனை வருடமா உங்க பொண்ணா வளர்ந்த குழந்தை எங்காத்துக்குப் பொண்ணா வரப்போறா, அவ்வளவுதான். பெண் குழந்தை இல்லாத எங்காத்துக்கு ஆயுசு பர்யந்தம் நாங்கதான் கடமைப் படப் போறாம்"[40]

என்று கூறுகிறார். மகனின் தந்தையிடம் இருக்கும் சீர்திருத்தச் சிந்தனை சிவசங்கரியின் குரலாகும்.

'வளர்த்த கடா' நாவலில் சம்பத் ராஜியைப் பெண் பார்த்துவிட்டு, பைசா கூட வரதட்சணை வாங்கக் கூடாது என்று திட்டவட்டமாகக் கூறுகிறான். பெற்றோர்களும் மகனின் விருப்பத்திற்கிணங்கச் செயல்படுகின்றனர். சதாசிவமும் லெட்சுமியும் பெற்றோர்கள் ஆவார்கள். அவர்கள் பேசும் பொழுது,

> "பெண்ணைப் பெற்றவருக்குத் தெரியாதா? பெண்ணுக்குத் தேவையான சீர்வரிசைகளைத் தர நாம் வாயைத் திறந்து கேட்க வேண்டிய அவசியம் என்ன?"[41]

என்று பெருந்தன்மையுடன் கூறி விடுகின்றனர். வரதட்சணையைக் கட்டாயப் படுத்தாமல் செயல்படுகின்றனர்.

## மரபின் ஆட்சி

திருமணத்திற்கு முன்புள்ள காதல் நிலையில் சில கருத்துருவாக்கங்களைப் பாத்திரக் கூற்றுகளின் வழியாக, சிவசங்கரி ஒலிக்கச் செய்கிறார். அவ்வொலிப்பில் முற்போக்கு அல்லது மேன்மைக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. ஆனால் திருமண நிலையில் மூத்தத் தலைமுறையினரில் மரபியல் சிந்தனைகளைப் பேசச் செய்கிற அளவிற்கு, அம்மரபிலிருந்து மீட்சி அடைவதற்கான வழிகளை, இளந்தலைமுறையினரின் குரல்களில் ஓங்கி ஒலிக்கச் செய்வதில் சிவசங்கரி கூடுதல் கவனம் செலுத்தவில்லை.

முற்சுட்டிய நிலைக்குப் பல எடுத்துக்காட்டுகள் உள்ளன. அத்தகு எடுத்துக் காட்டுகள் முன்னரே குறிப்பிடப்பெற்றுள்ளன. காட்டாக விதியின் ஆட்சி திருமணத்தில் இருப்பதாக மூத்த தலைமுறையார் பேசுவதை இங்குக் குறிப்பிடலாம். 'பாலங்கள்' நாவலில் சுந்தரம் தன் மகள் மைதிலிக்கு வரன் பார்த்துக் கொண்டிருந்தார். நல்ல மாப்பிள்ளை அமைய வேண்டுமென்று சுந்தரத்தின் மனைவி ராஜம் கவலை கொள்கிறாள். அப்பொழுது சுந்தரத்தின் தாயார்,

"யாருக்கு யாருனு பிரம்ம முடிச்சு போட்டு இருக்கோ . . . அதாண்டா நடக்கும்"[42]

என்று குறிப்பிடுவது கருதத்தக்கதாகும். சுந்தரம் குறிப்பிட்ட வரனைப் பார்த்து ஜோதிடரிடம் கருத்துக் கேட்கிறார். அவர் இவ்வரன் நன்றாகப் பொருந்தியுள்ளதாகக் கூறுகிறார். பதிலுக்குச் சுந்தரமும்,

"நல்ல இடம், தெய்வ சங்கல்பமும் இருந்து நடந்தா தேவலை"[43]

என்று கூறுகிறார்.

விதிக் கொள்கையைப் புறக்கணித்துப் பேசுகிற சிந்தனாவாதியான பாத்திரங்கள் இல்லை. அக்கொள்கைகளை ஏற்றுக் கொள்ளும் விதத்தில் பாத்திரச் செயல்பாடுகள் உள்ளன என்கிற நிலை காணப் பெறுகிறது.

## சிவசங்கரி நாவல்களில் திருமண நிலை

ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப் பெற்ற நாவல்கள் நாற்பத்து நான்கு நாவல்களில் திருமண நிலை குறித்த செய்திகள் கருத்தில் கொள்ளப்பெற்றன. கதையில் நேரடி தொடர்பு பெற்ற திருமணநிலை மற்றும் திருமணம் கதைப்போக்கில் கூறப் பெறுகிற நிலை கருத்தில் கொள்ளப்பெற்றன. இவ்வகைக் குறித்த அட்டவணை, பின்வருமாறு அமைக்கப் பெற்றுள்ளது.

அட்டவணை 4 : 4

## திருமணம் கதையிலும். கதைப்போக்கிலும்

| வ. எண் | நாவலின் பெயர் | திருமணம் நேரடித் தொடர்பு | திருமணம் கதைப்–போக்கில் தொடர்பு |
|---|---|---|---|
| 1. | எதற்காக | + | - |
| 2. | திரிவேணி சங்கமம் | + | - |
| 3. | ஏன் | + | - |
| 4. | நதியின் வேகத்தோடு | + | - |
| 5. | சுறாமீன்கள் | + | - |
| 6. | மெள்ள மெள்ள | + | - |
| 7. | 47 நாட்கள் | + | - |
| 8. | தப்புக் கணக்கு | - | + |
| 9. | அம்மா ப்ளீஸ் எனக்காக | - | + |
| 10. | ஆயுள் தண்டனை | - | + |
| 11. | வளர்த்த கடா | - | + |
| 12. | துள்ள முடியாத புள்ளிமான் | - | + |
| 13. | அவர்களுக்குப் புரியாது | - | + |
| 14. | பிராயச் சித்தம் | - | + |
| 15. | போகப்போக | + | - |
| 16. | தான் தன் சுகம் | - | + |
| 17. | தவம் | - | + |
| 18. | திரிசங்கு சொர்க்கம் | + | - |
| 19. | மாலையில் பூக்கும் மலர்கள் | + | - |
| 20. | கப்பல் பறவை | - | + |
| 21. | மூக்கணாங்கயிறு | - | + |
| 22. | பாலங்கள் | + | - |

| வ. எண் | நாவலின் பெயர் | திருமணம் நேரடித் தொடர்பு | திருமணம் கதைப்-போக்கில் தொடர்பு |
|---|---|---|---|
| 23. | ஆயிரம் காலத்துப் பயிர் | + | - |
| 24. | கருணைக் கொலை | - | + |
| 25. | பொய் | + | - |
| 26. | ஒற்றைப் பறவை | - | + |
| 27. | நூலேணி | - | + |
| 28. | அது சரி அப்புறம் | + | - |
| 29. | மண் குதிரை | - | + |
| 30. | அம்மா பிள்ளை | - | + |
| 31. | இனி தொடராது | - | + |
| 32. | மலையின் அடுத்த பக்கம் | + | - |
| 33. | வேரில்லாத மரங்கள் | + | - |
| 34. | ஏரிக்கடியில் சில கனவுகள் | + | - |
| 35. | வானத்து நிலா | + | - |
| 36. | உயர்ந்தவர்கள் | - | + |
| 37. | ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால் | + | - |
| 38. | நான் நானாக | + | - |
| 39. | குட்டி | - | + |
| 40. | சுட்டமண் | + | - |
| 41. | இன்னொருத்தி + இன்னொருத்தி | - | + |
| 42. | இவர்களும் அவர்களும் | + | - |
| 43. | இனி | - | + |
| 44. | நப்பாசை | - | + |
| | | 22 | 22 |

## திருமணம் வகைப்பாடு

திருமண நிலையைக் கீழ்க்கண்டவாறு இரு நிலைகளில் பகுத்துப் பார்க்கலாம் :

- மரபு சார்ந்த திருமணம்
- மரபு மீறிய திருமணம்

இவ்வகைப்பாட்டை மையமாகக் கொண்ட அட்டவணை பின்வருமாறு.

அட்டவணை 4 : 5

### திருமண வகைப்பாடு

| வ. எண் | நாவலின் பெயர் | திருமணம் புரிவோர் | மரபு சார்ந்த திருமணம் | மரபு சாராத திருமணம் |
|---|---|---|---|---|
| 1. | எதற்காக | ராஜாராம்– இந்துமதி | + | - |
| 2. | திரிவேணி சங்கமம் | சங்கர் – அனுராதா | + | - |
| 3. | ஏன் | ரகு – சாந்தி | + | - |
| 4. | நதியின் வேகத்தோடு | முரளி – தர்மா | + | - |
| 5. | சுறாமீன்கள் | சத்யகுமார் – மாயா | + | - |
| 6. | மெள்ள மெள்ள | ஸ்ரீதர் – அகிலா | + | - |
| 7. | 47 நாட்கள் | குமார் – விசாலி | + | - |
| 8. | ஆயுள் தண்டனை | பரத் – மோஹனா | + | - |
| 9. | பிராயச் சித்தம் | ரவி – மதுரா | + | - |
| 10. | போகப்போக | விசுவநாதன் – நித்யா | - | + |

| வ. எண் | நாவலின் பெயர் | திருமணம் புரிவோர் | மரபு சார்ந்த திருமணம் | மரபு சாராத திருமணம் |
|---|---|---|---|---|
| 11. | திரிசங்கு சொர்க்கம் | முரளி – கமலி | + | - |
| 12. | மாலையில் பூக்கும் மலர்கள் | பாலாஜி – கௌரி | + | - |
| 13. | மூக்கணாங்கயிறு | மூர்த்தி – சந்திரா | + | - |
| 14. | பாலங்கள் | சுரேஷ்– சாருலதா | + | - |
| 15. | ஆயிரம் காலத்துப் பயிர் | கண்ணன் – மலர்விழி | - | + |
| 16. | பொய் | ஸ்ரீதர் – துர்க்கா | + | - |
| 17. | ஒற்றைப் பறவை | செந்தில் – அகிலா | + | - |
| 18. | அது சரி அப்புறம் | மோகன்– நந்தினி | + | - |
| 19. | மலையின் அடுத்த பக்கம் | கோபி – சித்ரா | + | - |
| 20. | வேரில்லாத மரங்கள் | மாதவன் – வசுந்தரமேரி | - | + |
| 21. | ஏரிக்கடியில் சில கனவுகள் | மனோகர் – தேவி | + | - |
| 22. | வானத்து நிலா | சந்தானம் – மாலினி | - | + |
| 23. | ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால் | மஞ்சு | + | - |
| 24. | நான் நானாக | ரமணி – பாரதி | + | - |
| 25. | சுட்டமண் | ரமணன்– யமுனா | + | - |
| 26. | இவர்களும் அவர்களும் | குமரேசன் – அபிராமி | + | - |
| | | | 22 | 4 |

## மரபு சார்ந்த திருமணம்

குடும்பத்தில் மூத்த பெரியோர்கள் அல்லது பெற்றோர்கள் பார்த்து நிகழ்த்துகிற திருமணம் இவ்வகையில் அடங்கும். மரபுத் திருமணத்தில் பெண் பார்த்தல், வரதட்சணைப் பேச்சு, சம்மதம் தெரிவித்தல், சாதகப் பொருத்தம் பார்த்தல், நாள் பார்த்தல், திருமணம், வைதிகச் சடங்குகள் நிகழ்த்தல், முதல் இரவு, என்ற நிலையில் அமையும். இந்நிலைகள் அனைத்தும் நாவலில் தொடர்பு பெற்றிருக்கும் என்று கூறுவதற்கில்லை. தேவைக்கு ஏற்ப, கதைச் சூழலுக்கு ஏற்ப இந்நிலைகள் மரபு சார்ந்த திருமணம் குறித்த இருபத்து இரண்டு நாவல்களில் இடம் பெற்றிருக்கும். எடுத்துக்காட்டு விளக்கத்திற்காகச் சில சான்றுகளைக் காணலாம்.

பெண் பார்த்தல், வரதட்சணைப் பேச்சு, சாதகப் பொருத்தம், சம்மதம் தெரிவித்தல், சடங்குகள், முதல் இரவு என்ற நிலையில் திருமணத்தைச் சார்ந்து மரபியல் சூழல்கள் தொடர்பு பெறுகின்றன. எடுத்துக் காட்டு விளக்கத்திற்காகச் சில சான்றுகளைக் காணலாம்.

'அது சரி அப்புறம்' நாவலில் நந்தினியைப் பெண் பார்க்க மோகன் குடும்பத்தினர் வருகின்றனர். பெண் பார்த்தலுக்குரிய நாளாக, வெள்ளிக் கிழமை குறிக்கப் பெறுகிறது. அப்போது கீழ்க்கண்ட உரையாடல் வளர்ச்சி அமைகிறது. பெண்ணைப் பார்க்கிறார்கள்,

> "பெண்ணை எங்களுக்குப் பிடிச்சிருக்கு, பாக்கி விவரங்களையும் பேசித் தீர்மானிச்சுட்டம்னா முகூர்த்தம் குறிச்சிடலாம்"[44]

என்று பேசுகின்றனர்.

'பாக்கி விவரங்கள்' என்று குறிப்பிடுவது வரதட்சணை தொடர்பான பேச்சுக்களாகும். "பிள்ளை வீட்டினர் கையில் வரதட்சணையாக ரூபாய், இருபது பவுன் நகை, சீர்வரிசைகள், வைரத்தோடு, ஸ்கூட்டர் இவை வேண்டுமெனக் கேட்கின்றனர்".

பெண்ணைப் பெற்றவர் குஞ்சிதபாதம். "கையில் பத்தாயிரமும், இருபது பவுன் நகையும், மத்ததுகளையும் கொடுத்திடறேன். ஆனா வைரத்தோடும் ஸ்கூட்டரும் தான் . . ." என்று இழுக்கிறார்.

“எங்களுக்கு ஒரே பிள்ளை. இதுகூட சீர் செனத்தி இல்லேன்னா . . . .” என்று அவர்கள் கேட்க, ஒரு மணி நேரப் பேச்சு வார்த்தைக்குப் பிறகு ஸ்கூட்டர் தவிர மற்றைய அனைத்திற்கும் குஞ்சிதபாதம் ஒத்துக் கொள்கிறார்.

திருமணச் சூழலின் முற்பகுதியில் சாதகப் பொருத்தம் பார்க்கும் மரபும் உண்டு. ‘பாலங்கள்’ இரண்டாம் பகுதியில் சுந்தரம் தன் மகள் மைதிலிக்கு வரன் பார்க்கிறார்.

“மைதிலிக்குக் கேட்டை நட்சத்திரம். கேட்டை ஜேஷ்டனுக்கு ஆகாது, அதனால் மூத்த பிள்ளையா இருக்கிறது அவசியம்”[45]

என்று பேசப் பெறுகிறது.

‘பொய்’ நாவலில் வரும் துர்க்கா தன் மகள் அகிலாவிடம் பேசுகிறார்.

“ராமையா மாமா உன் ஜாதகத்தை வாங்கிட்டுப் போயிருந்தார். பொருத்தம் சரியாயிருக்குன்னு ஒரு வரனைப் பத்தி இப்பத்தான் அப்பாகிட்ட பேசி முடிச்சார்”[46]

என்று குறிப்பிடுவதிலிருந்து சாதகப் பொருத்தம் கணித்துத் திருமணம் செய்யப் பெறுகிற நிலையைக் காணலாம்.

பாலங்கள் இரண்டாம் பகுதியில்

“முதல் நாள் ஜானவாசம். அப்பொழுது வாண வேடிக்கை, மேளம், பாண்டு ..... அமர்க்களப்படுத்தப் பெறுகிறது. மறு நாள் காலை முகூர்த்தம். மாலையில் வரவேற்பு”[47]

என்று திருமணச் சடங்குகள் விவரிக்கப் பெறுகின்றன.

‘மெள்ள மெள்ள’ நாவலில் ஸ்ரீதர் – அகிலா இணைவுகளுக்கு சோதிடர் முதல் இரவிற்குக் கூட நாள் குறித்துத் தருகிறார். அது சரி அப்புறம், நாவலிலும் முதல் இரவிற்கு நல்ல நாள் கணிக்கப் பெறுகிறது.

இவ்வாறு மரபு சார்ந்த திருமணங்களில் சில வழக்கங்கள் மரபாக இருப்பதை, சிவசங்கரி கதையோட்டத்தில் குறித்துச் சொல்கிறார். இந்நிலை எதார்த்த நிலையின் பிரதிபலிப்பாகக் கொள்ளலாம்.

## மரபு சார்ந்த திருமணத்தின் வகைப்பாடு

மரபு சார்ந்த திருமணத்தக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம் :

- முதல் மணம்
- மறு மணம்

இவ்வகைப்பாட்டை விளக்கும் வகையில் அட்டவணை பின்வருமாறு அமைக்கப் பெற்றுள்ளது.

அட்டவணை 4 : 6

## மரபுத் திருமணம் வகைப்பாடு

| வ. எண் | நாவலின் பெயர் | முதல் மணம் | மறுமணம் |
|---|---|---|---|
| 1. | எதற்காக | + | - |
| 2. | திரிவேணி சங்கமம் | + | - |
| 3. | ஏன் | + | - |
| 4. | நதியின் வேகத்தோடு | + | - |
| 5. | சுறாமீன்கள் | + | - |
| 6. | மெள்ள மெள்ள | + | - |
| 7. | 47 நாட்கள் | - | + |
| 8. | ஆயுள் தண்டனை | - | + |
| 9. | பிராயச்சித்தம் | + | - |
| 10. | தான் தன் சுகம் | + | - |
| 11. | திரிசங்கு சொர்க்கம் | + | - |
| 12. | மூக்கணாங்கயிறு | - | + |
| 13. | பாலங்கள் | + | - |
| 14. | ஆயிரம் காலத்துப் பயிர் | + | - |
| 15. | பொய் | - | + |
| 16. | ஒற்றைப் பறவை | - | + |
| 17. | அது சரி அப்புறம் | + | - |
| 18. | ஏரிக்கடியில் சில கனவுகள் | + | - |
| 19. | ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால் | + | - |
| 20. | நான் நானாக | + | - |
| 21. | சுட்டமண் | + | - |
| 22. | இவர்களும் அவர்களும் | + | - |
| | | 17 | 5 |

## முதல் மணமும் மறு மணமும்

மரபுத் திருமணத்தில் முதல் மணம் தொடர்பாக பதினேழு நாவல்கள் இடம் பெற்றுள்ளதை அட்டவணைச் செய்திகளின் வழி உணரலாம். இதுவரை எந்தப் பெண்ணையோ அன்றி ஆணையோ திருமணம் செய்து கொண்டிராத ஓர் ஆடவனும் பெண்ணும் முதல் முதலாக மணந்து இல்லறத்தில் ஈடுபடுவது முதல் மணமாகும்.

தன் முதல் மனைவியை இழந்த ஆடவன் மற்றொரு பெண்ணை மணப்பதோ மனைவி உயிருடன் இருக்கும் பொழுதே மற்றொரு பெண்ணை மணப்பதோ மறுமணம் எனப் பெறும். அதே போல் கணவன் இறந்த பிறகு மனைவி மறுமணம் செய்வதும், கணவன் உயிருடன் இருக்கும் பொழுது மனைவி வேறு கணவன் தேடுவதும் மறுமணத்தில் அடங்கும்.

மறுமணம் புரிவோரில் ஆடவரே மிகுந்திருக்கின்றனர். பண்பாட்டில் பெண்கள், கணவனை இழந்த பிறகு மறுமணம் செய்யும் நிலை வரவேற்பில்லாமல் இறுக்கமாக இருக்கிறது. அந்நிலை எதார்த்தத்தைப் பிரதிபலித்துக் காட்டும் நிலையில் இச்செய்தி அமைந்துள்ளமை கருதத்தக்கதாகும்.

'47 நாட்கள்', 'ஆயுள் தண்டனை', 'பொய்', 'ஒற்றைப்பறவை' போன்ற நாவல்களில் ஆடவர் மறுமணம் செயவதாக உள்ளது. 47 நாட்களில் வரும் குமார், லூசி என்ற வெளிநாட்டுப் பெண்ணை அவளிடமுள்ள சொத்திற்காக மணக்கிறான். இந்தியா வந்தபோது அந்த மணத்தை வெளியிடவில்லை. விசாலி என்ற கிராமத்துப் பெண்ணை மணந்து, அமெரிக்காவிற்கு அழைத்துச் செல்கிறான். லூசியிடம் தங்கை என்று அறிமுகப்படுத்துகிறான். கணவனின் பொய்மையை உணர்ந்து விசாலி இந்தியா திரும்புகிறாள். இங்கு மறுமணம் குமாரின் பொய்மை, மற்றும் பணத்தாசையால் நிகழ்கிறது.

'ஆயுள் தண்டனையில்' பரத், நளினி என்ற பெண்ணைத் திருமணம் செய்திருந்தான். அவள் குழந்தை பெற்ற ஒரு மாதத்தில் விபத்தில் இறந்து போகிறாள். பரத் குழந்தை வளர்ப்பிற்காகவும், தாயின் விருப்பத்திற்காகவும் மோகனா என்ற பெண்ணை மணம் செய்கிறான்.

‘பொய்’ நாவலில் கிரி என்பவன் லிண்டா என்ற வெளிநாட்டுப் பெண்ணை மணக்கிறான. அவள் வசதியுள்ள விதவைப் பெண் ஆவாள். இவன் தன்னுடைய செயலைக் கடிதத்தின் மூலம் வீட்டிற்குத் தெரிவிக்கிறான். ‘ஒற்றைப் பறவை’யில் சித்தரிக்கப் பெறும் செந்தில் சுசிலா என்பவளைத் திருமணம் செய்கிறான். சிங்கப்பூர் செல்கிறான். அவள் வேலை பார்க்கும் நிறுவன முதலாளியின் மகள் லீலாவைக் காதலித்துத் திருமணமும் செய்து கொள்கிறான. பெற்றோர்களுக்கு விவரத்தை எழுதி மிகுதியான பணத்தை அனுப்புகிறான. அவர்கள் மௌனமாகின்றனர்.

## மரபு மீறிய திருமணம்

திருமணம் செய்து கொள்ளும் ஆணும் பெண்ணும் பெற்றோர், உற்றோர்களின் சம்மதம் இல்லாமல் தாங்களாகவேத் திருமணம் செய்து கொள்வது மரபு மீறிய திருமணம் எனப்படுகிறது.

போகப் போக, மாலையில் பூக்கும் மலர்கள், மலையின் அடுத்த பக்கம், வேரில்லாத மரங்கள், வானத்து நிலா போன்ற நாவல்கள் மரபு மீறிய திருமணங்களைச் சார்ந்த நாவல்களாகும்..

திருமணம் செய்து கொள்ளும் ஆணும், பெண்ணும் பெற்றோர், உற்றோர்களின் சம்மதம் இல்லாமல் தாங்களாகவே திருமணம் செய்து கொள்வது மரபு மீறிய திருமணமாகும். எடுத்துக் காட்டாக, போகப் போக நாவலில் நிகழ்ந்த திருமணத்தைக் காணலாம்.

இந்நாவலில், விசுவநாதன் என்ற ஏழை ஆசிரியை மகனும், நித்யா என்ற செல்வந்த குடும்பத்தின் ஒரே வாரிசும் காதல் வயப்படுகின்றனர். இருவர் வீட்டிலும் காதலுக்கு எதிர்ப்புத் தோன்றுகிறது. இவர்களின் இனிய நண்பன் அருண், உதவியால் திருமணம் புரிகின்றனர். திருமணம் ஆனபிறகும் அருண் தன் தொழிற்சாலையில் இருவருக்கும் வேலை போட்டுக் கொடுத்து ஆதரவாய் இருக்கிறான். இவ்வகையில் முதல் மணம் போகப் போக, வேரில்லாத மரங்கள், வானத்து நிலா, என்ற மூன்று நாவல்களில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

கணவன் இறந்த பிறகு மறுமணம் செய்யும் மனைவி மலையின் அடுத்த பக்கம் நாவலில் இடம் பெறுகிறாள். இந்நாவலில் சித்ரா – கோபி என்ற ஆடவனைக் காதலிக்கிறாள். இருவரும் வேறு சாதியினர். பெற்றோர் சம்மதிக்கவில்லை. கோபியின் சகோதரி, கல்லூரி பேராசிரியர். அவர் சித்ராவின் ஆசிரியரும் கூட. அவர் சித்ராவின் பெற்றோருக்கு சித்ரா – கோபியின் காதலின் தீவிரத்தையும், திருமணம் செய்ய வேண்டியதின் தேவையையும் எடுத்துக் கூறுகிறார். பெற்றோர் வேண்டா வெறுப்பாகச் சம்மதிக்கின்றனர். திருமணமான சில மாதங்களில் கோபி விபத்தில் இறந்து போகிறான். அவளுக்குப் பெற்றோர் விதவைக்குரிய சடங்குகள் செய்ய முனையும் பொழுது தனியே வந்து தங்குகிறாள். கணவனின் அலுவலகத்தில் வேலைப் பார்க்கிறாள். கணவனின் நண்பன் மேல் காதல் கொண்டு பெற்றோர்களுக்குத் தெரிவிக்காமல் மறுமணம் புரிகிறாள்.

## III குழந்தை வளர்ப்பு நிலை

குடும்ப வளர்ச்சி நிலை நான்கில் குழந்தை வளர்ப்பு நிலை மூன்றாவது நிலையாகும். ஆணும் பெண்ணும் இணைந்து நடத்தும் இல்லற வாழ்வில் குழந்தைப் பேறு சிறப்பான இடத்தை வகிக்கிறது. வாழ்வின் குறிக்கோளாகக் குழந்தை அமைந்து அக்குழந்தையின் உருவாக்கத்தில் கணவனும் மனைவியும் தங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ளுகின்றனர். இந்நிலையில் குழந்தை, குழந்தை வளர்ப்பு நிலை குறித்து சிவங்கரியின் சிந்தனைகள் அவரது நாவல்களின் வழி மதிப்பிடுவது, இப்பகுதியின் நோக்கமாகும்.

ஆய்விற்காக எடுக்கப் பெற்றுள்ள நாவல்களில் (44) தனிக் குடும்பம் தொடர்பாக இருபத்தி எட்டு (28) நாவல்கள் அமைகின்றன. கூட்டுக் குடும்பம் தொடர்பாக பதினாறு (16) நாவல்கள் அமைகின்றன. தனிக் குடும்பம் தொடர்பான நாவல்களில் குழந்தை சார்பான செய்திகளை மதிப்பிடும் வகையில் பின் வரும் அட்டவணை அமைகிறது. குழந்தைப் பிறப்பு மற்றும் வளர்ப்புப் போன்ற செய்திகள் நாவல்களின் கதைப் போக்கில் வெளிப்படுத்தப் பெறுகின்றன.

அட்டவணை 4 : 7

## தனிக் குடும்பத்தில் குழந்தைகள்

| வ.எண் | நாவலின் பெயர் | குழந்தை உண்டு | குழந்தை இல்லை |
|---|---|---|---|
| 1. | எதற்காக | + | - |
| 2. | திரிவேணி சங்கமம் | + | - |
| 3. | ஏன் | + | - |
| 4. | நதியின் வேகத்தோடு | + | - |
| 5. | சுறா மீன்கள் | - | + |
| 6. | 47 நாட்கள் | - | + |
| 7. | தப்புக் கணக்கு | - | + |
| 8. | அம்மா ப்ளீஸ் எனக்காக | + | - |
| 9. | வளர்த்த கடா | + | - |
| 10. | துள்ள முடியாத புள்ளிமான் | - | + |
| 11. | அவர்களுக்குப் புரியாது | + | - |
| 12. | பிராயச் சித்தம் | + | - |
| 13. | போகப் போக | - | + |
| 14. | தவம் | + | - |
| 15. | திரிசங்கு சொர்க்கம் | - | + |
| 16. | மாலையில் பூக்கும் மலர்கள் | - | + |
| 17. | கப்பல் பறவை | - | + |
| 18. | மூக்கணாங்கயிறு | + | - |
| 19. | பொய் | + | - |
| 20. | அது சரி அப்புறம் | + | - |

| வ.எண் | நாவலின் பெயர் | குழந்தை உண்டு | குழந்தை இல்லை |
|---|---|---|---|
| 21. | மண்குதிரை | + | - |
| 22. | மலையின் அடுத்த பக்கம் | - | + |
| 23. | ஏரிக்கடியில் சில கனவுகள் | - | + |
| 24. | வானத்து நிலா | + | - |
| 25. | நான் நானாக | + | - |
| 26. | சுட்டமண் | - | + |
| 27. | இன்னொருத்தி + இன்னொருத்தி | + | - |
| 28. | இனி | + | - |
| | | 18 | 10 |

தனிக் குடும்ப நாவல்களில் பதினெட்டு நாவல்களில் குழந்தைகள் பற்றிய செய்திகள் இடம் பெறுகின்றன. அவ்வகைக் கதைகளில் குழந்தை வளர்ப்புப் பற்றிய செய்திகள் கதைப் போக்கில் கூறப்படுகின்றன. எடுத்துக் காட்டு, விளக்கத்திற்காகச் சில நாவல் செய்திகளைக் காணலாம்.

## மரபும் விஞ்ஞானமும்

வளர்த்த கடா நாவலில் வரும் ராஜி என்ற பாத்திரத்தின் மாமியார்,

"கண்டவங்க பேச்சைக் கேட்டுகிட்டு கடையில் விக்கிற மாவு அது இதுன்னு வாங்கித் தராதே . . ஒண்ணுவிட்ட நாட்களில் எண்ணெய் கொடு, தினமும் உச்சிக்கு வை, கண்ணுக்கு எண்ணெய் கட்ட மறக்காதே, மை தவறாம இடு ...."[48]

என்று கூறுகிறார். இங்கு மாமியார் காலத்துக் குழந்தை வளர்ப்பு முறைகளை வற்புறுத்திக் கூறுவதைக் காணலாம்.

அதே நாவலில் டாக்டர் சம்பா பாம்பே வாலாவும் சித்தரிக்கப் பெறுகிறார். அவர் குழந்தை வளர்ப்புப் பற்றி,

> "தினம் உச்சிக்கு வைப்பதும், ஒரு நாள் விட்டு ஒரு நாள் எண்ணெய் கொடுப்பதும், கண்ணில் எண்ணெய் கட்டுவதும், குழந்தைக்கு ஆபத்தாக மாறுகிறது என்பது இன்றைய மருத்துவர்கள் கருத்து"[49]

என்று அறிவுறுத்துகிறார். பழைய பழக்க முறைகளுக்கும் நவீன விஞ்ஞான நிலைக்கும் இடையேயான முரண்பாடு இங்கு அவர்கள் உரையாடல் போக்கில் இடம் பெறக் காணலாம். மேலும் அதே மருத்துவர்,

> "குழந்தைக்குச் சர்க்கரைத் தண்ணீர் வயிற்றில் புளித்துப் போய் பல குழந்தைகள் வாந்தி பேதி கண்டு இறந்திருக்கின்றனர்"[50]

என்று பழைய பழக்க முறைகளின் விளைவையும் கூறுகிற நிலை இடம் பெற்றுள்ளது.

முரண்பாட்டு நிலையில் சிக்கல்களை வளர்க்காமல் மூத்த தலைமுறையைச் சார்ந்தவர் விஞ்ஞான முறையை ஏற்கும் நிலையில் கதைப் போக்கை சிவசங்கரி வளர்த்த கடா நாவலில் அமைத்துச் சொல்கிறார்.

## குழந்தை வளர்ப்பில் கணவனும் மனைவியும்

'பொய்', 'அது சரி அப்புறம்' நாவல்களில் இடம் பெறும் பெண்கள் வேலைக்குச் செல்பவர்கள். அவ்வேலையுடன் குடும்பச் சுமை, குழந்தை வளர்ப்பு என்ற கூடுதல் பொறுப்புகளுடன் செயலாற்றவும் செய்கிறார்கள். ஆடவர் குழந்தை வளர்ப்பில் இந்நாவல்களில் கவனம் செலுத்த வில்லை. அலுவல் மகளிர்க்குக் குடும்பப் பணியுடன் அலுவல் பணியும் இருக்கின்ற நிலை நடை முறையில் எதார்த்த நிலையாகும். சிவசங்கரி பெரும்பாலும் பெண்கள் அலுவலகத்திற்குச் செல்பவரை வரவேற்பது இல்லை. ஆண்கள் அலுவலகத்தில் வேலை பார்ப்பதற்கு நிகரான பணி பெண்களின் குடும்பப் பணி என்பது சிவசங்கரியின் சிந்தனையாகும்.

குடும்பப் பணியிலும் குறிப்பாகக் குழந்தை வளர்ப்பில் பெண்கள் மட்டுமில்லாமல் ஆண்களும் பங்கேற்க வேண்டும். என்பதைச் சில நாவல்களில் குறித்துச் செல்கிறார். 'அது சரி அப்புறம்' நாவலில் மோகன் என்கிற பாத்திரம் தனது குழந்தைகளான ரம்யா, ராஜா ஆகியவர்களைக் கவனிப்பதில்லை. மோகனின் மனைவி நந்தினியாவாள். அவளின் தோழி ஜானா கூறும் பொழுது,

> "ரம்யா அவர் மகளும் கூட உனக்கு அவளை வளர்க்கிறதுல எவ்வளவு பொறுப்பு இருக்கோ அத்தனை மோகனுக்கும் உண்டு"[51]

என்று கூறுகிற கூற்று குறிக்கத் தக்கதாகும். இக்குறிப்பிலிருந்து குழந்தை வளர்ப்பில் குழந்தையின் தந்தைக்கும் பொறுப்பு உண்டு என்கிற கருத்து ஒலிக்கக் காணலாம்.

## பெற்றோரா? ஆயாவா?

பெற்றோர்கள் பொறுப்பில் இல்லாமல் ஆயாக்கள் பொறுப்பில் குழந்தைகள் வளர்வது பொறுத்தமானதல்ல என்பதும் சிவசங்கரியின் கருத்தாக உள்ளது. 'வானத்து நிலா' நாவலில் சந்தானம் மாலினி இருவரும் கணவன், மனைவி ஆவார்கள். இவர்கள் குழந்தையை ஆயா கவனித்துக் கொள்கிறாள். எனவே குழந்தைக்குப் பெற்றோர் மீது பாசம் உண்டாவதில்லை. அக்குழந்தை தாய் தந்தை இருவரிடமும் போக மறுக்கிறது. அப்பொழுது ஆயா,

> "என்னதான் நா அன்பா ஆசையா கவனிச்சுகிட்டாலும், பெத்தவங்க பாசமா இல்லேனு இவ ஏங்கித் துவண்டு போயிருக்கிறது உங்களுக்குத் தெரியுமா? வெறும் பணம் காசுனால மட்டும் குழந்தைகளை வளர்த்திட முடியுமா? அப்படின்னா உலகத்துல குடும்பங்களோ உறவுகளோ தேவையில்லை. எல்லாரையும் ஹாஸ்டல்ல வச்சு கவனிச்சுக்கலாமே செடிக்குத் தண்ணீர் மாதிரி, பிள்ளைங்களுக்கு உறவுக்காரர்களின் அன்பு தேவையானதாகும்"[52]

என்று கூறுகிறாள். ஆயாவின் கூற்றில் சிவசங்கரியின் கருத்து ஒலிக்கக் காணலாம்.

## செல்லமும் கண்டிப்பும்

குழந்தை வளர்ப்பில் தாய் குழந்தைகக்குச் செல்லம் கொடுப்பது இயல்பாக அமையும். அச்சமயங்களில் தந்தை அறிவுறுத்துவது போன்ற சூழல்களை சிவசங்கரி தன்னுடைய நாவல்களில் அமைத்துச் செல்கின்றார். இந்நிலைக்குச் சில எடுத்துக் காட்டுக்களைக் குறிப்பிடலாம். 'அம்மா ப்ளீஸ் எனக்காக' நாவலில் சங்கர் தன் மனைவி கௌரியிடம் பிள்ளை வளர்ப்புப் பற்றிப் பேசுகிறார். கௌரி குழந்தையைச் செல்லம் கொடுத்து வளர்க்கிறார். அதனை விரும்பாத சங்கர்,

> “உடம்புக்கு ஜுரம் வந்தால் அல்வாவும் குலோப் ஜாமுனும் கொடுத்தா சரியாகாது. கசப்பு மருந்தும், ஊசியும் கொடுத்துதான் கெட்டுக் போன உடம்பைச் சரியாக்கணும். அதுக்காக அவனுக்குத் தேவை மீறின செல்லத்தைக் கொடுத்துக் குட்டிச் சுவராக்கறதும், நோய்வாய்ப்பட்ட உடம்பிற்கு அல்வா கொடுக்கிறதும், ஒண்ணுதான். ஆதிலேர்ந்து நான் உனக்குச் சொல்லிண்டு வர்றேன் . . பாசத்தை அளவோடு கொடுக்கத் தெரியணும். இல்லைனா நாளைக்கு நம்ப மகன் வாழ்ககை கெடறதுக்கு நாமே காரணமாயிடுவோம்”[53]

என்று கூறுகிறான். தேவைக்கு மீறின செல்லத்தைக் கொடுத்து வளர்ப்பதால் குழந்தையின் எதிர்கால வாழ்க்கைக் கெடுவதற்கான சூழல் உண்டு என்பது கணவனாகிய சங்கரின் கருத்தாகும்.

இதே கருத்து 'அம்மா பிள்ளை' என்ற நாவலிலும் எதிரொலிக்கக் காணலாம். ரெங்கநாயகி என்பவள் மகன் ராஜாவை மிகவும் செல்லமாக வளர்க்கிறாள். அப்பொழுது அவள் கணவன் புருஷோத்தமன்,

> “பிள்ளையை இப்படி வளர்ப்பது தப்பு ரெங்கம்மா, அருமை பெருமையா பிறந்தவனா இருந்தாலும், பக்குவமாய் நல்லது கெட்டதை எடுத்துச் சொல்லி, வளர்க்கிறது தானே அவனுக்கும் நல்லது”[54]

என்று குறிப்பிடுகின்றார். மற்றுமோர் இடத்தில்,

"ராஜாவிற்கு நீ ரொம்ப இடம் கொடுக்கிறேன்னு எல்லோரும் பேசிக்கிறாங்க . . இது நல்லதுக்கு இல்லேன்னு எனக்கும் தோணுது. நாளைக்கு நம்ம மகன் நல்லபடியா வாழ்ந்தா தானே நமக்குப் பெருமை. இப்ப அவனுக்கு நீ கொடுக்குற செல்லமே அவன் கெட்டுப் போக வழி காட்டிடுமோனு எனக்குப் பயமா இருக்கு"[55]

என்று தாய் செல்லமாக வளர்ப்பதால் குழந்தையின் வாழ்க்கை கெட்டுவிடும் என்பதில் தந்தைக்குரிய அச்சம் புலப்படக் காணலாம்.

## தற்காலச் சமூகச் சூழலில் குழந்தைகள்

குழந்தைகளுக்குச் செல்லம் கொடுப்பதில் கவனத்தை வலியுறுத்தும் சிவசங்கரி இக்காலச் சமூகச் சூழலைக் கருத்தில் கொண்டும் குழந்தைகளை எங்ஙனம் வளர்க்க வேண்டும் என்பது பற்றிச் சில சிந்தனைகளைக் குறிப்பிடுகிறார்.

'பாலங்கள்' என்ற நாவலில் பாகம் இரண்டில் சித்தரிக்கப் பெறும் வெங்கட்ராமன் தன் மனைவி மைதிலியிடம் பேசுவதாகச் சூழல் அமைகிறது. அப்பேச்சுச் சூழலில், குழந்தைகளை நடத்த வேண்டிய முறை பற்றி,

"காலம் மாறிடுத்து மைதிலி .... குழந்தைகளைப் பெரியவளா நடத்த வேண்டிய சமயத்திலே நடத்தியே தீரணும்"[56]

என்று கூறுகிறார். இந்நிலையில் குழந்தைகள் சற்றுப் பெரியவர்கள் ஆனால் அவர்களுக்குள்ள உணர்வுகளைப் புரிந்து கொண்டு நடக்க வேண்டும் என்பது தந்தையின் சிந்தனையாக உள்ளது.

'பாலங்கள் மூன்றாம் பகுதியில்' சாரு என்பவள் தன் பெண் அபர்ணாவின் போக்குக் கண்டு வருந்துகிறாள். அவளே தற்கூற்றில்,

"காலம் மாறிவிட்டது. குழந்தைகளிடம் அன்பு கண்டிப்பு கொண்ட தாயாக இருப்பது போதாது, வேகமாக உருளும் காலத்தை அனுசரித்து. குழந்தைகளுடன் ஒரு சினேகிதியாகப் பேசப் பழக வேண்டும் என்பது புரிந்தாலும், நடைமுறையில் செயல்படுத்துவது சிரமம் என்று நினைக்கிறாள்"[57]

வளர்ந்த குழந்தையிடம் தாயாக மட்டுமின்றிச் சினேகிதியாகவும் இருக்க வேண்டும் என்கிற கருத்து இருப்பதைக் காணலாம்.

'நான் நானாக' என்னும் நாவலில் கணவன் ரமணி, மனைவி பாரதியிடம்,

> "பெத்துட்டோம்கிறதுக்காக நம்ம ஆசைகளைக் குழந்தைகள் நிறைவேற்றி வைக்கணும்னு எதிர்பார்க்கிறது தப்பு. நம்மளோட விருப்பு வெறுப்புகளை அடுத்தவர் மேல் திணிக்காம அவர் என்ன விரும்பறார்னு தெரிந்து கொண்டு அதுபோல நடக்கிறதுதான் எல்லோருக்கும் நல்லது ...."[58]

என்று கூறுகிறார். பெற்றோர்களுடைய ஆசையை வளர்க்கும் பொழுது குழந்தைகளிலடம் திணித்து விடக்கூடாது. குழந்தைகளுடைய விருப்பு வெறுப்புகளை அறிந்து பெற்றோர்கள் செயல்பட வேண்டும் என்கிற கருத்துக் குறிக்கப்பெறுகிறது.

இக்காலக் குழந்தைகள் வயதுக்கு மீறிய வளர்ச்சியுடையவர்கள் என்கிற கருத்துப்படி, பாலங்கள் நாவலில் வரும் சாரு தன் தோழியான ஸ்மிதாவிடம்,

> "இந்த காலத்துக் குழந்தைகளுக்கு மனசிலேயும் உடம்பிலேயும் வயசுக்கு மீறின வளர்ச்சி சாரு .... அதை புரிஞ்சுகிட்டு நாமும் நம்மை மாத்தி கிட்டாத்தான் சமாளிக்கலாம், இல்லேன்னா ரொம்ப கஷ்டம்"[59]

என்று கூறுகிறான்.

'பாலங்கள்' நாவல் தலைமுறை இடைவெளிகள் பற்றிய நாவலாகும். அந்நாவலில் வரும் சாரு அவள் மகள் அபர்ணாவின் வளர்ப்பு முறை பற்றிக் கவலையுற்றாள். அபர்ணா வளர்ந்து குடும்ப வாழ்வில் ஈடுபடுகிறாள். அப்போது அவள் மகள் புல்புல் பற்றித் தனக்குள்,

> "இந்தக் காலத்துக் குழந்தைகளுக்கு எக்கசக்க மூளை, ஐகியூ, டன் கணக்கில், விஷய ஞானத்தைச் சேகரித்து வைத்துக் கொள்ளும் திறமை, தனக்கு எது வேண்டும் வேண்டாம் என்று தீர்மானிக்கும் திடச்சித்தம்"[60]

என்று நினைக்கிறாள்.

## கூட்டுக் குடும்பத்தில் குழந்தைகள்

கணவன் மனைவி குழந்தைகளுடன் கணவனின் பெற்றோர் அல்லது கணவன் வழி உறவினர்கள் அல்லது மனைவியின் பெற்றோர்; அல்லது மனைவி வழி உறவினர்கள் சேர்ந்து, 'வாழும் நிலை கூட்டுக் குடும்ப நிலையாகும்'. தற்பொழுதைய சமூக அமைப்பு ஆணாதிக்கச் சமூக அமைப்பாக இருப்பதால் கணவன் வழி உறவுகளே பெரும்பாலும் கூட்டுக் குடும்பத்தின் இயல்பாகும். இத்தகு சமூகச் சூழலில் பிறக்கும் இலக்கியங்களும் அவ்வியல்பைப் பிரதி பலிப்பதும் இயல்பெனத் துணியலாம்.

ஆய்விற்குட்படுத்தப்பட்ட சிவசங்கரி நாவல்கள் நாற்பத்து நான்கில் பதினாறு நாவல்கள் கூட்டுக் குடும்பத்தைச் சார்ந்தவை. அவ்வகை நாவல்களில் குழந்தைகள் இடம் பெற்ற செய்திகள் பின்வருமாறு அட்டவணைப் படுத்தப் பெற்றுள்ளன.

அட்டவணை 4 : 8

## கூட்டுக் குடும்பத்தில் குழந்தைகள் நிலை

| வ.எண் | நாவலின் பெயர் | குழந்தைகள் பற்றிய செய்தி உண்டு | குழந்தைகள் பற்றிய செய்தி இல்லை |
|---|---|---|---|
| 1. | மெள்ள மெள்ள | - | + |
| 2. | ஆயுள் தண்டனை | + | - |
| 3. | தான் தன் சுகம் | + | - |
| 4. | தவம் | + | - |
| 5. | பாலங்கள் | + | - |
| 6. | ஆயிரம் காலத்துப் பயிர் | - | + |
| 7. | கருணைக் கொலை | - | + |
| 8. | ஒற்றைப் பறவை | - | + |
| 9. | நூலேணி | + | - |
| 10. | அம்மா பிள்ளை | + | - |
| 11. | இனி தொடராது | - | + |
| 12. | வேரில்லாத மரங்கள் | + | - |
| 13. | உயர்ந்தவர்கள் | + | - |
| 14. | ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால் | + | - |
| 15. | குட்டி | + | - |
| 16. | இவர்களும் அவர்களும் | + | - |
| | | 11 | 5 |



கூட்டுக் குடும்பம் சார்ந்த நாவல்களில் பதினொரு நாவல்களில் குழந்தைகள் தொடர்பான செய்திகள் இடம் பெற்ற நிலையை அட்டவணையின் வழி அறியலாம்.

குழந்தை வளர்ப்பில் பெண்ணின் பங்கு சிறப்பாக இடம்பெற வேண்டும் என்கிற கருத்தை வலியுறுத்தும் நிலை 'ஆயுள் தண்டனை' நாவலில் இடம் பெறுவதாகும். இந்நாவலில் வரும் பரத் மனைவியை இழந்தவன், அவன் குழந்தையைத் தாய் கவனித்து வருகிறாள். அவள் மகனிடம்,

> "நாளைக்கு எனக்கு ஒண்ணு ஆயிடுச்சுன்னா குழந்தை நாறிப் போயிடுவா. வீட்டுல ஒரு பொம்பளை பொறுப்பெடுத்துக்க இல்லாட்டா நீயும் திண்டாடிப் போயிடுவே"[61]

என்று கூறுகிறாள். குழந்தை வளர்ப்பில் பெண் தேவை என்பதைக் காரணம் காட்டி மறுமணம் செய்து கொள்ளவும் சொல்கிறாள்.

மேற் கூறிய கருத்து 'நூலேணி' நாவலிலும் இடம்பெறக் காணலாம். கிச்சாமியின் மகள் சீதாலெட்சுமி இறந்து போக, சின்ன பாப்பாவை வளர்க்கிறார். அப்பொழுது பெற்றவள் என்று ஒருத்தி பொறுப்பாக இருந்து அன்பாகவும் அனுசரணையாகவும் இருந்திருந்தால் அந்த வளர்ப்பே தனி தானே[62] என்று கூறுவதும் பெற்றவளின் வளர்ப்புக் குழந்தைக்கு முதன்மைத் தேவை என வலியுறுத்தப் பெறுவதைக் காணலாம். மேலும் அவர்,

> "அந்தந்த வயசு சந்தேகங்களுக்கு அன்பால் விளக்கம் கொடுத்து அணைக்க வேண்டிய பொழுது அணைத்து, கண்டிக்க வேண்டிய பொழுது இதமாய் கண்டித்து, .... ஒரு பெண் வளர்க்கிற மாதிரி ஆகுமா...."[63]

என்றும் குறிப்பிடுகிறார்.

கூட்டுக் குடும்ப நாவல்களிலும் குழந்தை வளர்ப்புப் பெற்றோர்களுக்கு என்றும், குறிப்பாகப் பெண்களுக்கென்றும் கூறப் பெறுகிறது.

## கணவனின் புறக்கணிப்பு

குழந்தை வளர்ப்பில் கணவன் – மனைவி இருவர்க்கும் பொறுப்புகள் உண்டு. சமயங்களில் புறக்கணிப்பு மனைவியர் வாழ்வியலுக்குச் சிக்கலை உருவாக்கும். அத்தகு சிக்கலை எதிர் கொண்டு துணிவுடன் செயல்படும் ஆக்க நிலை சார்ந்த மனைவியரை சிவசங்கரி தம் நாவல்களில் படைத்துக் காட்டுகிறார்.

'பொய்' நாவலில் வரும் கிரி மேல் பயிற்சிக்காக அமெரிக்காவிற்கு அலுவலகம் சார்ந்த செலவில் செல்கிறான். அமெரிக்காவில் வாழும் செல்வந்தப் பெண் லிண்டாவை மணக்க விரும்புகிறான். ஏற்கெனவே திருமணமாகிய மனைவியையும், தாம் பெற்ற இரு பிள்ளைகளையும் பிரிந்து அமெரிக்காவில் தங்க எண்ணுகிறான். தன் எண்ணத்தைக் கடிதத்தின் வழி மனைவிக்குத் தெரிவிக்கிறான். கடிதத்தைக் கண்ட மனைவி துர்கா இரு குழந்தைகளுடன் அமெரிக்கா புறப்பட்டு வந்து கணவனைச் சந்திக்கின்றாள். கணவன் வெறுப்புடன் பேசுகிறான். அப்பொழுது துர்கா,

> "உனது காசு பணம் யாருக்கு வேண்டும்? இந்த குழந்தைகளுக்கு முன்பு பொய் பேசுபவளாக ஆகக் கூடாது. இவர்களை என்னுடன் வைத்துக் கொண்டு என்னால் முடிந்த வரை நல்லவிதமாக வளர்ப்பேன்"[64]

என்று உறுதிபடப்பேசுகிறாள். பணத்திற்காகக் கணவன் மனைவியைப் புறக்கணித்த பொழுதும் துர்கா சோர்ந்துவிட வில்லை, குழந்தைகளை வளர்ப்பதில் மன வலிமையுடன் இருக்கிறாள். கணவனை விட்டுப் பிரியவும் முடிவு செய்கிறாள்.

'அதுசரி அப்புறம்' நாவலில் நந்தினி – மோகன் இருவரும் கணவன் மனைவியாக உள்ளனர். நந்தினி வேலை பார்க்கும் பெண். மனைவியின் சம்பளத்தில் குடும்பம் இயங்குகிறது. மனைவியைக் கொடுமைப் படுத்துவதுடன் குழந்தைகளையும் கொடுமைப் படுத்துகிறான். நந்தினி ஒரு முடிவு எடுக்க வேண்டிய சூழலில் இருக்கிறாள்,

> "என் வாழ்க்கை எப்படிப் போனாலும் குழந்தைகளை நல்ல விதமாக வளர்த்து ஆளாக்க வேண்டியது என் கடமை; மாறுவார், மாறுவார் என்று பொறுத்திருந்தது போதும், இனி என் குழந்தைகளின் வளமான

எதிர்காலத்தைக் கருதியாவது என்னை மாற்றிக் கொண்டே ஆக வேண்டும்”[65]

என்று முடிவு எடுத்துக் கணவனை விட்டுப் பிரிகிறாள், உழைத்துக் குடும்பத்தைக் காப்பாற்றாத கணவனை அவளால் பொறுத்துக் கொள்ள முடியும்; ஆனால் அவன் குழந்தைகளையும் கொடுமை படுத்தும் பொழுது குழந்தைகளுக்ககாகக் கணவனைப் புறக்கணிக்கிறாள்.

மண்குடிசை நாவலில் கணவனாக வரும் சிவராமன் உழைப்பில்லாமல், குழந்தைகளைக் கொடுமைப் படுத்துபவனாகவே உள்ளான். கணவனை எதிர்பார்க்காமலேயே உழைத்துக் குழந்தைகளைக் காப்பாற்ற மனைவி முன் வருகிறாள். ‘மூக்கணாங்கயிறு’ நாவலில் வரும் மூர்த்தியின் போக்குப் பிடிக்காமல் சந்திரா பிரிந்து போகிறாள். வேறொரு பெண்ணைத் திருமணம் செய்து வைத்துக் குழந்தைகளுக்கு ‘அப்பாவாகக் கொஞ்ச நேரம் வந்து போங்கள்’ என்று புரட்சிகரமான முடிவு எடுக்கிறாள். மேற்கண்ட நாவல்களில், தந்தை பொறுப்பற்று நடக்கும் பொழுது தாயானவள் தந்தைக்குரிய கூடுதல் பொறுப்பையும் சுமந்து, குழந்தைகளைச் சமூகத்தில் நல்ல நிலைமைக்குக் கொண்டு வரப் பாடுபடுகிறாள். தாயே தந்தையுமாகி நிற்கும் நிலை எதார்த்தத்தைப் பிரதிபலிப்பதாக அமைகிறது.

## குழந்தைகள் பெற்றோர்களிடம் நடக்கும் முறை

கதைப் போக்கில் குழந்தைகள் பெற்றோர்களிடம் நடக்கும் முறை பற்றிச் சில செய்திகளை சிவசங்கரி கூறிச் சென்றுள்ளார். நடைமுறையில், இப்பிரச்சினை பரவலாக இருந்தாலும் சிவசங்கரி இதனைக் கோடிட்டுச் சுட்டிச் செல்கிறார். எடுத்துக்காட்டு விளக்கத்திற்காக ‘வளர்த்த கடா’ நாவலின் சூழல் இங்கு தரப் பெறுகிறது. வங்கியில் உதவி மேலாளராக இருக்கும் தாமஸ் தம் பிள்ளைகளின் போக்கை, சம்பத்திடம் குறிப்பிடுவார்,

“என்ன பிள்ளைகள்? என்ன பெண்கள்? அந்த காலத்தில நாமெல்லாம் பெற்றவர்களுக்கு எதிரில் நின்று பேசப் பயப்படுவோம். பெரியவங்களுக்குப் பிடிக்காததை கனவில் கூட நினைத்துப் பார்க்க அஞ்சுவோம். ஆனால் இந்த காலத்துக் குழந்தைகள் அடேயப்பா . . .

வேண்டாத பேச்சும் . . பழக்கங்களும் . . . பிறக்கும் பொழுதே அல்லவா ... ஒட்டிக் கொண்டு விடுகின்றன"[66]

என்று குறிப்பிடுகின்றார். மூத்த தலைமுறையினர் தம் பெற்றோர்களிடம் அச்சத்துடனும், மதிப்புடனும் இருந்ததைச் சுட்டி இந்தத் தலைமுறையினர் அவ்வாறு இல்லாததையும் சுட்டிச் செல்கிறார். 'வளர்த்த கடா' நாவலில் இடம் பெறும் பெற்றோர்களும் தாங்கள் வளர்த்த விதத்தையும், தங்களால் வளர்க்கப்படுகிற குழந்தைகளையும் ஒப்பிடுகின்ற தலைமுறை இடைவெளிச் சிந்தனைகள் கருதத் தக்கன.

பொதுவாகக் குழந்தைகளுக்கு மிகுதியான செல்லம் கொடுத்து வளர்ப்பதைச் சிவசங்கரி விரும்பவில்லை. 'அம்மா ப்ளீஸ் எனக்காக' நாவலின் முன்னுரையில் தன் சினேகிதியின் குடும்பச் சூழலைக் குறிப்பிடுகின்றார். பிள்ளை தவறு செய்கின்ற பொழுது அவர்கள் வெறும் மோர்ச் சோறுதான் போடுவார்களாம். நாவை அடக்கத் தெரிந்தவன், பிற்காலத்தில் எந்த உணர்வையும் அடக்கி விடுவான் என்பது சினேகிதியின் சிந்தனையாகும்.

"எத்தனை தாய் தந்தைகள் தங்கள் அதீதமான செல்லத்தால் பிள்ளைகள் தவறான பாதையில் போகத் தாங்களே காரணமாகிறார்கள் என்பதை யோசிக்கும் போது மனசு அதிர்ந்து போனது"[67]

என்று சிவசங்கரி குறிப்பிடுகின்றார். குழந்தைகளைக் கண்டிப்புடன் வளர்ப்பதே சிவசங்கரியின் கருத்தெனத் துணியலாம்.

'ஆயுள் தண்டனை' என்ற நாவலில் வரும் பரத்,

"குழந்தைகளைப் பெற்று விட்டால் போதாது. அழகாய், புத்திசாலியாய், நல்ல குணம் கொண்டவர்களாய் நாடு போற்றும் நல்லவர்களாய் வளர்ப்பதில் தான் பெருமை இருக்கிறது"[68]

என்று குறிப்பிடும் நிலையில் சிவசங்கரியின் கருத்து ஒலிக்கக் காணலாம்.

## IV முதிர்ச்சி நிலை

கணவன் மனைவி இணைந்து வாழ்ந்து, குழந்தைகளைப் பெற்று, வளர்த்து, அவர்களுக்குத் திருமணம் செய்துவித்த பின் முதிர்ச்சி நிலை அடைவர். ஆய்விற்குட்படுத்தப் பெற்ற நாவல்களில் முதிர்ச்சி நிலை சார்ந்த நிலையில் கதைப்பின்னல் அமையப் பெற்ற நாவல்கள் ஒன்பதாகும். அதன் விளக்கம் அட்டவணையில் குறிக்கப் பெற்றுள்ளது.

அட்டவணை 4 : 9

| வ. எண் | நாவலின் பெயர் | கணவன் மனைவி பெயர் | ஒன்றாக வாழ்தல் | பிரிதல் | கணவன் இறத்தல் | மனைவி இறத்தல் |
|---|---|---|---|---|---|---|
| 1. | வளர்த்த கடா | சம்பத் – ராஜி | + | - | - | - |
| 2. | பிராயச் சித்தம் | ரவி – மதுரா | + | - | - | - |
| 3. | மூக்கணாங்கயிறு | மூர்த்தி – சந்திரா | - | + | - | - |
| 4. | பாலங்கள் | சுரேஷ் – சாரு | - | + | - | - |
| 5. | நூலேணி | கிச்சாமி – விசாலம் | - | - | - | + |
| 6. | அம்மா பிள்ளை | புருஷோத்தமன் – ரங்கம்மா | - | - | + | - |
| 7. | உயர்ந்தவர்கள் | ராஜாமணி – கமலம் | - | - | + | - |
| 8. | நான் நானாக | ரமணி–பாரதி | + | - | - | - |
| 9. | இன்னொருத்தி + இன்னொருத்தி | விஜயன் – சாந்தகுமாரி | + | - | - | - |
| | | | 4 | 2 | 2 | 1 |

## இணைவும் பிரிவும்

'வளர்த்த கடா', 'பிராயச்சித்தம்', 'இன்னொருத்தி + இன்னொருத்தி', 'நான் நானாக', போன்ற நாவல்களில் கணவன் மனைவி ஒன்றாக இருந்து முதிர்ச்சி நிலையை அடைகின்றனர். 'வளர்த்த கடா' நாவலில் சம்பத் – ராஜி இருவரும் தங்களின் பெண் குழந்தைகளான துளசி மற்றும் ரத்னாவிற்குத் திருமணத்தைச் செய்து முடிக்கின்றனர். தொடர்ந்து மகிழ்வுடன் இருக்கின்றனர்.

ஒருதலைக் காதல் வயப்பட்ட மதுரா தந்தையின் வற்புறுத்தலால் தன் அலுவலக மேலாளர் ரவியை மணக்கிறாள். இது கட்டாயத் திருமணமாக அமைந்ததால் கணவனுடன் இன்பமாக வாழாத நிலை. மதுராவின் மகனும் தான், விரும்பிய காதலனைப் போலவே, துறவியாகப் போகிறான். திருமணம் செய்தும் ஒதுக்கி வைத்த கணவனுடன் பிராயச்சித்தமாக மறுபடியும் வாழ்க்கையை முதிர்ச்சி நிலையில் தொடங்குகிறாள். இந்நிலை 'பிராயச் சித்தம்' நாவலில் காணக் கூடியதாகும்.

'இன்னொருத்தி + இன்னொருத்தி' நாவலில் விஜயன் – சாந்தகுமாரி தம்பதியினர்க்கு கௌரி, ரேவதி என்ற இரு பெண்கள் இருந்தனர். சாந்த குமாரிக்கு நோய் வந்து பதினைந்து வருடங்களாகக் 'கோமா' நிலையில் இருக்கிறாள். விஜயன் அவளையும் அரவணைத்துக் குழந்தைகளையும் ஆளாக்குவது கதையாக்கப் பெற்றுள்ளது.

'நான் நானாக' நாவலில் வரும் ரமணி – பாரதி இருவரும் தங்கள் இரு பையன்களையும் படிக்க வைக்கின்றனர். பாரதி வீட்டில் தனியாக இருப்பதால், தன் இளம் பருவ ஆசையை (நடனம் பற்றிய படிப்பு கற்றல்) சிந்திப்பதாகக் கதைப் போக்கு அமைந்துள்ளது.

'மூக்கணாங்கயிறு', 'பாலங்கள்' என்கிற இரு நாவல்களில் கணவன் – மனைவி இருவரும் பிரிந்து வாழ்கின்றனர். மூக்கணாங்கயிற்றில் மூர்த்தி அதீத பாலுணர்வு கொண்டவனாகச் சித்தரிக்கப் பெறுகிறான். மூர்த்தியின் மகன் மனோகர், தந்தையைப் பற்றித் தாயிடம் கேட்கிறான். மூர்த்தி வேலை பார்க்கும் அலுவலகத்தில் நளினி வேலை பார்க்கிறாள். மூர்த்தியின் மனைவி சந்திரா தானே முன்னின்று மூர்த்தி – நளினி திருமணத்தை நடத்தி வைத்துப்

பிரிந்து விடுகிறாள். "பிள்ளைகளுக்கு அப்பாவாக வந்து போங்கள் போதும்" என்று கூறிவிட்டுத் தன் பிள்ளைகளைக் கவனித்துக் கொள்கிறாள்.

'பாலங்கள்' மூன்றாம் பகுதியில் வரும் சுரேஷ் என்பவனும் அதீத பால் வெறி உடையவன். மனைவி சாருலதா அவன் போக்குப் பிடிக்காததால், விவாகரத்து செய்கிறாள். சாருலதா தன் மகள் அபர்ணாவிற்குத் திருமணம் செய்து வைக்கிறாள். அபர்ணாவிற்கும் பெண் பிறப்பதாகக் கதை அமைகிறது.

முதிர்ச்சி நிலை அடையப்பெற்ற நாவல்களில் ஆறு நாவல்கள் தனிக் குடும்ப நிலையுடனும், மூன்று நாவல்கள் கூட்டுக் குடும்ப நிலையுடனும் தொடர்புடையவை. தனிக் குடும்ப நிலையில் பாலங்கள் நாவலில் மட்டும் குழந்தைகள் முதிர்ச்சி நிலை அடையும் வரை கதைப் போக்கு அமைந்துள்ளது. கூட்டுக் குடும்ப நிலையில் அம்மாப் பிள்ளை, உயர்ந்தவர்கள் என்கிற நாவல்களில் குழந்தைகள் முதிர்ச்சி நிலை வரை கதைப்போக்கு இடம் பெற்றுள்ள நிலையை மதிப்பிட முடிகிறது.

'நூலேணி' நாவலில் கணவனான கிச்சாமி இருக்க, மனைவி விசாலம் இறக்கிறாள். கிச்சாமிக்கு ராஜாமணி,வெங்கிட்டு, நாராயணன், சீதாலட்சுமி, பெரியபாப்பா என்று ஐந்து குழந்தைகள் இருக்கின்றனர். மூத்த மகள் ராஜாமணி காமுவைத் திருமணம் செய்கிறாள். இவர்களுக்கு மங்களம், குமார் என்ற இரண்டு பிள்ளைகள். காமு இறந்தவுடன் ராஜாமணி, மறுமணம் செய்கிறாள். காமுவிற்குப் பிறந்த இரு குழந்தைகளையும் தாத்தா கிச்சாமியே வளர்க்கிறார். அடுத்த மகன் வெங்கிட்டு மைதிலியை மணக்கிறான். திருமணம் ஆன மகள் சீதாலட்சுமி இறக்கிறாள். அவளின் குழந்தை சின்ன பாப்பாவையும் கிச்சாமியே வளர்க்கிறார். மகள் பெரிய பாப்பாவிற்கும் திருமணம் செய்து வைக்கிறார். மனைவியின் சகோதரன் அறிவில் இரண்டும் கெட்டானாக உள்ள சேதுராமனையும் தன்னுடன் வைத்துப் பராமரிக்கிறார். மனைவியின் துணை இல்லாமலே குடும்பப் பாரத்தை நன்முறையில் இயக்கி முதிர்ச்சிநிலை அடைபவராகச் சித்தரிக்கப் பெற்றுள்ளார்.

## கணவன் இறப்பு

'அம்மா பிள்ளை' நாவலில் கணவன் புருஷோத்தமன் இறந்துவிடுகிறார். ரங்கம்மாள் மகனைச் செல்லமாக வளர்க்கிறாள். மகனின் திருமண வாழ்க்கை மட்டும் சரியாக அமையவில்லை. 'உயர்ந்தவர்கள்' நாவலில் கமலத்தின் கணவன் ராஜாமணி இறக்கவே, தம்பி குருமூர்த்தியிடம் கமலம் வந்து விடுகிறாள். தனக்குள்ள மூன்று குழந்தைகளையும் தம்பியின் துணையுடன் வளர்த்து ஆளாக்குவதில் செயல்திறம் உடையவளாகக் காட்டப் பெற்றுள்ளாள்.

## முடிவுரை

சமுதாயத்தில் குடும்பம் குறிப்பிடத்தகுந்த அங்கம். குடும்பத்தில் மரபியல் கூறுகளும் அந்நிலைக்கு முரணான சூழல்களும் முரண்படுகின்றன. இந்நிலையைப் படைப்பிலக்கியங்கள் தம்மிடம் பதிவு செய்தல் இயல்பாகும். சிவசங்கரி, பெண் எழுத்தாளராக இருப்பதாலும், படைப்புகளில் குடும்பம் தொடர்பான படைப்புக்களை மிகுதியாகப் படைத்திருப்பதாலும் குடும்ப நிலையை எழுத்துக்களில் மிக அழுத்தமாகப் பதிவு செய்துள்ளார்.

சிவசங்கரி உண்மையான நிகழ்வில் நாவலை உருவாக்கும் நாவலாசிரியர். அந்நிகழ்வுகள் குறித்து சிவசங்கரியின் கருத்து வீச்சுக்களும் நாவலில் இடம் பெற்றுள்ளன.

குடும்பத்தில் அன்பு, மரியாதை, போன்றவைகளை ஒருவருக் கொருவர் கொடுத்து வாங்க வேண்டும். விட்டுக் கொடுத்தல், ஒருவரை யொருவர் புரிந்து கொள்ளுதல் போன்ற இயல்புகளைக் கடைப்பிடித்தால் குடும்பத்தில் சிக்கல்கள் எழ வாய்ப்பில்லை என்பது குடும்பம் பற்றிய சிவசங்கரியின் கருத்தாகும். குடும்பத்தில் தவறு இருப்பின் மன்னிப்பதும், எதையும் பெரிது படுத்தாமல் நல்லதை எடுத்துத் தீயதை விலக்குவதும் நல்ல குடும்பத்தின் நலத்திற்கு ஆதாரமாகும்.

குடும்ப இயக்கத்தில் பெண்களின் பங்கு மிகுதி. பெண் உயர்வாக இருந்தாலும் கணவனை அரவணைத்துச் செல்ல வேண்டும். கணவன் – மனைவிக்கிடையே உள்ள முரண்கள் நான்கு சுவர்களுக்குள் இருப்பது தான் நல்லது என்று குறிப்பிடுகின்றார். அவ்வகையில் பெண் அருங்குணங்களைப்

பெற்றவளாய்க், கணவனைப் புரிந்தவளாய், ஆற்றல் உள்ளவளாய் இருக்க வேண்டியவளாக உள்ளாள்.

தமிழ்ச் சமூக அமைப்பு ஆணாதிக்கச் சமூக அமைப்பாகும். அவ்வமைப்பில் மனைவி கணவன் வீட்டுடன் ஐக்கியமாகி விட வேண்டும். மனைவி தன் பிறந்தகத்திலிருந்து எதையும் வாங்கலாம். ஆனால் கொடுத்து உதவும் நிலை இல்லை. இந்நிலையிலிருந்து மனைவி மீட்சி பெற வேண்டும் என்பது சிவசங்கரியின் கருத்தாகும். கணவன் வழிக் குடும்பமும், மனைவி வழிக்குடும்பமும் சரிநிகர் நிலையாகக் கருதப் பெற வேண்டும் என்று சிவசங்கரி வற்புறுத்துகிறார்.

பெண்கள் பொருள் ஈட்டலுக்காக அலுவலை மேற்கொள்ள வேண்டும் என்ற நிலையை சிவசங்கரி வரவேற்கவில்லை. கணவன் பொருள் ஈட்டினால் மனைவி குடும்பத்தைப் பராமரிக்கிறாள். குடும்பப் பராமரிப்பின் பங்கு பொருள் ஈட்டலுக்கு இணையானது.

குடும்பப் பெண் அன்பு, தியாகம் ஆகியவற்றைக் கொண்டவளாக இருக்க வேண்டும். அவளுக்கு மரியாதை, நட்பு போன்றவை குடும்பத்திலிருந்து கிடைக்க வேண்டும். சுயமரியாதை, தன்னம்பிக்கை இல்லாமல் பெண் வாழ முயற்சித்தால் வாழ்க்கையின் உண்மையான பொருள் கிடைக்காது.

குடும்ப உருவாக்கத்தில் நான்கு வளர்ச்சி நிலைகள் உண்டு. திருமணத்திற்கு முந்தைய நிலை, திருமண நிலை, குழந்தை வளர்ப்பு நிலை, முதிர்ச்சி நிலை போன்றவைகளாகும்.

திருமணத்திற்கு முந்தைய நிலை காதலுடன் தொடர்புடையது. காதல் பற்றிய மதிப்பு (value) காலச் சூழலைப் பொறுத்து அமையும். காதல் உணர்வு இயற்கையாய்த் தாமாக எழ வேண்டும். இத்தகு காதல் தான் வாழ்க்கை முழுவதும் இணைந்து மணம் வீசும் என்று குறிப்பிடுகின்றார். அழகு மட்டும் காதல் தோன்றுவதற்குரிய நிலைக்களன் இல்லை. குணம், எளிமை போன்றவைகளும் நிலைக்களனாக இயங்குவதைக் குறிப்பிடுகின்றார்.

காதல் மனத்துடன் தொடர்பானது. காமம் சார்ந்த காதலுக்கு சிவசங்கரி ஆதரவு தெரிவிக்கவில்லை. ஆன்ம சங்கமம் சார்ந்த உயர் காதல் தேவை என்கிறார்.

காதலர்கள் திருமணத்தில் சங்கமமாகி விட வேண்டும் என்கிற நேர் எண்ணங்கள் (Positive thinking) சிவசங்கரியின் கருத்தாகும் ஆய்விற்கு உட்படுத்தப்பட்ட நாற்பத்து நான்கு நாவல்களில் பத்தொன்பது நாவல்களில் காதல் இடம் பெற்றுள்ளது. அவைகளில் பதினாறு நாவல்கள் நிறைவேறும் காதலோடு தொடர்புடைய நிலை குறிக்கத் தகுந்ததாகும்.

நிறைவேறும் காதலில் சிவசங்கரி இருமனக் காதலை வற்புறுத்தும் நிலையை ஆய்வின் வழி மதிப்பிட முடிகிறது. இருமனக் காதலில் காதலர்களின் ஒத்த உணர்வு சிறப்பிடம் பெறுகிறது. நிறைவேறும் காதலில் இயல்வுக் காதலும் ஒருவகையாகும். தம் நாவலில் இவ்வகைக் காதலை மிகுதியாக இடம் பெறச் செய்துள்ளார். எதார்த்தமான வாழ்வியலுக்கு இவ்வகைக் காதலே ஆதாரமாக உள்ளது. உறவினர்களிடையே தோன்றும் காதலை சிவசங்கரி ஆதரிக்கவில்லை. அறிவியல் பரிணாமம் பெற்றுள்ள இன்றைய சூழலில் உறவு நிலைத் திருமணங்கள் வரவேற்கப் பெறாத எதார்த்த சூழலை சிவசங்கரி தம் படைப்புகளில் பதிவு செய்துள்ளதாக மதிப்பிடலம். முன்பின் அறியாத ஓர் ஆணும் பெண்ணும் சந்தித்துக் காதல் தோன்றுவதே உறவு இல்லாதவரிடம் தோன்றும் காதலின் தனித் தன்மையாகும்.

உறவு இல்லாதவரிடம் தோன்றும் காதல் இருவகைப்படும். ஒரே சாதி/ இனம் சார்ந்து அமையும் காதல் ஒரு வகையாகும். வெவ்வேறு சாதி/ இனம் சார்ந்தமையும் காதலை சிவசங்கரி தம் எழுத்துக்களில் பதிவு செய்துள்ளார். காதலை மனம் சார்ந்ததாகச் சிவசங்கரி கருதுவதால் சாதி இன வேறுபாடுகளை தவிர்ப்பதாக மதிப்பிடலாம். அவ்வகையில் கலப்பு மணத்தை ஆதிரிப்பவராகவும் இருக்கின்றார்.

சமய வேறுபாடு சார்ந்த காதலுக்குச் சமய மாற்றத்தைத் தீர்வாக சிவசங்கரி குறிப்பிடவில்லை. சிவசங்கரியின் பெண்கள் பெற்றோர்களிடம் துணிவாகக் காதலை எடுத்துக் கூறுபவர்களாகவே உள்ளார்கள். சிவசங்கரியின் பெண்கள் நகரத்தைச் சார்ந்தவர்களாவகவும் ஓரளவு கற்றவர்கள் அல்லது பணியில் இருப்பவர்களாக உள்ளதால் காதலில் துணிவாகவும், நினைத்ததைச் சாதிப்பவர்களாகவும், கலப்புக் காதலில் வெற்றி பெற்றவர்களாகவும் உள்ளார்கள்.

உடல் அழகிற்கு முதன்மை தராமல் மன அழகிற்கு முதலிடம் தரும் நிலை உயர் காதலில் இடம் பெறுவதாகும். 'ஏரிக்கடியில் சில கனவுகள்', 'மாலையில் பூக்கும் மலர்கள்' என்கின்ற மிகச் சில நாவல்களில் இவ்வகைக் காதலைச் சித்தரித்துள்ளார்.

நிறைவேறாக் காதல் வகையைச் சிவசங்கரி குறிப்பிடும்படி சித்தரிக்கவில்லை. அவ்வகையில் ஒருமனக் காதல் வகையில் நான்கு நாவல்கள் உள்ளன. பெண்களிடம் காதலன்பு தோன்ற ஆடவர் மறுக்கும் நிலையைப் பதிவு செய்துள்ளார். நிறைவேறாக் காதலில் ஆடவர் காதலைப் புனிதமாகக் கருதாத நிலையில் பெண் பாதிக்கப் பெறுவதைக் குறிப்பிடுகிறார்.

திருமணம் என்கிற பயிர் நீண்டகாலம் உயிரோடு இருக்கிற பயிர். இடையில் கருகிவிடக் கூடாது. மன ஒழுங்குதான் திருமண வாழ்வின் அடிப்படை. திருமண வாழ்வில் பலவகை அனுபவங்கள் எதிர்ப்படுவது இயல்பு. ஏற்றுக்கொள்ள வேண்டியதை ஏற்றும், ஒதுக்க வேண்டியதை ஒதுக்குவதும் விவேகமான செயல் என்று சிவசங்கரி கருத்துத் தெரிவிக்கிறார்.

பெண் பாத்திரங்களுக்குத் திருமண வயதாகப் பதினெட்டிற்கு மேல் என்ற கருத்துக் குறிக்கப் பெறுகிறது. அழகும் இளமையும் உடைய இப்பருவமே திருமணத்திற்கேற்ற பருவம் ஆகும். இப்பருவம் தப்பித் திருமணம் செய்தால் திருமண வாழ்வு சிக்கலானதாக அமையும் என முதியப் பாத்திரங்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர். வயதிற்கு வந்த பெண்ணை உரிய காலத்தில் திருமணம் செய்வதில் அச்சம் கலந்த பொறுப்புக் கடமையாக உள்ளது. ஆண்களைவிடப் பெண்கள் திருமண வயது குறைவாக இருக்கும் நிலை எதார்த்தத்தின் பிரதிபலிப்பாகும்.

வரதட்சணை வழக்கத்திலிருந்து சமூகம் மீட்சி அடைய வேண்டுமென்பது சிவசங்கரியின் விருப்பமாகும். இளம் சமூகத்தினரிடம் வரதட்சணையைக் கட்டாயமாக வாங்க வேண்டுமென்கிற எண்ணம் இல்லை. மூத்த தலை முறையினரிடம் இருக்கும் எண்ணத்தைப் படிப்படியாக அகற்ற வேண்டும் என்று கருத்துத் தெரிவிக்கின்றார். இலட்சியப் பெற்றோர்களைச் சித்தரித்து வரதட்சணை வாங்காத இயல்பை உயர்த்தி, வாழ்வில் முன் மாதிரி நிலையை உருவாக்கிக் காட்டுவதும் குறிப்பிடத் தகுந்ததாகும்.

திருமண நிலையில் மூத்தத் தலைமுறையினரிடம் மரபியல் சார்ந்த கருத்துக்கள் கோலோச்சுகின்றன. இந்நிலையிலிருந்து மீட்சி அடைவதற்கு இளந்தலைமுறையினரின் கருத்துக்களை சிவசங்கரி ஓங்கி ஒலிக்கச் செய்யவில்லை. ஆனால் திருமணத்திற்கு முன்புள்ள காதல் நிலையில் முற்போக்கு அல்லது மேன்மைக் கருத்துக்களை நன்கு ஒலிக்கச் செய்துள்ளார். திருமணத்தின் விதிக் கொள்கைகளைப் புறக்கணிக்கிற நிலையில் இளந் தலைமுறையினர் உருவாக்கப் பெறவில்லை.

ஆய்விற்குட்படுத்தப் பெற்ற நாவல்கள் நாற்பத்து நான்கில் இருபத்து இரண்டு நாவல்களில் திருமணமானவர்களைச் சுற்றிக் கதைப்பின்னல் அமைந்துள்ளது. குடும்பம் சார்ந்த நாவல்களுக்கு இந்நிலை ஆதாரமாக விளங்குவதும் கருதத்தக்கதாகும்.

மூத்தோர் இசைவுடன் நிகழும் திருமணம் மரபு சார்ந்த திருமணமாகும். இவ்வகையில் பெண் பார்த்தல், வரதட்சணைப் பேச்சு, சம்மதம் தெரிவித்தல், சாதகப் பொருத்தம் பார்த்தல், நாள் பார்த்தல், வைதிகச் சடங்குகள், இடம் பெறுதல், முதல் இரவு என்ற நிலையில் மரபு சார்ந்த சிந்தனைகள் மேலோங்கி இருக்கும் இந்நிலை சிவசங்கரியின் கதைப் போக்குகளில் இடம் பெறுகின்றன.

மரபு சார்ந்த திருமணத்தில் முதல் மணம் சார்ந்த நாவல்களே மிகுதி (30). மறுமணம் மிகக் குறைவான நிலையில் சித்தரிக்கப் பெற்றுள்ளது. மறுமணம் புரிவோரில் ஆடவரே மிகுந்திருக்கின்றனர். இந்நிலை நடப்பியல் வாழ்வில் எதார்த்தமானதாகவும் உள்ளது.

மூத்தோர் இசைவின்றி நிகழ்த்தப் பெறும் மரபு மீறிய திருமணம் நான்கு நாவல்களில் மட்டுமே இடம் பெற்றுள்ளது. பொதுவாக சிவசங்கரி மூத்தோர் இசைவுடன் நிகழ்த்துகின்ற மரபுத் திருமணத்தையே ஆதரிப்பதாக மதிப்பிடலாம்.

தனிக்குடும்பம் சார்ந்த நாவல்களில் இருபத்து எட்டில் பதினெட்டு நாவல்களில் கதைப் போக்கில் குழந்தைகள் பற்றிய செய்திகள் கூறப்பெறுகின்றன. மூத்த தலைமுறையினர் குழந்தைகள் வளர்ப்பில் எண்ணெய் கொடுத்தல், உச்சிக்கு வைத்தல், கண்ணுக்கு எண்ணெய் கட்டுதல், மை இடுதல் போன்ற வழக்கங்களை வற்புறுத்துகின்றனர். மருத்துவர்

பாத்திரத்தின் வழியே முற்சுட்டிய வழக்கங்கள் அறிவியல் நிலையில் வரவேற்பதில்லை என்பதை வலியுறுத்துகிறார்.

குடும்பப் பணியில் பெண்களின் பங்கு மிகுதி என்பது சிவசங்கரியின் கருத்தாகும். எனினும் குழந்தை வளர்ப்புப் போன்ற குடும்பப் பணிகளில் ஆடவர்களுக்கும் பங்கு உண்டு என்று குறிப்பிடுகின்றார்.

பெற்றோர்களின் பொறுப்பில் குழந்தைகள் வளர்க்கப் பெற வேண்டும். ஆயாக்கள் பொறுப்பில் குழந்தைகள் வளர்க்கப் பெறுவதால் பாசமும் உறவு நிலையில் ஏக்கமும் இடைவெளியும் உருவாகும் என்பது சிவசங்கரியின் கருத்தாகும். பிள்ளைகளுக்கு உறவுக்காரர்களின் அன்பு, செடிக்கு நீர் ஊற்றுவது போல எனக் குறிப்பிடுகின்றார்.

தாய் குழந்தை வளர்ப்பில் செல்லம் காட்டும் பொழுது தந்தை கண்டிப்புக் காட்டி நெறிப்படுத்துதல் வேண்டும். செல்லம் கொடுக்கும் நிலை குழந்தைகளின் எதிர்கால வாழ்க்கையை ஒளிபெறச் செய்யாது எனத் தெரிவிக்கிறார்.

தற்காலச் சமூகச் சூழலில் குழந்தைகளை எங்ஙனம் வளர்க்கப் பெற வேண்டும் என்பது பற்றிச் சிவசங்கரி கருத்துத் தெரிவிக்கிறார். வளர்ந்த குழந்தைகளின் உணர்வுகளைப் புரிந்து கொண்டு நடத்தல் வேண்டும். இது தந்தையின் நிலை. தாய் வளர்ந்த குழந்தைகளிடம் தாயாக மட்டுமின்றி நட்புணர்வுடன் செயல்பட வேண்டும். பெற்றோர்களின் ஆசைகளைக் குழந்தைகளிடம் திணிக்கக் கூடாது. குழந்தைகளின் விருப்பு வெறுப்புகளை அறிதல் வேண்டும். இக்காலக் குழந்தைகள் மனதிலேயும், உடம்பிலேயும் வயதிற்கு மீறின வளர்ச்சி பெற்றிருப்பதால் அதைப் புரிந்து தாய் தந்தையாக செயல்படுவது நலம் பயக்கும் என்று குறிப்பிடுகின்றார்.

கூட்டுக் குடும்பம் சார்ந்த நாவல்களில் பதினாறு நாவல்களில் பதினொரு நாவல்களில் குழந்தைகள் தொடர்பான செய்திகள் பேசப் படுகின்றன. கூட்டுக் குடும்பத்தில் குழந்தை வளர்ப்பு பெற்றோர்களுக்கு என்றிருந்தாலும் குறிப்பாகப் பெண்களுக்கென்று கூறப்படுகிறது.

கணவன் மனைவியைப் புறக்கணிக்கும் சூழலில் மனைவி மனவலிமையுடன் குழந்தைகளை வளர்ப்பதில் தன்னம்பிக்கையுடன் செயல்படுவதைச் சிவசங்கரி விரும்புகிறார். கணவன் உழைத்துக்

காப்பாற்றாமல் குடிப்பதிலும் கொடுமைப் படுத்துவதிலும் ஆர்வம் காட்டினால் மனைவி அவனிடம் வாழ்வதில் பொருள் இல்லை. அச்சூழலில் பிரிந்து வாழும் மனைவி தன்னம்பிக்கையுடன் குழந்தைகளை வளர்த்து ஆளாக்க வேண்டும் என்ற சூழலில் உரம் நிறைந்த பெண்கள் இத்தகு சூழலில் வேண்டுமென்கிறார்.

ஆய்விற்குட்படுத்தப் பெற்ற நாவல்களில் முதிர்ச்சி நிலை சார்ந்தமையும் நாவல்கள் ஒன்பதாகும். கணவன் – மனைவி இணைந்து வாழ்ந்து, குழந்தைகளை உருவாக்கி, அவர்களுக்கும் திருமணம் நிகழ்த்தும் நிலையை எய்துதல் முதிர்ச்சி நிலையாகும். இந்நிலையில் நான்கு நாவல்கள் தொடர்பு பெறுகின்றன. கணவனின் அதீதப் பாலுணர்வில் வெறுப்புற்று, மனைவியர் பிரிந்து வாழ்கின்றார்கள். இவர்கள் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாட்டில் விலகியதால் மனைவியர்களின் புறக்கணிப்பிற்கும், விலகுதலுக்கும் உள்ளாகிறார்கள்.

கூட்டுக்குடும்ப நிலை சார்ந்த நாவல்களில் முதிர்ச்சி நிலை மிகுந்திருப்பது கருதற்குரியது. வயது முதிர்ந்தவரின் நெறிப்படுத்துதல், சகிப்புத்தன்மை, போன்றவை கூட்டுக் குடும்பத்தில் இயல்பாக இருப்பதும் இங்கு கருதத் தக்கதாகும்.

மனைவி இறந்த பின் கணவனாலும், குடும்பத்தைத் தாங்கி உயர்த்த முடியும். முதிர்ச்சி நிலை வரைக்கும் பொறுப்புகளை நிர்வகிக்க முடியும் என்கிற நேர் எண்ணம் (Positive thinking) சார்ந்த நம்பிக்கையூட்டும் நிலை சிவசங்கரியிடம் இடம் பெற்றுள்ளது. இதே நிலை கணவன் இறந்து மனைவி இறந்தாலும் செயல் முறைப்படுத்துவது நன்மை பயக்கும்.

* * * * *

# சான்றாதாரங்கள்


1. தி.சு. நடராசன் “சிவசங்கரி நாவல்கள் பெண்கள் படைப்பில் பெண்கள்” தேவத்தா, (ப.ஆ), ப,93.
2. மேலது, ப,94.
3. மேலது, ப,94.
4. காண்க; பின்னிணைப்பு; பேட்டி–1 வினா எண் : 6 – இன் விடை.
5. சிவசங்கரி, என் கண்ணோட்டத்தில், ப,166.
6. சிவசங்கரி, அது சரி அப்புறம், ப,29.
7. மேலது, ப,126.
8. சிவசங்கரி, சுட்ட மண், ப,326.
9. சிவசங்கரி, ஆயிரம் காலத்துப் பயிர், பக்,180–181.
10. சிவசங்கரி, என் கண்ணோட்டத்தில், பக்,129–130.
11. சிவசங்கரி, ஏரிக்கடியில் சில கனவுகள், பக்,129–130.
12. சிவசங்கரி, நதியின் வேகத்தோடு, ப,214.
13. சிவசங்கரி, அது சரி அப்புறம், ப,73.
14. சிவசங்கரி, மாலையில் பூக்கும் மலர்கள், ப,114.
15. சிவசங்கரி, என் கண்ணோட்டத்தில், பக்,132–133.
16. மேலது, ப,133.
17. பிரமிளா கபூர், Love Marriage and Sex, ப,25.

18. சிவசங்கரி, திரிவேணி சங்கமம், ப,101.

19. சிவசங்கரி, நதியின் வேகத்தோடு, ப,101.

20. சிவசங்கரி, இன்னொருத்தி + இன்னொருத்தி, ப,313.

21. மேலது, ப,277.

22. சிவசங்கரி, ஏரிக்கடியில் சில கனவுகள், ப,45.

23. சிவசங்கரி, தவம், ப,29.

24. சிவசங்கரி, திரிவேணி சங்கமம், ப,101.

25. சிவசங்கரி, இன்னொருத்தி + இன்னொருத்தி, ப,313.

26. சிவசங்கரி, சுட்ட மண், ப,108.

27. மேலது, ப,108.

28. சிவசங்கரி, வேரில்லாத மரங்கள், பக்,61–62.

29. சிவசங்கரி, ஏரிக்கடியில் சில கனவுகள், ப,45.

30. சிவசங்கரி, அவர்களுக்குப் புரியாது, ப,168.

31. சிவசங்கரி, சுட்ட மண், ப,331.

32. சிவசங்கரி, பாலங்கம், பக்,40-41.

33. மேலது, ப,40.

34. சிவசங்கரி, திரிவேணி சங்கமம், ப,33.

35. சிவசங்கரி, நதியின் வேகத்தோடு, ப,13.

36. சிவசங்கரி, தான் தன் சுகம், ப,31.

37. சிவசங்கரி, கோழைகள், ப,124.

38. சிவசங்கரி, ருசி கண்ட பூனை, பக்,35-36.

39. சிவசங்கரி, ஆயிரம் காலத்துப் பயிர், ப,81.

40. சிவசங்கரி, நான் நானாக, ப,64.

41. சிவசங்கரி, வளர்த்த கடா, ப,16.

42. சிவசங்கரி, பாலங்கள், ப,40.

43. மேலது, ப,40.

44. சிவசங்கரி, அது சரி அப்புறம், ப,37.

45. சிவசங்கரி, பாலங்கள் இரண்டாம் பகுதி, ப,39.

46. சிவசங்கரி, பொய், ப,20.

47. சிவசங்கரி, பாலங்கள் இரண்டாம் பகுதி, ப,49.

48. சிவசங்கரி, வளர்த்த கடா, ப,73.

49. மேலது, ப,100.

50. மேலது, ப,101.

51. சிவசங்கரி, அது சரி அப்புறம், ப,157.

52. சிவசங்கரி, வானத்து நிலா, ப,256.

53. சிவசங்கரி, அம்மா ப்ளீஸ் எனக்காக, பக்,48-49.

54. சிவசங்கரி, அம்மா பிள்ளை, ப,204.

55. மேலது, ப,21.

56. சிவசங்கரி, பாலங்கள் (இரண்டு), ப,88.

57. சிவசங்கரி, பாலங்கள் (மூன்று), ப,232.

58. சிவசங்கரி, நான் நானாக, ப,76.

59. சிவசங்கரி, பாலங்கள் (மூன்று), ப,232.

60. மேலது, ப,325.

61. சிவசங்கரி, ஆயுள் தண்டனை, ப,27.

62. சிவசங்கரி, நூலேணி, ப,170.

63. மேலது, ப,171.

64. சிவசங்கரி, பொய், ப,135.

65. சிவசங்கரி, அது சரி அப்புறம், ப,218.

66. சிவசங்கரி, வளர்த்த கடா, ப,149.

67. சிவசங்கரி, அம்மா ப்ளீஸ் எனக்காக, முன்னுரை.

68. சிவசங்கரி, ஆயுள் தண்டனை, ப,253.

ல்லை

# 5. தனிக்குடும்ப உறவுநிலைகள்

'குடும்பம்' சமூகத்தின் மிகப் பெரிய அங்கம் எனலாம். மாறிவரும் சமூகச் சூழலுக்கேற்பக் குடும்பத்தின் மதிப்புகளும் மாற்றம் பெறுகின்றன. குடும்ப நிலையில் மரபுகளும் மாற்றங்களும் முரண்படுவது இயல்பெனலாம். முரண்பாட்டில் சிக்கல்களும் அவற்றிற்கான தீர்வுகளும் ஏற்படுவது எதார்த்த நிலையாகும். இந்நிலையை எழுத்தாளர்கள் தம் எழுத்துக்களில் பதிவு செய்துள்ளனர். அம்முறையில் சிவசங்கரி எங்ஙனம் பதிவு செய்துள்ளார் என்பதை மதிப்பிடும் வகையில் இவ்வியல் அமைகிறது. அம்மதிப்பீட்டிற்கு முன் குடும்ப வகைப்பாட்டினைக் கருத்தில் கொண்டு இவ்வியலில் தனிக்குடும்ப உறவு நிலைகள் குறித்த மெய்ம்மைகள் ஆராயப்பெறுகின்றன.

## குடும்பத்தின் வகைகள்

> "மணமுறையினாலோ அல்லது இரத்த சம்பந்தத்தினாலோ பிணைப்பு ஏற்பட்டு மக்கள் தமக்குள் சேர்ந்து ஒரு குழுவாக வசிப்பார்கள். அவர்கள் தமக்குள் கணவன், மனைவியாகவோ, தந்தை தாயாகவோ, மகன் மகளாகவோ, சகோதரன் சகோதரியாகவோ அமைந்து ஒரு பொதுவான பண்பாட்டைத் தங்களுக்குள் கடைப்பிடித்து வருவர்"[1]

என்று குடும்பத்தைப் பற்றிக் குறிப்பிடுவர். பொதுவாக மணவாழ்வு மேற்கொள்ளும் நிலையில் குடும்பத்தின் தோற்றம் ஏற்படுவதாகக் கருதலாம். இதனை மணவழிக்குடும்பம் (Conjugal Family) எனக் குறிப்பிடலாம். பின்னர் அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளும் குடும்பத்தில் இணைப்புப் பெறும். இந்நிலையில் குழந்தைகள் வளர்ந்து மேலும் விரிவாக்கம் பெறுகிறபோது கூட்டுக் குடும்பம் உருவாகிறது.

மேற்குறித்த நிலையை நோக்கும்போது குடும்பத்தில் தனிக்குடும்பம், கூட்டுக் குடும்பம் என்ற இரு வகைப்பாட்டினைப் பெறலாம். சிவசங்கரி நாவல்களில் இவ்வகைப்பாடு குறித்த செயல்கள் அட்டவணைப்படுத்தப் பெற்றுள்ளன.

அட்டவணை 5.1

## சிவசங்கரி நாவல்களில் குடும்ப வகைப்பாடு

| வ. எண் | நாவலின் பெயர் | ஆண்டு | தனிக்-குடும்பம் | கூட்டுக்-குடும்பம் |
|---|---|---|---|---|
| 1. | எதற்காக | 1969 | + | - |
| 2. | திரிவேணி சங்கமம் | 1970 | + | - |
| 3. | ஏன் | 1974 | + | - |
| 4. | நதியின் வேகத்தோடு | 1975 | + | - |
| 5. | சுறாமீன்கள் | 1977 | + | - |
| 6. | மெள்ள மெள்ள | 1978 | - | + |
| 7. | 47 நாட்கள் | 1978 | + | - |
| 8. | தப்புக் கணக்கு | 1978 | + | - |
| 9. | அம்மா ப்ளீஸ் எனக்காக | 1979 | + | - |
| 10. | ஆயுள் தண்டனை | 1979 | - | + |
| 11. | வளர்த்த கடா | 1979 | + | - |
| 12. | துள்ள முடியாத புள்ளிமான் | 1979 | + | - |
| 13. | அவர்களுக்குப் புரியாது | 1980 | + | - |
| 14. | பிராயச் சித்தம் | 1981 | + | - |
| 15. | போகப்போக | 1981 | + | - |
| 16. | தான் தன் சுகம் | 1981 | - | + |
| 17. | தவம் | 1982 | - | + |
| 18. | திரிசங்கு சொர்க்கம் | 1982 | + | - |
| 19. | மாலையில் பூக்கும் மலர்கள் | 1982 | + | - |
| 20. | கப்பல் பறவை | 1982 | + | - |
| 21. | மூக்கணாங்கயிறு | 1982 | + | - |
| 22. | பாலங்கள் | 1983 | - | + |

| வ. எண் | நாவலின் பெயர் | ஆண்டு | தனிக்-குடும்பம் | கூட்டுக்-குடும்பம் |
|---|---|---|---|---|
| 23. | ஆயிரம் காலத்துப் பயிர் | 1983 | - | + |
| 24. | கருணைக் கொலை | 1983 | - | + |
| 25. | பொய் | 1985 | + | - |
| 26. | ஒற்றைப் பறவை | 1985 | - | + |
| 27. | நூலேணி | 1985 | - | + |
| 28. | அது சரி அப்புறம் | 1985 | + | - |
| 29. | மண் குதிரைகள் | 1985 | + | - |
| 30. | அம்மாப் பிள்ளை | 1986 | - | + |
| 31. | இனி தொடராது | 1986 | - | + |
| 32. | மலையின் அடுத்த பக்கம் | 1987 | + | - |
| 33. | வேரில்லாத மரங்கள் | 1987 | - | + |
| 34. | ஏரிக்கடியில் சில கனவுகள் | 1988 | + | - |
| 35. | வானத்து நிலா | 1989 | + | - |
| 36. | உயர்ந்தவர்கள் | 1989 | - | + |
| 37. | ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால் | 1989 | - | + |
| 38. | நான் நானாக | 1991 | + | - |
| 39. | சுட்டமண் | 1991 | + | - |
| 40. | குட்டி | 1991 | - | + |
| 41. | இன்னொருத்தி + இன்னொருத்தி | 1992 | + | - |
| 42. | இவர்களும் அவர்களும் | 1992 | - | + |
| 43. | இனி | 1993 | + | - |
| 44. | நப்பாசை | 1994 | + | - |
| | | | 28 | 16 |

ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப் பெற்ற நாவல்களில் தனிக்குடும்பம் சார்ந்த நாவல்கள் மிகுந்திருப்பதை அட்டவணையின் வழி உணரலாம். இருபத்து எட்டு நாவல்கள் தனிக்குடும்ப நிலையில் அமைகின்றன. பதினாறு நாவல்களே கூட்டுக்குடும்ப நிலையைச் சார்ந்து அமைகின்றன.

தனிக்குடும்ப நிலை

தனிக்குடும்பத்தில்

> "கணவன் மனைவி என்ற இருவர் இருப்பர். குறைந்தது ஒரு குழந்தையாவது இருக்கலாம். இல்லாமலும் இருக்கலாம்"[2]

இவ்வித அமைப்புள்ள குடும்பத்தையே தனிக்குடும்பம் என்பர். அதனைக் கீழ்க்கண்ட விளக்கப் படத்தினின்றும் விளக்கலாம்.




விவசாயத் தொழிலை முதன்மையாகக் கொண்ட அக்காலச் சமூகத்தில் கூட்டுக் குடும்பத்திற்கு வரவேற்பு இருந்தது. அக்குடும்பமுறையே அச்சமூகக் காலக்கட்டத்தில் வளம் பெற முடியும் என்ற நிலையும் இருந்தது. விவசாய யுகமும், இயந்திரயுகமும் தொடர்ந்து அறிவியல் யுகமும் ஆட்சி செய்கிற இக்காலத்தில் ஒரே இடத்தில் இருந்து வாழ முடியாத நிலை இயல்பாகிறது. கல்வியின் பெருக்கத்தால் வேலைக்காகப் பலர் கிராமத்திலிருந்து நகரம் நோக்கி நகர்கின்றனர். நகரியம் சார்ந்த வாழ்க்கையில் கூட்டுக்குடும்பம் சிதைந்துள்ளதை சமூகவியல் அறிஞர்களும் எடுத்துக்காட்டுகின்றனர்.

"மக்கள் தாங்கள் வசிக்கும் இடத்தைவிட்டு வேறு இடத்துக்குக் குடி பெயர்ந்தாலும் அவர்களிடம் தனிக்குடும்ப நிலை தான் உள்ளது"[3]

என்பது சமூகவியலாரின் சிந்தனையாகும்.

பழமைகளிலிருந்து முரண்படும் நிலையில் சமூகச் சூழலில் சிக்கல்கள் தோன்றுகின்றன.

'இக்காலச் சமுதாயத்தில் உள்ள ஒவ்வொரு பருவம் வந்தவர்களும் தங்கள் பெற்றோர்களின் கட்டுப்பாட்டிலிருந்து விலகிச் சுதந்திரமாக இருக்க விரும்புகிறார்கள்"[4]

என்று சமூகவியலறிஞர்களும் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

மனிதனின் வாழ்க்கை நிலையில் சில பிரிவுகளைக் காணலாம். ஒன்று திருமணத்திற்கு முந்திய நிலையாகும். மற்றொன்று திருமணத்திற்குப் பிந்திய நிலையாகும். திருமணத்திற்குப் பிந்திய நிலையில் மனிதன் தனக்கென ஒரு பாதை, சமூக அங்கீகாரம் சார்ந்தநிலை, தனக்கென வாரிசு, சாதனைகள் போன்றவைகளை உருவாக்க வேண்டிய நிலையில் உள்ளான்.

ஆகவே, திருமண வாழ்க்கை சார்ந்து, குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள ஆணும் பெண்ணும் சமூகம், உடல், மனம் தொடர்பாகப் பல சிக்கல்களை எதிர் கொள்ள வேண்டியவர்களாக உள்ளனர். எதிர்கொள்கிற விதத்தைப் பொறுத்து அவர்கள் திருமண வாழ்வு வெற்றியாகவோ அல்லது அதற்கு மாறுபட்டோ அமையும்.

சமூக நடப்பியலை உற்று நோக்கிப் படைப்பாளர்கள் தாங்கள் உருவாக்கும் இலக்கியங்களிலும் இடம் பெறச் செய்கின்றனர்.

"தமிழ்ப் புனை கதைகளிலும் நாவல்களில் காணப்படும் குடும்பங்களை நடப்பியலுக்கு அப்பாற்பட்ட கற்பனைக் குடும்பங்கள் என்றும் ஒதுக்குவதற்கில்லை"[5]

என்று இலக்கியத் திறனாய்வாளர்கள் கூறுவர். ஏனெனில்,

"இலக்கியங்களில் சித்தரிக்கப் பெறும் குடும்பங்களும் குடும்பப் பின்னணியுள்ள உறவுநிலைகளும் கற்பனையல்ல. சமுதாயத்தில் இருப்பதைத்தான் படைப்பாளர்கள் புனை கதைகளில் படைத்துள்ளார்கள்"[6]

என்கிற கருத்தும் இவண் நோக்கத்தக்கதாகும். அவ்வகையில் சிவசங்கரி நாவல்களில் இடம் பெறும் தனிக்குடும்ப நிலையில் உறவு நிலைகள் குறித்து இனி வரும் பகுதியில் மதிப்பிடப் பெறுகிறது.

"தனிநபர், குடும்பம், சமூகம், நாடு, இந்த வட்டத்தில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிறது. அதனால் தான் தனிநபர் ஒவ்வொருவரும் தத்தம் பலம், பலவீனங்களை அலச வேண்டிய கட்டாயம், அவர் தன்னைச் சுற்றி உருவாக்கிக் கொள்ளும் உறவுகளின் அவசியம், மனதைக் காற்றோட்டமாக வைத்துக் கொள்வதின் நிர்பந்தம் இவைகளை எல்லாம் ஆராய்ந்து எழுவதில் நான் அதிகம் ஆர்வம் காட்டுகிறேன்"[7]

என்று சிவசங்கரி கருத்துத் தெரிவிக்கிறார்.

## சிக்கல்களின் வகைப்பாடு

தனிக்குடும்பத்தில் கணவன் – மனைவி – குழந்தைகள் என்ற நிலை மட்டுமே காணக்கூடியதாகும். இந்நிலைகளைச் சார்ந்த கீழ்க்கண்ட வகைப்பாட்டினைப் பெறலாம்.

- கணவனைச் சார்ந்தமையும் சிக்கல்
- மனைவியைச் சார்ந்தமையும் சிக்கல்
- இருவரையும் சார்ந்தமையும் சிக்கல்
- குழந்தையின்மை / குழந்தையைச் சார்ந்தமையும் சிக்கல்

## கணவனைச் சார்ந்தமையும் சிக்கல்

குடும்பத்தை நடத்திச் செல்ல வேண்டிய பொறுப்பு கணவன்–மனைவி ஆகிய இருவருக்கும் சம அளவில் உண்டு. இந்நிலையை உணராமல் செயல்படுகிற பொழுது சிக்கல்கள் உருவாகின்றன. ஆய்விற்குட்படுத்தப் பெற்ற சிவசங்கரி நாவல்களில் கணவனைச் சார்ந்தமையும் சிக்கல்களை மூவகைப்படுத்தலாம். அவையாவன :

- மிகைப்பாலியல் ஆர்வம், வக்ரபுத்தி.
- வசதி, ஆடம்பர ஆர்வம்.
- ஆதிக்க உணர்வு

## மிகைப்பாலியல் ஆர்வம் :

'மூக்கணாங்கயிறு' நாவலின் நாயகன் மூர்த்தி, அதீத பாலியல் ஆர்வம் உடையவன். மனைவியின் விருப்பு வெறுப்புக்களுக்கு மதிப்புத் தராத இயல்புடையவன். மனைவியைத் தினமும் அனுபவிக்க வேண்டுமென்கிற அவனின் ஆர்வ ஆதிக்கத்திற்கே முதன்மை கொடுப்பவன். மனைவி மட்டுமல்லாமல் வெளிப் பெண்களுடனும் தொடர்புடையவன். இந்நிலை குறித்து மனைவி சந்திரா வினவும் போதெல்லாம் முரட்டுத் தனமாகப் பேசி அடக்கிவிடுவான். சந்திரா குழந்தைகளின் நலத்தினைக் கருத்தில் கொண்டு அடங்கியவளாய்ப் பொறுமையுடன் இருப்பாள்.

கல்லூரியில் படிக்கும் மகன் மனோகர், தந்தையின் நடத்தை பற்றி நண்பர்கள் மூலம் அறிகிறான். தாய் சந்திராவிடம் இது பற்றிக் கேட்கிறான். கோபப்படுகிறான். சிந்தித்துப் பார்த்து சந்திரா ஒரு முடிவிற்கு வருகிறாள். கணவன், அவனிடம் அலுவலகத்தில் உதவியாளராக இருக்கும் நளினி என்பவளிடம் தொடர்பு கொண்டிருப்பதை அறிவாள். நளினியை இரண்டாம்தார மனைவியாக்குகிறாள். அத்திருமணத்தைத் தானே முன்னின்று நடத்துகிறாள். மூர்த்தி நளினிக்குக் கட்டும் தாலிக்கயிறை மூக்கணாங்கயிறாக மாற்றுகிறாள்.

"நம்ம சமூகத்தில் இரண்டு பெண்டாட்டிக்காரங்களைக் கவுரவமாக ஏத்துப்பாங்க. ஆனால் நாளுக்கு ஒருத்தியோட திரிகிறவனைக் கண்டிப்பா மதிக்கமாட்டாங்க ........ அதனால் நானே முன்னின்று உங்களுக்கு இரண்டாம் திருமணம் செஞ்சு வைச்சேன்"[8]

என்று தன் செயலுக்கான விளக்கத்தைக் கணவனிடம் சந்திரா கூறுகிறாள்.

தமிழ்ப்பெண் எதையும் விட்டுக்கொடுக்கும் இயல்பினள். ஆனால் கணவனை மட்டும் பங்கு போடவிடமாட்டாள். சந்திரா தன் பிள்ளைகள் நலத்தைக் கருத்தில் கொண்டே கணவனின் இரண்டாந்தாரத் திருமணம் என்கிற முடிவிற்கு வருகிறாள்.

"என் பிள்ளைகளுக்குத் தகப்பனாகப் பகலில் மட்டும் வந்து செல்லுங்கள் என்று தன்னை அவனிலிருந்து பிரித்துக் காட்டுகிறாள். அப்படி நீங்கள் வராவிட்டால் சமூகம் உங்களைத் தான் ஏசும்"[9]

என்று கணவனிடம் துணிவாகப் பேசும் சந்திராவாக உள்ளாள்.

"இருபத்து ஐந்து வருடமா எங்கிட்ட அடங்காத உங்களை, நளினி என்ற மூக்கணாங்கயிறு மாட்டி அடக்கிவிட்டேன். இந்தக் கல்யாணம் உங்களுக்கு ஒரு ஆயுள் தண்டனையாகத்தான் போகுது. என் பசங்களோட எதிர்காலத்துக்காக இந்தத் தண்டனையை உங்களுக்கு நான் கொடுக்கும்படி நீங்க நடந்துகிட்டீங்க, ....... இனி எனக்கு அவதியில்லே ..... வேதனை இல்லே"[10]

என்று தெளிவாகப் பேசுகிறாள். பெண்கள் மனதை நோவச் செய்வதும் காயப்படுத்துவதும் பாவம் என்கிற சிந்தனை சந்திராவிடம் இருந்து துணிவாக வெளிப்படுகிறது. கணவன் தொடர்ந்து அத்தகைய செயல்நிலையில் இருந்தால்,

"நளாயினி மாதிரி அடங்கிக் கிடக்கிறவ கூட ஒரு நாள் சீறிக்கிட்டுக் கிளம்பிவிடுவா......"[11]

என்று கூறும் நிலையில் பெண் சமூகத்திற்கு முன்மாதிரிப் பாத்திரமாகத் திகழ்வதாகக் கூறலாம்.

சிவராமன் என்பவன் 'மண்குதிரைகள்' என்ற நாவலில் சித்தரிக்கப் பெறுகின்றான். கல்யாணி என்பவள் அவனின் மனைவி ஆவாள். நிரந்தர வருமானம் உள்ள வேலையில் அவன் இல்லை. சரியான உழைப்பும் இல்லை. இவர்களுக்கு நான்கு சின்னக் குழந்தைகள். நடுவில் ஒரு கரு கலைந்து போனதால் உடல் சோர்வாக உள்ளாள். இவளே கடினமாக உழைத்துக் குடும்பத்தைக் காப்பாற்றி வருகிறாள். கணவனுக்குக் குடும்பப் பொறுப்பும் இல்லை. அவ்வப் போது குடும்பத்தை விட்டு ஓடிப் போய்விடுவான்.

சிவராமன் மனைவி சுகம் தினம் வேண்டுமென்ற நினைப்பு உடையவன். மனைவி உடல் சோர்ந்த நிலையில் இருந்தாலும் அவளை அடித்து உதைத்துத் தன் ஆசையை நிறைவேற்றிக் கொள்ளுவதிலேயே முனைப்பாக இருப்பான். ஒரு வகையில் இவனும் மிகைப் பாலியல் ஆர்வம் உடையவனாகவே இருக்கிறான்.

இக்குடும்பத்தைச் சார்ந்த பெரிய பெண் பொறுப்பற்று ஓடிப்போகிறாள். அடுத்தவன் விபத்தில் இறந்து போகிறான். கடைசிப் பிள்ளைகளுக்கு ஏழு வயது, ஐந்து வயது ஆகிறது. இருவரையும் சங்கர மடத்தில் தாய் சேர்த்து விடுகிறாள். ஓடிப்போய்த் திரும்பி வந்த கணவன், பிள்ளைகளைப் பற்றி ஒப்பிற்குக் கேட்டுவிட்டு, மனைவியை உறவிற்கு அழைக்கிறான். கணவன் சிவராமனின் பொறுப்பற்ற போக்கில் வெறுத்துப் போன மனைவி கல்யாணி கணவனை விட்டுப் பிரிந்துபோக முடிவெடுக்கிறாள். காசிக்குச் சென்று, அங்கு வருபவர்களுக்குச் சமைத்துப் போட்டுக் காலத்தைத் தள்ள முடிவு செய்கிறாள்.

'பாலங்கள் (பாகம் – 3)' நாவலில் வரும் சுரேஷ் வித்தியாசமான பாலியல் ஆர்வம் உடையவன். அவன் மனைவி சாருலதா ஆவாள். மற்றவர்கள் மத்தியில் சுரேஷ் நல்லவன் போல இருப்பான். தனிமையில் மனைவியுடன் பழகும் போது மிகவும் கீழ்த்தரமாக இருப்பான். ஆபாசமான புகைப்படங்களை மனைவியிடம் காட்டுவான். பேசக்கூடாத வார்த்தைகளைத் தயங்காமல் பேசுவான். வக்கிரமான பாலுணர்வு வெறி, பிறரைத் துன்புறுத்திப் பார்க்கும் (சாடிஸ்ட்) இயல்பு அவனுள் இயங்கியது.

கர்ப்பமான மனைவி அவனின் விருப்பத்திற்கு இணங்கவில்லை. வீட்டிற்கு விலைமகளைக் கூட்டி வருகிறான். மனைவி எதிரில் இருக்க, விலைமகளிடம் உல்லாசமாகச் செயல்படுகிறான். பொறுமையின் எல்லையை

மனைவி சாரு தாண்டவேண்டிய நிலைக்கு உள்ளாகிறாள். இத்தகு குடும்ப வாழ்க்கை தேவைதானா......? எனச் சிந்தித்து, விவாகரத்து என்கிற முடிவிற்கு வருகிறாள். தந்தை இம்முடிவை மாற்றும்படி கூற,

> "அனுபவிச்சது போதும் திரும்ப அந்த மிருகத்தோட வாழச் சொல்லி என்னை வற்புறுத்தாதீங்கப்பா ....."[12]

என்று கூறிவிடுகிறாள். அவள் கூற்றிலிருந்து கணவன் மனிதனாக இன்றி மிகைப்பாலியலில் வக்ரநிலையில் மிருகத்தனமாக இருப்பதைக் குறிப்பாகத்தான் சொல்ல முடிகிறது.

வாழ்க்கைத் துணையாக வந்த பெண்ணிடம் கணவன் மனிதக் குணங்களுடன் இயங்குகிறபோது இல்லறம் இனிமையாக அமையும். மிருகக் குணங்களுடன் கணவன் செயல்படுகிறபோது மனைவி முடிந்த அளவிற்குப் பொறுக்கிறாள். பொறுமையைக் கடந்த நிலையில் கணவனைப் புறக்கணிக்கத் துணியும் மனைவியைச் சிவசங்கரி தம் நாவல்களில் படைத்துக் காட்டுகிறார். சமயங்களில் அப்புறக்கணிப்புப் பிள்ளைகளின் நல்வாழ்க்கை குறித்த எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு அமையும். மனைவியின் புறக்கணிப்பில் தியாகமும் இருக்கக் காணலாம்.

## வசதி மற்றும் ஆடம்பரத்தில் மோகம் :

வாழ்க்கையை வசதிப்படுத்திக் கொள்வது மனித இயல்பாகும். வசதிப்படுத்துவதற்குப் பொருள் வேண்டும். அப்பொருளை நேரிய முறையில் பெற்று வசதியாக வாழும் போது வாழ்வியல் சூழல்களில் முரண்பாடுகள் தோன்றுவதில்லை. நெறி பிறழ்ந்த முறையில் பொருள் பெற்று வசதியையும் ஆடம்பரத்தையும் அடைய நினைக்கும் வாழ்வில் முரண்பாடுகளும் சிக்கல்களும் உருவாகின்றன. குறிப்பாகக் கூறப்புகுந்தால் சுய உழைப்பைச் சார்ந்து வசதியினையும் அளவான ஆடம்பரத்தையும் சார்ந்த வாழ்வில் சிக்கல் இல்லை. உழைப்பில்லாத குறுக்கு வழியில் ஆசைகளைப் பெருக்கி நிறைவேற்ற நினைப்பது, வாழ்வின் இயல்பிற்குப் பொருத்தமில்லை எனக்கூறலாம். இச்சூழலில் கணவன் வசதியான வாழ்விலும் ஆடம்பரத்திலும் மோகம் கொண்டதால் ஏற்படும் பிரச்சினைகளை '47 நாட்கள்', 'பொய்' போன்ற நாவல்களில் சிவசங்கரி சித்தரித்துள்ளார்.

'47 நாட்களில்' குமார் என்பவன் சித்தரிக்கப் பெறுகிறான். ஏழைக் குடும்பத்தில் பிறந்தவன். எனினும் அறிவு நிறைந்தவன். கல்வியில் உயர்ந்து அமெரிக்காவரை செல்கிறான். அமெரிக்காவில் செல்வச் செழிப்புள்ள லூசி என்பவளைச் சந்திக்கிறான். அவளின் செல்வத்தால் வசதியாகவும் ஆடம்பரமாகவும் வாழலாம் என்று முடிவெடுக்கிறான். அவளிடம் வலிந்து பழகுகிறான். அவளின் மதிப்பைப் பெறுகிறான். அவளுக்கும் அவனுக்கும் குழந்தை பிறக்க இருந்தது.

லூசிக்கு பிறக்கப்போகும் குழந்தையை வளர்ப்பதற்காக ஒரு முடிவுடன் இந்தியா வருகிறான். படிக்காத ஏழைப்பெண் விசாலியிடம் பொய் பல பேசி திருமணம் செய்து, அமெரிக்காவிற்கு அழைத்துச் செல்கிறான். விசாலி ஏழைப் பெண், படிப்பறிவும் இல்லாதவள். தன்னை அவன் இரண்டாம் தாரமாகத்தான் திருமணம் செய்திருக்கிறான் என்பதை அமெரிக்கா வந்துதான் அறிந்தாள். அறிந்தவுடன் பொங்கி எழுந்தாள். திருமணமான நாற்பத்தேழாம் நாள் விசாலி லூசியின் உதவியுடன் தன் வயிற்றில் உருவாகிய கர்ப்பத்தைக் கலைக்கிறாள். கணவனைப் புறக்கணித்துத் தாயகம் திரும்புகிறாள்.

> "குமாரின் பண்பான நடத்தையால் அழகான தோற்றத்தால் அவனிடம் விசாலிக்கு உண்டாகியிருந்த காதல், ஏமாற்றம் என்ற அதிர்ச்சிக்கு உள்ளான போது தன் வரம்பை மீறி வெறுப்பாக மாறிப்போனதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது"[13]

என்ற குரல் கதைப் பின்னலில் ஆசிரியரின் குரலாகவே ஒலிக்கக் காணலாம். '47 நாட்களில்' வரும் குமார் வசதியான வாழ்விற்காகச் செல்வப் பெண் லூசியை மணப்பதும், அந்த உண்மையை மறைத்து விசாலியை மணப்பதும் திருமணத்தின் புனிதமான நிலையை உணராததால் நிகழ்ந்ததாகும். இத்தகு கணவனை ஏற்று எந்தப் பெண் வாழ்க்கை முழுவதும் மனைவியாக இருப்பாள்? என்று சிவசங்கரி சிந்திக்க வைக்கிறார்.

'பொய்' நாவலில் வரும் கிரிதர் திருமணமானவன். தன் மனைவி துர்க்கா என்பவளுடன் ஏழு வருடங்களாகக் காதல் தோய்ந்த இல்லற வாழ்வினை நடத்தியவன். இரு குழந்தைகளுக்குத் தந்தை என்கிற பொறுப்பையும் பெற்றவன். வேலை பார்க்கும் கம்பெனியின் வழியாக மேல்

பயிற்சிக்காக அமெரிக்கா செல்கிறான். அங்கு செல்வந்தப் பெண் லிண்டா என்பவளைச் சந்திக்கிறான். அவள் ஒரு விதவைப் பெண். பல தொழிற்சாலைகளுக்கு அவள் உரிமை பூண்டவள். அவளின் செல்வத்தை அடைந்து வசதியான ஆடம்பர வாழ்வை அனுபவிக்க முடிவெடுக்கிறான். அவளை மணக்கிறான். அவளது தொழிற் சாலைகளையெல்லாம் நிர்வாகம் செய்கிறான்.

அமெரிக்காவில் நிகழ்ந்தவைகளைக் கடிதத்தின் மூலம் மனைவியிடம் வெளிப்படுத்துகிறான்.

> "சாதாரணப் பெண்களைப் போல நீ அழுது அமர்க்களம் பண்ணமாட்டாய் என்று ஆணித்தரமாக நம்புகிறேன். ஏனென்றால் நீ விவேகி; படித்தவள் தைரியசாலி"[14]

என்று கடிதத்தில் குறிப்பிட்டிருந்தான். அவனின் மனைவி துர்கா வெளிநாடு சென்று அவனைச் சந்திக்கிறாள். அவனுடைய வாக்குமூலத்தை அவன் மூலம் பிள்ளைகள் எதிரில் சொல்ல வைக்கிறாள். இறுதியில்,

> "உன் பணம் காசு ஆகியவற்றை நீயே வைத்துக்கொள்" என்று கூறிவிட்டு, "என் சம்பாத்தியத்தில் என்னால் முடிந்தவரைக்கும் நல்லவிதமாக இவர்களை வளர்ப்பேன்"[15]

என்று துணிவாகச் சொல்லிவிட்டு நாட்டிற்குத் திரும்பி விடுகிறாள். கணவன் ஆடம்பர வாழ்க்கைக்காகவும் பணத்திற்காகவும் பணக்கார விதவை லிண்டாவுடன் கொண்ட தொடர்பால் மனம் குமுறி, அவனிடமிருந்து வெளியேறுகிறாள்.

'ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால்' நாவலில் நந்தக்குமார் வசதி வாழ்வு மோகம் கொண்டு அமெரிக்கா செல்கிறான். கட்டிய மனைவி, பிள்ளை, பெற்றோர்களை விட்டுவிட்டு அமெரிக்காவில் ஆறு வருடம் இருக்கிறான். அமெரிக்க வாழ்க்கை சலித்ததும் வீட்டிற்குத் திரும்புகிறான்.

## ஆதிக்க உணர்வு :

'அதுசரி அப்புறம்' நாவலில் மோகன் வழக்கறிஞர் தொழிலுக்குப் படித்தவன். அவன் மனைவி நந்தினி அடக்கமானவள். திருமணமானவன்று முதலிரவின் போது மோகன் நந்தினியிடம்,

> "அன்னிக்கு உன்னைப் பெண் பார்க்க வந்தப்பவே இவ அடக்கமானவ, சம்பாதிக்கிறோம் என்ற திமிர் இல்லாதவள்னு நினைச்சேன் .... என்ன .... என் கணிப்புச் சரிதானே"[16]

என்று ஆதிக்க உணர்வு வெளிப்பட மோகன் பேசுகிறான்.

குடும்பத்தில் உதவியாக மோகன் ஏதாவது செய்யக் கூடாதா என்று நந்தினி மோகனிடம் கேட்டதற்கு,

> "எல்லா வீட்டு இளிச்சவாயன்க மாதிரி நானும்னு நினைச்சிடாத, இன்னொரு தரம் மரியாதை இல்லாம இந்த ரீதியில் பேசின .... நடக்கிறதே வேற ...... வேலைக்குப் போய் வந்துவிட்டு, ஒழுங்கா மத்த பொறுப்புகளையும் கவனிக்கிறதுன்னா செய், இல்லேன்னா வேலைய விட்டுட்டு வாலை சுருட்டிக்கிட்டு வீட்டோட பொம்பளையா லட்சணமா இரு ..... உன் சம்பாதிக்கிற திமிர என்னண்ட காட்டாதே, உனக்கு ஆமாம் சாமி போட்டு கூஜா தூக்குவேன்னு எதிர்பார்த்தா .... அதுக்கு ஆள் நா இல்லே ....... நா ..... ஆம்பிள்ளை ...... ஆமா என்று உறுமுகிறான்"[17].

மோகன் மனைவிக்கு உதவியாக இருக்க விரும்பவில்லை. அவள் வேலையையும் பார்த்துக் கொண்டு குடும்பப் பொறுப்பையும் கவனிக்க வேண்டும் என்று விரும்புகிறான். அவள் வேலை பார்ப்பதால் தான் அடங்கி நடக்க இயலாது. ஒத்தாசையாகவும் இருக்க இயலாது. ஆண்பிள்ளைகள் அவ்வாறு இருக்க மாட்டார்கள் என்று ஆதிக்க உணர்வோடு பேசுகிறான்.

இவனிடம் குடிப்பழக்கமும் உண்டு. ஒரு நாள் நடுராத்திரியில் குடித்துவிட்டு வீட்டுக்கு வருகிறான். அப்போது வீட்டுக்குச் சொந்தக்காரி சத்தம் போடுவாள் என்று நந்தினி எச்சரிக்கையாகக் கூறுகிறாள். அப்பொழுது குடித்து வந்த கணவன்,

"இவ இஷ்டப்படி நா ஆடணும்னு எதிர்பாக்கிறாளா? இவ புருஷன் ஆடற மாதிரி, நா .... ஆம்பளைடீ ...... சுத்தமான ஆம்பளை தெரிஞ்சுதா ..... வேலை பார்க்கிற திமிர் இருக்கிற உன்னையே அடக்கி வைச்சிருக்கேன்"[18]

என்கிறான். இக்கூற்றின்படி வேலை பார்க்கும் மனைவியை அடக்கி ஆதிக்க உணர்வுடன் இருப்பதைக் குறிப்பிட்டுச் சொல்வதைக் காணலாம்.

இரண்டாம் பிரசவத்திற்காக அம்மா வீட்டிற்குப் போகவில்லை என்று நந்தினி கருத்துத் தெரிவிக்கிறாள்,

"ஓ .... தானா முடிவு எடுக்கிற அளவுக்கு திமிர் கூடிப் போச்சா .... எதிர்த்தா பேசற .... பேசினா அந்த நாக்கை இழுத்து அறுக்காட்டி நா ஆம்பளை இல்லே"[19]

என்று பேசி அவளை வருந்த வைக்கிறான். அவள் எது செய்தாலும் அவள் மனம் நோகும்படி பேசித் தன் ஆதிக்க உணர்வையே வெளிப்படுத்தி வந்திருக்கிறான்.

மோகனின் ஆதிக்க வெறியினையும் அடி உதைகளையும் நந்தினி பத்து வருடங்களாகப் பொறுத்து வருகிறாள். அவனுடைய கொடுமை குழந்தைகளுக்கும் தொடர்கிறது. கணவனை விட்டுப் பிரிந்து தனியே வாழ முடிவெடுக்கிறாள். இது கணவனுக்குத் தரும் தண்டனை என்று நினைக்கிறாள். நிம்மதி, சுயமரியாதை போன்றவை கிடைக்காத நிலையில் மனைவி வெளியேறுகிறாள்.

## மனைவியைச் சார்ந்தமையும் சிக்கல்

குடும்ப வாழ்க்கையில் கணவன் மனைவி இருவரும் ஒருவருக்கொருவர் மதிப்புக் கொடுத்து வாழ்ந்தால், அது வெற்றி பெற்ற வாழ்க்கையாகக் கருதப் பெறும். குடும்பத்தின் இயக்கத்தில் கணவனைச் சார்ந்து மட்டும் சிக்கல்கள் தோன்றுவதில்லை. மனைவியைச் சார்ந்தும் சிக்கல்கள் அமையலாம்.

மனைவியானவள் கணவனுக்கு அமைந்த நண்பர்களின் சிறந்தவளாகவும், அவனுடைய செல்வம், மகிழ்ச்சி, நன்மை ஆகிய அனைத்திற்கும் காரணமாகவும் குடும்பத்தின் நிலைபேற்றிற்குக் காரணமாகவும் விளங்க வேண்டும். கணவனுக்கு வாழ்வில் வெறுப்பு ஏற்படுகையில் அறிவுரை கூறுவதில் தந்தையாகவும் துன்பம் ஏற்படுகையில் ஆறுதல் கூறுவதில் தாயாகவும் மனைவி விளங்குவதால் அவள் மனிதனின் வாழ்வில் சிறந்த இடத்தைப் பெறுகிறாள்.

ஒரு கணவனின் வெற்றிக்குப் பின் மனைவி இருக்கிறாள். குடும்பத்தின் மரத்தில் வேர் போன்றவள் பெண். இத்தகு சிறப்பும் முதன்மையும் உடைய மனைவி சிக்கல்களைக் குடும்பத்தில் உருவாக்குகிறாள். சிவசங்கரி அத்தகு மனைவிகளைத் தம் நாவலில் சித்தரித்துக் காட்டியுள்ளார். மனைவியைச் சார்ந்தமையும் சிக்கல்களைக் கீழ்க்கண்டவாறு பகுத்துப் பார்க்கலாம்.

- புகழ் போதையில் மயங்குதல்
- வசதியான வாழ்வில் மோகம் கொள்ளுதல்
- கனவுகளையும் கற்பனைகளையும் வாழ்வோடு இணைத்தல்
- கணவனை மதிக்காமை
- குடும்பத்தில் பொறுப்பின்மை

## புகழ் போதையில் மயங்குதல் :

'புகழ்' தேவையானதுதான். ஆனால் அந்தப் புகழ் பெருகும் போது அதில் இலயித்துவிட்டால் உருவாகும் மகிழ்ச்சி போதை போன்றது. அப்போதை தரும் மயக்கம் வாழ்வின் முன்னேற்றத்திற்கு ஏணிப்படிகளாக இருப்பதில்லை. இந்நிலை ஆடவர்க்கு மட்டும் உரித்தன்று. பெண்களுக்கும் பொருந்தும்.

"சமுதாயத்தில் பெண் ஒரு மதிப்பு மிக்க, பயனுள்ள அங்கமாவாள். அவள் பிறருக்கு முன்மாதிரியாக இருக்கும் பட்சத்தில் அவள் ஒரு நல்ல

மனைவியாக, நல்ல தாயாக, வீட்டை நன்கு நிர்வகிப்பவளாக இருப்பதில் நிறைவு தர வேண்டும்"[20]

என்று சில்வியா பீல்டுமேன் குறிப்பிடும் கருத்து சிந்தனைக்குரியதாகும். முன்மாதிரியாக இருக்க வேண்டிய மனைவி புகழ் போதையில் மயங்கிக் கணவனையும் குடும்பத்தையும் புறக்கணிப்பதால் ஏற்படும் விளைவை 'சுறாமீன்கள்' என்ற நாவலில் சிவசங்கரி குறிப்பிடுகிறார்.

அந்நாவலில் வரும் மாயா குடும்பச் சூழலில் வளர்ந்தவள். திருமணம் ஆகிக் கணவனைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. அவள் தன்னுடைய அலுவல், அலுவல் சூழலில் கிடைக்கும் புகழ் இவற்றில் மிகுந்த நாட்டங்கொள்கிறாள். அலுவல் சூழலில் இவளுடைய அறிவையும் பெண்மையழகினையும், விதவிதமான ஆண்கள், தொழிலதிபர்கள், பணக்காரர்கள் ஆகியோர்கள் பாராட்டுகிறார்கள். இந்தப் பராட்டுதல்களை மாயா உண்மையென நினைக்கிறாள். கணவனின் உண்மையான அன்பை உணரத் தவறிவிடுகிறாள்.

தன்னைச் சுற்றி உள்ளவர்கள் மனதில் அசிங்க எண்ணத்துடன் புகழ்ந்துரைக்கிறார்கள் என்பதை ஒரு நிலையில் மாயா புரிந்துகொள்கிறாள். உண்மை நிலையை உணர்கிறாள். அவள் தன் கணவனிடம்,

"சத்யா, முன்பு உலகம் புரியாமல் இருந்தேன். உங்களை, உங்கள் அன்பான உள்ளத்தை அறிந்து கொள்ளாத மூடமாய் இருந்தேன். பேரும் புகழும், போலியான பாராட்டுகளும், சாஸ்வதமென்று, வஞ்சக நண்பர்களெல்லாம் உண்மையானவர்கள் என்று நான் ஏமாந்த வாழ்க்கை போதும்"[21]

என்றும்,

"வாழ்க்கையின் அர்த்தம் உண்மை நெஞ்சின் மதிப்பு எல்லாம் புரிந்து நிம்மதியாய் வாழக்கற்றுக் கொண்டேன்"[22]

என்றும் கூறுகிறாள். கணவன் உண்மையான அன்பு உடையவன். மற்ற ஆடவர்கள் இவளின் அறிவுத் திறமையையும் அழகையும் பாராட்டுவது புகழ்ச்சியாக இருந்தாலும் உட்பொருளாகத் தகாத எண்ணத்துடன் தொடர்பு

பெற்றிருக்கிற நிலையைக் காலம் கடந்துதான் மாயா உணர்கிறாள். பெண்களுக்குப் புகழ்ச்சியுள் போதையும் மயக்கமும் இருப்பின் சிந்தித்துச் செயல்பட வேண்டும் என்பதை 'சுறாமீன்களில்' வரும் மாயா நன்குணர்த்துவதாகக் குறிப்பிடலாம். பெண்கள் குடும்பத்திலிருந்து வெளியேறி அலுவல் பணியில் ஈடுபடும்போது ஆடவர் பலரைச் சந்திக்கும் சூழல் உருவாகும். ஆடவரின் சூழலில் தன்னைப் பாதுகாக்கப் பெண் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும் என்ற எச்சரிக்கைக் குரல் ஒலிக்கப் பெறுகிறது.

## வசதியான வாழ்வில் மோகம் கொள்ளுதல் :

மனித இயல்பு வசதியான வாழ்வியலை விரும்புவது இயல்பெனலாம். அஃது வரம்பைக் கடக்கிறபோது வாழ்வியல் சூழலில் சிக்கல் உருவாகிறது. இச்சிக்கல் மனைவியின் வழியாகவும் அமையலாம். ஆடம்பர வாழ்க்கையை விரும்பும் நிலையில் அதீத ஆசை உருவாகிறது. அவ்வாசையால் நிகழும் விளைவை 'வானத்து நிலா' நாவல் வெளிப்படுத்துகின்றது.

சந்தானம் பொறுப்பான பணியில் இருப்பவன். அவன் மனைவி மாலினி நாட்டியப் பெண்மணி ஆவாள். பெற்றோர்களின் எதிர்ப்பு சூழலில் காதலித்துப் பதிவுத் திருமணம் செய்தவர்கள். குழந்தைப் பேறும் நிகழ்கிறது. திரைப்படத்தில் மாலினி நடிக்கத் தொடங்குகிறாள். தொடக்கத்தில் கணவன் சந்தானமும் அவளின் நடிப்புத்துறைக்குத் தூண்டுகோலாக இருக்கிறான். அவள் மென்மேலும் புகழ் அடையும் நிலையில், தன் வேலையை விட்டுவிட்டு அவளின் முன்னேற்றத்திற்கு உறுதுணையாக இருக்கிறான். வசதியும் புகழும் ஆடம்பரமும் உயர்ந்த நிலையில் கணவனை அலட்சியப்படுத்துகிறாள். 'வேலையற்றவன்' என்று கூறியும் அலட்சியப்படுத்துகிறாள். இருவரும் விவாகரத்துப் பெறுகிற நிலைக்கு வந்துவிட்டனர். வீட்டு வேலைக்காரி பாலம்மாவின் அறிவுரையால் மனம் திருந்துகிறார்கள் இருவரும்.

வசதி வாழ்க்கையில் மோகம் கொள்ளுகிற மனைவியால், கணவனை அலட்சியப்படுத்தும் நிலை உருவாகிறது. குடும்பத்தில் புரிதல், சகிப்புத்தன்மை, ஆகியவை வெளியேறுகின்றன. 'தான்' என்கிற ஆணவ உணர்வு புதிதாகத் தலையெடுக்கிறது.

'வசதியான வாழ்க்கை' குடும்பத்தில் உருவான பிறகு பழமையை மறக்கக்கூடாது. அவ்வாழ்க்கைக்குக் காரணமானவர்களையும், மறக்கக்கூடாது என்பதை விளக்குவதாக, 'நதியின் வேகத்தோடு' என்ற நாவல் அமைகிறது.

## கனவுகள் மற்றும் கற்பனைகளுடன் வாழ்தல் :

நகரியமாதலின் ஆதிக்கம் பெண் சமூகத்தை நோயெனப் பீடித்திருக்கிறது. இதழ்கள், திரைப்படம், தொலைக்காட்சி போன்ற மக்கள் தொடர்புச் சாதனங்கள் அறிவை விசாலமாக்கப் பயன்படுகின்றன. எனினும் அவைகள் பக்குவம் பெறாத இளம் பெண்களின் மனதில் வரம்பு கடந்த கனவுகளையும் கற்பனைகளையும் தோற்றுவிக்கும் காரணிகளாகவும் விளங்குகின்றன. இத்தகு சூழலால் இளம் பெண்கள் சமூக மரபிற்கு மாறுபட்ட மனப்போக்கை வலிந்து பெறுகிறார்கள். அவ்வலிந்து பெற்ற மனப்போக்கால் எதார்த்த வாழ்வியல் சூழலில் தோல்வியும் அடைகிறார்கள். அத்தகு தோல்வியைச் சிவசங்கரி தம் நாவல்களில் சித்தரித்துக் காட்டுகிறார். குடும்பச் சூழலில் அத்தகு தோல்வியை மையமிட்டு 'திரிசங்கு சொர்க்கம்' நாவலில் குறிப்பிடுவதை இங்குக் குறிப்பிடலாம்.

கமலி நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவள். அண்ணன் அண்ணி பாதுகாப்பில் படித்து வேலைக்குச் செல்பவள். தான் அழகானவள் என்பதில் கர்வமுண்டு. வசதியான வீட்டைச் சேர்ந்த முரளி, கமலியைத் திருமணம் செய்து கொள்கிறான். கமலி திரைப்படக் கற்பனைகளை வாழ்வியலோடு இணைத்துப் பார்க்கும் இயல்பினள். தன் கணவன் திரைப்படக் கதாநாயகன் மாதிரி இல்லையே என்பதில் ஏக்கம்.

> "சாதாரணமாக இருக்கும் முரளியைக் கார் வாங்க வைத்து, ஸ்டைலாய் இருக்கக் கற்றுக் கொடுத்து ஊர் வயிறு எரியும் விதத்தில் நான் உல்லாசமாக இருப்பேன்"[23]

என்று மனதுக்குள் கற்பனை செய்கிறாள்.

முதலிரவின் பொழுது முரளி நடந்து கொள்ளும் விதம் கமலியின் கற்பனைக் கோட்டைகளைச் சிதைக்கிறது. முதலிரவின் பொழுது முரளி, புதுமனைவியிடம்,

"மழை வந்தால் குறுவைக்கு நல்லது" என்று பேசுகிறான்.

புதுமனைவியிடம் தனிமையில் ஒரு ஆண்பிள்ளை பேசும் பேச்சா இது?

"சிவாஜி கணேசனும் ரஜினிகாந்தும் முதலிரவுக் காட்சிகளில் இப்படியா நடந்து கொண்டார்கள்"[24]

இப்படியெல்லாம் கமலி கற்பனை எதிர் பார்ப்புகளுடன் இருக்கிறாள்.

முரளியுடன் தனிக்குடும்பம் வந்த கமலி காலப்போக்கில் வேலைக்குப் போகிறாள். மனோகர் என்பவனுடன் தொடர்பு கொள்கிறாள். அவனின் அழகைப் புகழ்ந்து, கற்பனையை எதார்த்தமாக்கி விடுவதுபோல மயக்குகிறாள். கணவனையும் மீறி அலுவல் பணிக்காக சென்னைக்கு மாறிச் செல்கிறாள். போகும்பொழுது தனக்கும் முரளிக்கும் பொருத்தமில்லை என்பதைச் சுட்டி, தன்னைத் தேட வேண்டாம் என்றும், மனோகருடன் சேர்ந்து வாழப் போவதாகவும் கடிதம் எழுதி, தாலியைக் கழட்டி அதன்மேல் வைத்துச் செல்கிறாள்.

போனபின்பு மனோகரின் சுயரூபம் அறிந்து, முரளியுடன் வாழ நினைக்கிறாள். அக்காலக் கட்டத்தில் முரளி, தன் மாமன் பெண் சாந்தகுமாரியை மணந்து கொண்டிருக்கிறான். கமலியின் வாழ்க்கை திரிசங்கு சொர்க்கமாக இருக்கிறது.

இந்நாவலில் கனவுகள் மற்றும் கற்பனையால் சிக்கல் உண்டாகி மனைவி பாதிக்கப்படுவதாக, தனிக்குடும்ப அமைப்பில் சித்தரிக்கப் பெறுகிறது.

## கணவனை மதிக்காமை :

கணவன் மனைவி ஒருவரையொருவர் மதித்தும், விட்டுக்கொடுத்தும் வாழும் நிலையில்தான் குடும்பச் சக்கரம் சுழலும். இருவரில் ஒருவரையொருவர் மதிக்காவிட்டால் குடும்பத்தில் சீர்குலைவு ஏற்படுவது இயல்பாகும். தனிக்குடும்பத்தில் மனைவி கணவனை மதிக்காத தன்மையால் ஏற்படும் சிக்கல்களைச் சிவசங்கரி தன் நாவல்களில் பதிவு செய்துள்ளார்.

'இன்னொருத்தி + இன்னொருத்தி' நாவலில், விஜயனின் மனைவி சாந்தகுமாரி. பிறந்த வீட்டினரின் பெருமை பேசுவதற்குச் சிறப்பிடம் தருவாள். சாதாரண நடைமுறை வாழ்க்கையில் கூட, கணவனை மதிக்காமல் பேசுவாள். விஜயன் ஒரு கல்லூரியில் பொருளாதாரப் பேராசிரியராக இருக்கிறான். ஒரு சமயம் காய்கறிகள் வாங்கி வருகிறான். அப்பொழுது சாந்தகுமாரி மதிக்காமல்,

> "மனுஷன் வாங்குவானா? இந்த மாதிரி அவிஞ்ச காய்கறிகளை அன்னாடம் இதே ரோதனையாப் போச்சு ....... அழுகினது, முத்தினது, காய்ஞ்சதுனு எங்கக் கிடைக்கும் ......தேடித்தேடி வாங்குறாப்பல ...... இது என்ன அடாவடி ...... தூ ...... ஒரு சின்னக் காரியத்தைச் செய்யக்கூட துப்பு இல்லே ...... படிச்சா ஆச்சா .... பெரிய்ய.... படிப்பு ....... கை நிறைய சம்பாதிக்கத்தான் சாமர்த்தியம் இல்லே ..... அட கடைக்கும் போய் சாமான் சஜ்ஜா வாங்கத் தெரியல்லன்னா ...... இந்தக் கேவலத்தை யார்கிட்டப் போய் முட்டிக்கிறது ......"[25]

என்று பேசுகிறாள்.

விஜயன் அவள் பேச்சுக்களைப் பொருட்படுத்தாமல் வாழப் பழகியதால் குடும்பம் உருள்கிறது. அறிவின் திறமையினால் வேலையை விட்டு, கம்பெனி உயர் இடத்திற்குப் போகிறான். கலையுணர்வு கொண்டவன். நெகிழ்வு நிலையிலிருந்து தப்பிக்கிறான். அவனுக்கு இணையான திறமையுள்ள கல்பனா என்ற பெண்ணிடமிருந்து தப்பிக்கிறான். தன் இரு பெண்களையும் படிக்க வைத்து ஆளாக்குகிறான். இந்தச் சூழலில் சிறுசிறு சூழல்களுக்கு எல்லாம் மதிக்காமல் பேசிய சாந்தகுமாரி கோமா நிலையில் வாய் பேசாமல் இருக்கிறாள். மனைவி மதிக்காமல் இருக்கும் நிலையில் உருவாகும் சிக்கல்களுடன் கையாலாகாத கணவன் என்ற பெயரையும் தாங்கி இறுதியில் வெற்றி அடைகிறான்.

## குடும்பத்தில் பொறுப்பின்மை :

தனிக்குடும்ப அமைப்பில் கணவன், மனைவி இருவருக்கும் சம அளவு பொறுப்புகளும், கடமைகளும் உண்டு. இதை உணராத அல்லது செயல்படாத நிலையில் சிக்கல்கள் நிகழும். குடும்பத்தில் மனைவி ஒருத்தி பொறுப்பின்றி இருந்தால் ஒரு குடும்பம் எங்ஙனம் சீரழியும் என்ற வினாவைக் கேள்விக்

குறியாக்கி, அதற்கான விடையைச் சிவசங்கரி, தன் நாவல்களின் வழி உணரவைக்கிறார். எடுத்துக்காட்டு விளக்கத்திற்காக 'ஏன்' என்ற நாவலைக் குறிப்பிடலாம். இந்நாவலில் வரும் ரகுராமன் கிராமத்தைச் சேர்ந்தவன். தாயின் அரவணைப்பில் வளர்ந்தவன். வேலை கிடைத்துப் படிப்படியாக முன்னேறி வருகிறான்.

இச்சூழலில் அலுவலக மேலாளர் மகள் சாந்தியை மணக்கிறான். ஒரு குழந்தையும் இவர்களுக்குப் பிறக்கிறது. சாந்தி குடும்பப் பொறுப்புகளைக் கவனிக்காமல் சமூகச் சேவை என்ற பெயரில் பொழுதைக் கழிக்கிறாள். மனைவியின் அன்புக்காக ரகு ஏங்குகிறான். தாயன்புக்காக ஏங்குகிறது குழந்தை. இவர்களது நிலையை மாமியார் உணர்ந்து,

> "நாட்டுக்கு நல்லது பண்ணுகிறேன், இல்லாதவர்களுக்காகப் பாடுபடுகிறேன் என்று சொல்லிக் கொண்டு ஆயிரம் தான் நல்லது செய்தாலும் தாலி கட்டின கணவனுடனும், பெற்ற பிள்ளையுடனும் மகள் குடுத்தனப் பாங்காக இல்லையே என்று வருந்துகிறாள்"[26].

சாந்தியிடம் இதைப்பற்றிக் கேட்டால்,

> "உங்களுக்கும் குழந்தைக்கும் தேவையானவற்றைக் கவனிக்க எத்தனை ஆட்களை வேண்டுமானாலும் நியமிக்கும் நிலையில் நான் இருக்கேன். இந்தத் தகுதியை நான் உணர்ந்து விட்டது மெய் என்றால் இல்லாதவர்களுக்கு இன்னும் அதிகமாக நான் உழைக்க வேண்டும். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்"[27]

என்று ஆவேசமாகக் கணவனிடம் கூறினாள் சாந்தி.

இவ்வாறு சாந்தி குடும்பப் பொறுப்பை மறந்து செயல்படும் நிலையில் ரகு காலப்போக்கில் குடிகாரனாகிவிடுகிறான். பெண் சிறு வயதிலே நன்னடத்தைகளைப் பெறாமல் கல்வியிலும் தோல்வியுறுகிறாள். இச்சூழலில், மனம் நொந்து சாந்தி தற்கொலை செய்து கொள்கிறாள். தனிக்குடும்பத்தில் குடும்பப் பொறுப்பு இல்லாதவளாக மனைவி செயல்பட்டால் உருவாகும் சிக்கல்களும் இந்நாவலில் பதிவு செய்யப்பெற்றுள்ளன.

## கணவன் மனைவி இருவராலும் ஏற்படும் சிக்கல்கள்

கணவன் மனைவி இருவருமே குடும்பத்தின் மேன்மையை உணராமல் ஒருவருக்கொருவர் முரண்பட்டுச் செயல்படுகிற நிலை இவ்வகையில் அடங்கும். கணவனாதிக்கம் இருந்தாலும் சிக்கல் உருவாகும்; மனைவியின் ஆதிக்கம் இருந்தாலும் சிக்கல் உருவ்ாகும்.

பழமைச் சமூகச்சூழலில் ஆணாதிக்கம் பெண் சமூகத்தாரால் விரும்பியோ விரும்பாமலோ ஏற்றுக் கொள்ளப் பெற்றிருந்தது. இந்நிலையில் முரண்பாடுகள் எழாமல் இருந்தன.

கல்வி போன்ற விழிப்புணர்வுக் காரணிகளால் இக்காலச் சமூகம் விழிப்புணர்வு பெற்றிருக்கிறது. இச்சூழலில் ஆண் சமூகமும் பெண் சமூகமும் ஆதிக்க நிலையிலிருந்து விடுபட்டு, இணங்கி வாழும் சூழலில் இயங்குவதற்கு வாய்ப்பு உருவாகியிருக்கிறது. எனினும் அவ்வாய்ப்பு நன்முறையில் பயன்படுத்தப் பெறாத நிலைகளும் சமூகத்தில் நிலவி வருகின்றன. இச்சூழலைச் சிவசங்கரி தம்முடைய நாவல்களில் கவனமாகப் பதிவு செய்துள்ளார்.

இவ்வகைக்கு ‘சுட்டமண்’ என்ற நாவலாக்கத்தைக் குறிப்பிடலாம். ‘சுட்ட மண்’ நாவலில் யமுனா–ரமணன் இருவரும் கணவன் மனைவியர். படித்த, சுயமாகச் சிந்திக்கக்கூடிய அறிவுத்திறம் பெற்றவர்கள். இவர்களுடைய குண இயல்புகளை, சிவசங்கரியே கதைப்போக்கில் குறிப்பிடுகிறார்.

> “ரமணன், யமுனா – இரண்டு பேரும் ஸ்ட்ராங் மைன்டட் இனடெலக்சுவல்ஸ். தம்தம் வழிகளில் சுயமாகச் சிந்திக்கக்கூடிய, இது வேண்டும் அது வேண்டாம் என்று கட்டங்கட்டக்கூடிய அழுத்தமான புத்தி கொண்டவர்கள்”[28]

இவர்கள் எதிர் எதிர் இரசனை உடையவர்கள். திருமண வாழ்க்கையில் இணைய முடிவெடுக்கின்றனர். இந்தச் சூழலில் திருமணமானவுடன் தனக்குக் குழந்தை வேண்டுமென்ற விருப்பத்தை யமுனா தெரிவிக்கின்றாள். அனாதை ஆசிரமத்திலிருந்து குழந்தை ஒன்றைத் தத்தெடுக்கலாம் என்று ரமணன் விரும்புகின்றான். இவர்கள் கருத்துக்களில் முரண்பாடு வருவதால் திருமணம்

நிகழாமல் பிரிகின்றனர். ஐந்து வருடங்கள் கழிகின்றன. ரமணன் வேலையில் கவனம் செலுத்திப் பதவி உயர்வு பெற்று டெல்லியில் இருக்கின்றான். யமுனா சுற்றுலாவிற்காக டில்லி வருகிறாள். இருவரும் சந்திக்கின்றனர். திருமணம் செய்ய முடிவெடுக்கின்றனர். திருமணம் ஆகிறது. ஆறுமாதம் முடிந்தபின் மறுபடியும் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்க மறுப்பதால் பிரிய நினைக்கின்றனர். இவர்களுடைய வாழ்க்கையைப் பற்றி ஆசிரியர் தன் கதைப் போக்கில் குறிப்பிடுவது சிக்கலை நன்கு எடுத்துரைப்பதாக உள்ளது.

> "அதி புத்திசாலிகளாகவும், அடிப்படையில் நல்லவர்களாகவும் இருந்தும் யதார்த்தமாகச் சிந்தித்து, வாழ்க்கையை அது வரும் விதத்திலேயே ஏற்க முற்படாமல் முரண்டிக் கொண்டு நிற்கிறார்களே என்று வேதனையாக இருந்தது. இதனால் வீணாகக் காயப்படப் போகிறார்களே என்று கவலையாகவும் இருந்தது. தங்களுக்கு எல்லாம் தெரியும் என்ற நிலையில் கண்ணைக் கட்டிவிட்ட குதிரைகளாக நடந்து கொள்வதில் பல நல்ல விஷயங்களை இழக்கிறார்களே என்று வருத்தமாகவும் இருந்தது"[29].

சிக்கல்களோ, மேடு பள்ளங்களோ, இல்லாத நிலையில் குடும்பம் இருப்பதில்லை. விட்டுக் கொடுத்தும், அனுசரித்தும் வாழ்கிறபோது சிக்கல் இல்லாமல் குடும்ப வாழ்க்கை அமைகிறது. அருமையான பெண், அற்புதமான ஆண் என்று இருந்தாலும் அனுசரித்து வாழ முடியாத நிலையில் குடும்ப வாழ்க்கையில் தோற்றுப் போகிறார்கள் என்றுதான் மதிப்பிட வேண்டும். இதனை 'சுட்டமண்' என்ற நாவலில் சிவசங்கரி சிறப்பாகச் சித்தரித்துக் காட்டுகிறார்.

## குழந்தையின்மை மற்றும் குழந்தையைச் சார்ந்தமையும் சிக்கல்கள்

திருமணமானவர்கள் குழந்தைப் பேறுகாணுதல் குடும்பத்தின் வளர்ச்சி நிலைகளில் ஒரு கூறாகும். தனிக்குடும்ப அமைப்பிலும் குழந்தைப்பேறு காணுதல் நிகழ்ந்தபின் தான் குடும்பம் முழுத்தன்மைக்குரிய தகுதியினைப் பெறுவதாகக் கருதலாம். இவ்வகையில் கீழ்க்கண்ட இரு பகுப்புக்களை இனங்காணலாம் :

- குழந்தையின்மையால் ஏற்படும் சிக்கல்கள்
- குழந்தையைச் சார்ந்தமையும் சிக்கல்கள்

## குழந்தையின்மையால் ஏற்படும் சிக்கல்கள் :

குழந்தையின்மை என்பது குடும்பத்திற்குரிய பொதுச்சிக்கலாகும். இச்சிக்கலுக்குக் கணவன் மற்றும் மனைவி என்கிற இருவரும் பொறுப்புடையவர்கள். எனினும், குழந்தையின்மை என்கிற சிக்கல் ஆண்களைப் பாதிப்பதில்லை. ஆனால் குடும்ப உறவுகளிடத்தும், சமூகச் சூழலிடத்தும் பெண்களே பாதிக்கப்படுகின்றனர். இவ்வகைச் சூழலில் எழும் சிச்கல்களை, 'எதற்காக', 'திரிவேணி சங்கமம்' என்கிற நாவல்களில் சிவசங்கரி கதைப் பொருளாக அமைத்துள்ளார்.

சிவசங்கரியின் முதல் சிறுகதை 'அவர்கள் பேசட்டும்' என்பதாகும். இச்சிறுகதையில் குழந்தையின்மைப் பிரச்சனைக்கருவாகக் கூறப்பெறுகிறது. இக்கதையில் தியாகு, ராதிகா இருவரும் கணவன் மனைவி ஆவார்கள். இவர்கள். உறவினர் வீட்டு விசேடத்திற்காகச் செல்கிறார்கள். அங்கு நடந்ததைத் தன் கணவனிடம் ராதிகா கீழ்வருமாறு கூறுகிறாள் :

> "ஏண்டி சுத்த அசடா இருக்கியே! ஒரு டாக்டர்கிட்டே காண்பிக்கக் கூடாதோன்னு நாலு பேர் நடுவில் உறைக்கிற மாதிரி கேக்கிறா"[30]

என்பது அவளது மனதைப் பாதித்த அந்தச் செய்தியைக் கணவனிடம் பகிர்ந்து கொள்கிறாள்.

கணவன் மனைவிக்கு ஆறுதலாகப் பேசுகிறார். உன்னைச் சொன்னாலும் அது என்னைச் சொன்ன மாதிரிதான் இந்த மாதிரிச் சூழலில் பெரியவர்கள் விவேகமில்லாமல் பேசினாலும் பொருட்படுத்தக் கூடாது என்று கூறுகிறான். கணவன் ராதிகாவிற்கு அனுசரணையாக இருப்பதால் பெண்டாட்டி தாசன் என்று உறவினர்கள் கூறுவார்கள். இவர்கள் இருவரும் அதைப் பொருட்படுத்திக் கொள்வதில்லை. இச்சிறுகதையின் தலைப்பே 'அவர்கள் பேசட்டும்' என்பதாகும். பொருட்படுத்தக் கூடாது என்கிற தீர்வையும் கணவன் ஆதரவாக இருந்தால் இச்சிக்கலிலிருந்து விடுபட முடியும் என்கிற முனைப்பையும் சிவசங்கரி கூறுகிறார்.

சிறுகதையிலேயே குழந்தையின்மையை அழகாகக் கதைப் பொருளாக்கியவர் நாவலில் அதை மேலும் மெருகூட்டுகிறார்.

'எதற்காக' நாவலில் வரும் இராஜாராம் வழக்கறிஞர் தொழில் பார்ப்பவன். கல்லூரியில் படித்து வந்த இந்துமதியைக் காதலித்துத் திருமணம் செய்து கொள்கிறான். அவள் கருவுறுகிறாள். கரு கலைந்து போகிறது. இது மாதிரி இருமுறை நிகழ்கிறது. பின் கர்ப்பப்பை அறுவைச் சிகிச்சை செய்து மாற்றப்படுகிறது. குழந்தை வேண்டும் என்று எதிர்பார்த்து எதிர்பார்த்து, ஆறு வருடங்களாகின்றன.

தாயின் அறிவுரைப்படி பூஜைகள், நேர்த்திக் கடன்கள் என்று செயல்படுகிறாள்.

> "இந்து நீயும் இந்த ஓராண்டுக் காலத்தில் எத்தனை எத்தனை நோன்புகளையும் பிரார்த்தனைகளையும் செய்திருப்பாய், இத்தனை செய்தும் உனக்கு ஏன் இன்னும் கர்ப்பம் தரிக்கவில்லை. இதிலிருந்தே தெரியவில்லையா.... அது .... அது .... நடக்க வேண்டிய நேரத்தில்தான் நடக்கும் என்று, முயற்சி இருக்க வேண்டியதுதான் டார்லிங் ஆனால் இந்த மாதிரி நம் கையை மீறிய முயற்சிகள் தேவையில்லை. கடவுள் இருக்கிறார் இந்து ..... கண்டிப்பாக நம்பு, ஆனால் அவருக்கு இந்த மாதிரி வழிபாடெல்லாம் தேவையா? அவர் வாயைத் திறந்து உன்னிடம் இதைச் செய் .... அதைச் செய் என்று கேட்டாரா, இல்லையா, பின் ஏன்? இன்று மனிதனுக்குப் பகுத்தறிவு மிக அவசியம். அதை உணராவிட்டால் நாம் மனிதர்கள் அல்ல மிருகங்கள்தாம்"[31]

என்று ராஜாராம் கூறுகிறார். குழந்தையில்லை என்பதற்காக வழிபாட்டு நம்பிக்கையில் ஈடுபடுவதை அவன் பகுத்தறிவுக் கண்ணோட்டத்துடன் விமர்சிக்கிறான். ஒரு நிலையில் இந்துவே இந்த நம்பிக்கையிலிருந்து விடுபடுகிற நிலைக்கு வருகிறாள். தன் கணவனுக்கு உதவியாளராக இருந்து செயல்படுகிறாள். காலப்போக்கில் இவளும் கருவுற்றுக் குழந்தையைப் பெறுகிறாள். எனினும் இறுதியில் மின் பொத்தானில், மழை பெய்ததால் ஏற்பட்ட மின்கசிவினால் தாக்கப் பெற்று இறந்து விடுகிறாள்.

குழந்தையின்மை என்கிற சிக்கலுக்காக, உற்றார்களிடமும், உறவினர் களிடமும், பாதிப்புக்குள்ளாகி இருந்தாள்.

கணவன் அனுசரணையாக இருந்தான். இருப்பினும், அவனுக்குக் குழந்தை கிடைத்த பிறகு அவள் இறந்தது எதற்காக என்று, கணவன் ராஜாராம் வழியாக எழுப்பி, இந்நாவலுக்கு ‘எதற்காக’ என்ற பெயரையும் வைக்கிறார் சிவசங்கரி.

‘திரிவேணி சங்கமத்திலும்’ குழந்தையின்மைச் சிக்கல் தனிக்குடும்பத்தில் உருவாகிறது. குழந்தையின்மை என்ற சிக்கலுக்கு சங்கர் காரணமாகிறான். விபத்தினால் பாதிக்கப் பெற்று, குழந்தைப் பேற்றுக்குரிய சக்தியை இழக்கிறான்.

அமெரிக்காவில் இவன் கல்வி கற்கும் பொழுது மரியா தாம்சன் என்ற பெண்ணுடன் பழகிய பொழுது, குழந்தை உருவாகிறது. குழந்தை உருவானதை மரியா தாம்சன் சங்கரிடம் மறைக்கிறாள். பின் அவன் தாய்நாடு திரும்பியதும் அனுராதாவை மணக்கிறான். அனுராதாவிற்கு அமெரிக்காவில் நடந்த சூழல் தெரியாது.

அமெரிக்காவில் மரியா, போதைப் பழக்கத்திற்கு ஆட்பட்டு இறப்பை நெருங்கும் நிலையில் சங்கருக்குக் கடிதம் எழுதுகிறாள். உங்களுடன் கொண்ட உறவு காலத்தில் பிறந்த ஜேனை உங்கள் மகளாக ஏற்றுக் கொள்ளுங்கள் என்று எழுதப்பட்டிருந்தது. கடிதத்தைப் படித்த சங்கர் ஆவேசமுற்று, கோபமுறுகிறான், அனுராதா கணவனை அமைதிபடுத்தி அமெரிக்கா சென்று ஜேனை அழைத்து வந்து தன் மகளாகப் பாவிக்கிறாள்.

சங்கர் தந்தை பாசத்தை வழங்க மறுக்கிறான். அனுராதா நான்

> “ஜேனை விரும்புவதே உங்கள் இரத்தத்தில் உருவானவள் என்பதற்காகத்தான் என்று விளக்குகிறாள். ஜேனை .... என் வாழ்க்கையில் வீசும் தென்றலாகத்தான் இப்ப நினைக்கிறேன். ஆறு வருடங்களுக்கு முன் எப்போ உங்கள் குழந்தை எனக்குக் கிடையாது என்று ஆகிவிட்டதோ அன்றைக்கு நான் இனிமே என் வாழ்க்கையில் குழந்தை என்ற தென்றல் கிடையாது”[32]

என்று நினைச்சேன் என்று அனுராதா சங்கரிடம் கூறுகிறாள்.

குழந்தையின்மைக்குக் காரணம் கணவன் என்று அவளுக்குத் தெரிந்தாலும் எதார்த்தமாகவே இருக்கிறாள். கணவனிடம் மிகுதியான அன்பு செலுத்தவும் அவள் தவறவில்லை.

இன்னொருத்தி மூலம் பிறந்த ஜேனைக் கூட அவள் ஏற்றுக் கொள்வதற்குக் காரணம் கணவன் மேல் வைத்துள்ள மிகுதியான அன்புதான். மற்ற சராசரி பெண்களாக இருந்தால் கணவனின் பழைமையான பலவீனத்தை முரண்படுத்தி குடும்பத்தைச் சீர்குலைவிற்குக் கொண்டு வந்திருப்பார்கள்.

> "நான் ஜேனை விரும்பறதே அவ உங்க பெண் என்பதால் தான். எனக்கு உங்கள் மேல் எவ்வளவு காதல் இருந்தால் நான் இவ்வளவு உங்கள் பெண்ணுக்காக ஆசைப்படுவேன், என்று புரிந்து கொள்ளுங்கள்"[33]

என்று கூறுகிற வார்த்தைகள் இதயத்தின் ஆழத்தில் குழந்தைப் பாசத்தின் உணர்வு கொந்தளிப்பில் வரும் வார்த்தைகளாகும்.

கணவன் சங்கர் அவள் உள்ளத்து உணர்வுகளை உணர்ந்து கொள்கிறான். தன் மனைவி அனுராதாவை ஒருமுறை ஏமாற்றியது போதும். அவள் விரும்பும் ஜேனை ஒப்படைப்பதே தான் ஒரு நல்ல ஆண்மகன் அல்லது நல்ல கணவன் என்ற நிலையைப் பெறவேண்டும் என்று சங்கர் முடிவெடுக்கிறான்.

'மாலையில் பூக்கும் மலர்களில்' பாலாஜி, கௌரி தம்பதியினருக்குக் குழந்தையின்மை சிக்கல் இருக்கிறது. பாலாஜி மருத்துவத் தொழிலைப் பார்ப்பவன். குழந்தையின்மையால் மனைவி சமூகத்தினரிடமும், உறவினரிடமும் சிக்கலுக்கு உள்ளாகிறாள். ஆனால் கணவன் அன்பு நிலையிலிருந்து மாறவில்லை. எல்லாக் குழந்தைகளையும் தம் குழந்தைகள் என்ற மனநிலைக்கு உயர்ந்து விடுகின்றனர். இங்கு குழந்தையின்மைப் பிரச்சினை கதைக்குரிய பொருளாக இல்லை. கதைப்போக்கில் இது ஒரு செய்தியாகக் கூறப்பெற்றுள்ளது.

'மூக்கணாங்கயிறு' நாவலில் மூர்த்தி, சந்திரா தம்பதியினருக்கு நாவலில் துவக்கத்தில் குழந்தையின்மை பிரச்சினை சுட்டப்பெறுகிறது.

'வளர்த்த கடா', 'மூக்கணாங்கயிறு', 'அம்மா பிள்ளை', 'கப்பல் பறவை' என்ற நாவல்களிலும் குழந்தையின்மைப் பிரச்சினை தலைமைப் பிரச்சினையாக இல்லாமல் கதைப்போக்கில் சொல்லப்பெறுகிறது.

தனிக்குடும்பத்தில் குழந்தையின்மை என்ற சிக்கலுக்குப் பெரும்பாலும் மனைவி காரணியாகக் காட்டப் பெறுகிறாள். இச்சிக்கல் தொடர்பாக, உறவினர்கள், சமூகத்தார்கள், மனைவியை அல்லது பெண்ணைப் பாதிக்கும் விதத்தில் நடந்து கொள்கின்றனர். இது நடைமுறைச் சமுதாயத்தில் இயல்பு நிலை என்று கொள்ளலாம். எனினும் கணவன் அச்சிக்கலைப் பெரிதுபடுத்தாமல் மனைவி மேல் அன்பு செலுத்தும் நிலை பல நாவல்களில் வலியுறுத்தப் பெறுகிறது. இது மாதிரி முன் மாதிரிக் கணவர்கள் உருவாக வேண்டும் என்பது சிவசங்கரியின் உள்ளார்ந்த விருப்பமாகும். அதே சமயத்தில் குழந்தையின்மைக்கே ஆண்கள் காரணியாகும் பொழுது பெண்ணும் இயல்பாக எதிர்கொண்டு முன்மாதிரியாக விளங்க வேண்டும் என்று கருதுகின்றார். இது மாதிரி முன்மாதிரி மனைவிகள் கணவனுக்கும் இன்னொருத்திக்கும் மரபு சாராத நிலையில் உண்டாகிற குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்ளும் நிலை வளர்ந்திருக்கும் நிலை காணப்பெறுகிறது.

குழந்தையில்லை என்பதற்காக, அளவுக்கு அதிகமாக, வழிபாட்டு நம்பிக்கையில் ஈடுபடுவதை ஆசிரியர் தன் பகுத்தறிவுக் கண்ணோட்டத்துடன் அணுகுகிறார்.

ஜெயகாந்தனுக்கு 'அக்னிப்பிரவேசம்' என்ற கதையின் கரு, 'சில நேரங்களில் சில மனிதர்களாக' விரிவாக்கம் பெற்று, மேலும் 'கங்கா எங்கே போகிறாள்' என்று விரிவாக்கம் பெற்றது, இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

சிவசங்கரியின் 'அவர்கள் பேசட்டும்' சிறுகதையாகப் பதிவுபெற்று, அவர்களுடைய பிற்கால நாவல்களில் படிப்படியாக வளர்ச்சி பெற்றதை இங்கு முற்கூறிய கருத்துடன் இணைத்து நோக்கலாம்.

சிவசங்கரி குடும்ப வாழ்க்கையில் குழந்தையின்மை என்ற சிக்கலை அனுபவபூர்வமாகப் பெற்றவர்கள். இந்த அனுபவம் ஆழ்மனதில் பதிந்து எழுத்துக்களில் பிரதிபலிப்பதாகக் கருத இடம் உண்டு. வாழ்க்கை வரலாற்று அணுகுமுறையுடன் கூடிய உளவியல் ஆய்வு, இவ்வகை ஆய்விற்கு உதவுவதாக அமையும்.

## குழந்தைகளைச் சார்ந்தமையும் சிக்கல் :

குழந்தைகளை வளர்க்கும் பொறுப்புக் கணவனுக்கும் மனைவிக்கும் பொதுவானதாகும். பொறுப்புக்களைச் சரிவர நிறைவேற்றப் பெறாத பொழுது சிக்கல்கள் தோற்றம் பெறுகின்றன. எல்லாச் சிக்கல்களும் ஒன்று போல் இருக்கும் என்று கூறுவதற்கில்லை. குடும்பப் பின்புலம், சமுதாயப் பின்புலம், சூழல் பின்புலம் போன்றவைகளைச் சார்ந்து சிக்கல்கள் உருவாகும். இவ்வகைச் சிக்கல்களைக் கதைப் பொருளாக உருவாக்கி, சிவசங்கரி சில நாவல்களை உருவாக்கியுள்ளார்.

தாயன்பு குழந்தைகளுக்குத் தேவைதான். அதன் அளவு கூறுகிற பொழுது, அளவுக்கு அதிகமானால் அமிர்தமும் நஞ்சு என்கிற சூழல் உருவாகிறது. ‘அம்மா ப்ளீஸ் எனக்காக’, ‘அம்மா பிள்ளை’ என்கிற நாவல்களில் தாய் குழந்தைக்கு, மிகுதியான செல்லம் கொடுப்பதால் ஏற்படும் சிக்கல்கள் கதைப் பொருளாக்கப் பெறுகின்றன.

‘அம்மா ப்ளீஸ் எனக்காக’ நாவலில் வரும் சங்கர்–கௌரி தனிக்குடும்பத்தினருக்கு விஜய் என்பவன் ஒரே மகன். கௌரி அளவுக்கு அதிகமாக மகனுக்குச் செல்லம் கொடுக்கிறாள். மகன் சிறு வயதில் படிக்காமல் தேர்ச்சி பெறவில்லை. அப்பொழுது சங்கர், கௌரியிடம், கூறுவதாவது :

> “உடம்புக்கு ஜுரம் வந்தா அல்வாவும் குலோப் ஜாமுனும் கொடுத்தா சரியாகாது கௌரி. கசப்பு மருந்தும், ஊசியும் தான் கொடுத்து கெட்டுப்போன உடம்பைச் சரியாக்கனும். குழந்தை நமக்கு உசத்திதான். அதுக்காக அவனுக்குத் தேவைக்கு மீறிய செல்லத்தைக் கொடுத்துக் குட்டிச் சுவராக்கறதும், நோய்ப்பட்ட உடம்புக்கு அல்வா கொடுக்கறதும் ஒன்றுதான். ஆதியிலேர்ந்தே நான் சொல்லிண்டு வரேன், பாசத்தை அளவோடக் கொடுக்கத் தெரியணும், இல்லைனா நாளைக்கு நம்ம மகன் வாழ்க்கைக் கெடறதுக்கு நாமே காரணமாயிடுவோம் என்று கணவர் அறிவுறுத்துகிறார்”[34].

படிப்பு இல்லாமல் கெட்ட பழக்கங்களுக்கு ஆட்பட்டு, ஆடம்பர மோகங்களுக்கு ஈடுபட்டு, கடன் வாங்குகிற பழக்கத்துக்கு உள்ளாகி,

பிற்காலத்தில் மகன் உருவாகிவிடுகிறான். அம்மாவின் செல்லம் இங்கு கதைக்குரிய சிக்கலாக அமைகிறது.

'வளர்த்த கடா' நாவலில் ராஜி –இருவருக்கும் குழந்தையில்லை. வட மாநிலம் சென்று ஒரு பெண் குழந்தையைத் தத்து எடுக்கின்றனர். காலப்போக்கில் இவர்களுக்கு ஒரு பெண் பிறக்கிறது. இரு குழந்தைகளையும் சமமாக வளர்ப்பதில் கணவனும் மனைவியும் முனைப்புடன் இருக்கின்றனர். தத்து எடுத்த குழந்தைக்கு ஒரு குறையும் வந்துவிடக் கூடாது என்பதில் முனைப்பாக உள்ளனர். தத்து எடுக்கப்பெற்ற குழந்தை திருமணமாகி, புகுந்த வீடு சென்று, பெற்றோர்களை மனச்சிக்கலுக்கு உள்ளாக்குகிறது. ஆகவே இந்நாவலுக்கு 'வளர்த்த கடா' என்ற பெயர் அமைகிறது.

'அம்மா பிள்ளை' நாவலில் புருஷோத்தமன்–ரங்கம்மாள் தம்பதியின் ஒரே மகன் ராஜசேகர், தாய் குழந்தைக்கு அதிக செல்லம் தர, தந்தை எச்சரிக்கை செய்கிறார். அதையும் புறக்கணித்து, மகனை அம்மா பிள்ளையாகவே வளர்க்கிறாள். அம்மாவின் செல்லத்தால் பையன் பொறுப்பற்றவனாகி, எல்லாத் தீய பழக்கவழக்கங்களுக்கும் உள்ளாகிறான். இறுதியில் தாயின் இறப்பிற்குப் பிறகு, தாய் தனக்காகச் செய்தவற்றை நினைத்துப் பார்த்து திருந்துபவனாக கதை அமைகிறது.

'இனி' நாவலில் வெங்கட்– மைதிலி இந்தியக் குடும்பமாக அமெரிக்காவில் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் தங்கள் பிள்ளைகளை இந்திய மரபுப்படி வளர்க்க நினைக்கின்றனர். பிள்ளைகள் அமெரிக்கப் பண்பாட்டில் ஈடுபாடு உடையவர்களாக இருக்கின்றனர். வளர்க்கும் முறையில் கணவன்–மனைவி இருவருக்கும் சிக்கல் இல்லை. வளர்க்கும் விதத்தில் இந்திய மரபும், அமெரிக்க மரபும் முரண்படுகின்றன. ஒரு மரபை உயர்த்திப் பேசாமல், எந்தச் சூழலில் இருக்கிறார்களோ, அந்தச் சூழலைப் பின்பற்றி வாழ்வது தான் சிறந்தது என்பது கதைப்போக்கில் தீர்வு சொல்லப்பெறுகிறது. பெற்றோர்கள், குழந்தை வளர்ப்பில் எதிர் கொள்ள வேண்டிய சிக்கல்களுக்கு இவ்விதமாகத் தீர்வு கொடுக்கப்பெறுகிறது.

## முடிவுரை

மணவழிக்குடும்பத்தில் (Conjugal Family) தனிக்குடும்பம், கூட்டுக்குடும்பம் என இருவகைகள் உண்டு. ஆய்விற்குட்படுத்தப் பெற்ற சிவசங்கரியின் நாவல்களில் தனிக்குடும்ப வகை நாவல்கள் மிகுதியாக உள்ளன.

தனிக்குடும்பத்தில் கணவன், மனைவி என்ற இருவர் இருப்பர். குறைந்தது ஒரு குழந்தையாவது இருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம். சமூக நடப்பியலில் தனிக்குடும்ப வாழ்வியல் சூழலில் நிலவும் சிக்கல்களும் தீர்வுகளும் இலக்கியங்களில் பதிவு செய்யப் பெறுகின்றன. குடும்பவகை நாவல்களுக்குக் கதைப்பொருளில் முதன்மை இடம் தரும் சிவசங்கரியும் சிக்கல்களை நன்கு பதிவு செய்துள்ளார். தனி நபர் திருத்தம் பெற்று, குடும்பம் திருத்தம் பெற்றுப் பின், சமூகம் திருத்தம் பெறவேண்டுமென்பதில் சிவசங்கரி ஆழ்ந்த நம்பிக்கையுடையவர். ஆகவே, குடும்பத்திலிருந்து தனி நபர் திருத்தம் முகிழ்க்க வேண்டுமென்று விரும்புவதாக மதிப்பிடலாம்.

தனிக்குடும்பத்தில் கணவனைச் சார்ந்தும், மனைவியைச் சார்ந்தும், இவ்விருவரைச் சார்ந்தும், அவர்களுக்குரிய குழந்தைகளைச் சார்ந்தும் சிக்கல் உருவாகும் நிலை மதிப்பிடப் பெற்றது.

மிகைப்பாலியல் ஆர்வம் மற்றும் வக்கிரபுத்தி, வசதி மற்றும் ஆடம்பரம், ஆதிக்க உணர்வு போன்ற சூழல்களில் கணவனைச் சார்ந்து சிக்கல்கள் அமைவதை சிவசங்கரி தம் நாவல்களில் பதிவு செய்துள்ளார்.

கணவன் மனித குணங்களுடன் மனவையியுடன் இயங்குகின்றபோது இல்லறம் இனிமையாக அமையும். மிருகக் குணங்களுடன் கணவன் செயல்படுகிறபோது, மனைவி முடிந்த அளவிற்குத்தான் பொறுக்க இயலும். நிலைமை மீறும் போது கணவனைப் புறக்கணிப்பதில் கணவனுடன் வாழ்வதைக் காட்டிலும் விலகியிருப்பது அவள் வாழ்வின் மனமகிழ்ச்சிக்காக அல்ல. குழந்தைகளை உருவாக்க வேண்டிய கட்டாயத்தில் தியாகமாகவும் மிளிர்கிறது.

வசதி மற்றும் ஆடம்பரத்தில் மோகம் கொண்டு, ‘நெறி பிறழ்ந்து நடக்கும் கணவன்மார்களிடம் எங்ஙனம் இணங்கி வாழ்தல் கூடும்? என்ற

சிநதனையை முன்வைக்கிறார், நெறிபிறழ்தல்நிலை என்பது திருமணத்தைப் புனிதமாகக் கருதாத போக்கு, பணத் தேவைக்காக வேறு பெண்ணைத் திருமணம் செய்தல் போன்ற நெறிபிறழ்ந்த வாழ்க்கைகளை மனைவி அடங்கி ஏற்றுக் கொள்ளாமல், தனித்து வாழ இயலும்' என்கிற முன்மாதிரி மனைவிகளை சிவசங்கரி படைத்துக் காட்டுகிறார்.

கணவன் என்றால் ஆதிக்க உணர்வோடு மனைவியை அடக்கியாளும் நிலையை மனைவி தனக்காக இல்லாவிட்டாலும் குழந்தைகளின் நல்வாழ்க்கைக்காக ஏற்றுக் கொள்கிறாள். இந்நிலையில் நிம்மதியும், சுயமரியாதையும் குடும்பத்தில் மனைவிக்குக் கிடைக்காத போது கணவனைப் பிரிதல் நல்லது என்று சிவசங்கரி நெறிப்படுத்துகிறார்.

புகழ் போதையில் மயங்குதல், வசதியான வாழ்வில் மோகம் கொள்ளுதல், கனவு மற்றும் கற்பனைகளோடு வாழ்தல், கணவனை மதிக்காமை, குடும்பத்தில், பொறுப்பின்மை போன்ற வகைகளில் தனிக்குடும்பத்தில் மனைவியைச் சார்ந்து சிக்கல்கள் அமைகின்றன.

'புகழ் போதை' மயக்கம் குடும்பத்தைச் சீர்குலைக்கும் தன்மையது. பிறர் புகழ்கிறபோது, உட்பொருளாகத் தகாத எண்ணங்கள் இருக்கும் என்பதில் மனைவி விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும் என்று சிவசங்கரி எச்சரிக்கிறார். அதுவும் அலுவல் மகளிர், ஆடவர் பலருடன் பழக வேண்டிய நிலையில் அத்தகு விழிப்புணர்வுடன் இருந்தால்தான் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள முடியும் என்பதில் சிவசங்கரி உறுதியாக இருக்கிறார்.

வசதியான வாழ்க்கை தேவைதான், அத்தேவையை மனைவி மோகமாக்கிக் கொள்ளும் போது கணவனை அலட்சியப்படுத்துகிற நிலை உருவாகும். குடும்பத்தில் புரிதல் மற்றும் சகிப்புத்தன்மை குறைந்து 'தான்' என்ற உணர்வு ஓங்கும் என்பதில் சிவசங்கரி எச்சரிக்கைக் குரல் கொடுக்கிறார். வசதியான வாழ்க்கை உருவானாலும் பழமையை மறக்காத நிலையை, ஆசிரியர் வரவேற்கிறார்.

கனவுகள் மற்றும் கற்பனைகள் திரைப்படத்தில் இருக்கலாம். எதார்த்தமான வாழ்வியல் சூழலில் மனைவிகள் எதிர்பார்த்தால் குடும்பத்தில் சிக்கல் உருவாகும் என்கிறார்.

கணவனை மதிக்காத தன்மையால் குடும்பம் தன் அழகுத் தன்மையை இழக்கிறது. மனைவியின் ஆதிக்கம் குடும்பத்தின் வளத்தை இழக்க வைக்கிறது. கணவன் அதனை எதிர்த்து, மேன்மையடைவதில் உறுதியுடன் சிவசங்கரி சிந்திக்க வைக்கிறார். மனைவி குடும்பப் பொறுப்பின்றி நடந்தால் கணவன் மற்றும் குழந்தைகள் நிலை மாறிவிடுகிறார்கள்.

கணவன் மற்றும் மனைவி இருவராலும் தனிக்குடும்பத்தில் சிக்கல்கள் தோன்ற வாய்ப்புண்டு. விட்டுக் கொடுத்தும், அனுசரித்தும் வாழுகிறபோது குடும்பத்தில் சிக்கல் உருவாகாது. கணவனோ அல்லது மனைவியோ முற்சுட்டியவாறு நடக்காவிட்டால் குடும்பம் சீர்குலையும் என நெறிப்படுத்துகிறார்.

குழந்தையின்மையைச் சார்ந்து தனிக்குடும்பத்தில் சிக்கல் உருவாகிற நிலையில், மனைவியைச் சார்ந்தே பெரும்பாலும் சிக்கல்களை நாவல்களில் சிவசங்கரி பதிவு செய்திருக்கிறார்.

'குழந்தையின்மை' சிக்கலில் உறவினர்கள் மற்றும் சமூகத்தாரால் மனைவி பாதிக்கப்படுகிறாள். அச்சூழலில் கணவன்மார்கள் முன்மாதிரிக் கணவர்களாக இருந்து மனைவிக்கு ஆதரவாக இருப்பதை சிவசங்கரி தம் நாவல்களில் காட்டியுள்ளார். இந்நிலை சிவசங்கரியின் உள்ளார்ந்த விருப்பமாகும். அதே போல், குழந்தையின்மைத் தொடர்பான சிக்கலில் ஆண்கள் காரணியாக இருக்கும் போது, மனைவி அதனைப் பெரிதுபடுத்தாமல், 'முன்மாதிரி மனைவிகளாக' இருத்தலையும், சிவசங்கரி தம் நாவல்களில் சித்தரித்துள்ளார்.

குழந்தை இல்லை என்பதற்காக வழிபாட்டு நம்பிக்கையில் அளவிற்கு அதிகமாக ஈடுபடவேண்டாம் என்பது சிவசங்கரியின் சிந்தனையாக உள்ளது.

சிவசங்கரியின் வாழ்க்கையில் குழந்தையின்மை சிக்கல் இருந்தது. அச்சிக்கல் ஆழ்மனதில் பதிவு பெற்றிருப்பதாகக் கருதலாம். ஆழ்மனப் பதிவுகள் 'பிராய்டின்' கருத்துப்படி எழுத்துக்களில் பிரதிபலிப்பதாக மதிப்பிடலாம்.

குழந்தைகளை வளர்ப்பதில் கணவன், மனைவி இருவரும் அளவாக இருத்தல் வேண்டும். யார் செல்லம் கொடுத்து வளர்த்தாலும் குடும்பத்தில் குழந்தைகளின் எதிர்கால வாழ்வு பாதிக்கத்தான் செய்யும். தாய் அதிகம் செல்லம் கொடுத்து, குழந்தைகள் வாழ்வு சீரழிவிற்குள்ளானதைப் பல நாவல்களின் வழி சிவசங்கரி வெளிப்படுத்துகிறார். தாயன்பு அளவாக முன்மாதிரியாக இருந்து பயன் தர வேண்டும். அவ்வன்பு செல்லம் தருகிற கள்ளாக இருந்தால் களிப்புத் தந்து, சீரழிவைத் தவறாது தந்துவிடும் என எச்சரிக்கைக் குரல் கொடுக்கிறார்.

* * * * *

## சான்றாதாரங்கள்


1. *Encyclopaedia Britannica*, Vol.9, P,54.
2. J.P. Jack Nobbs, Robert Hine, Margeret, *Planning Sociology*, P,46.
3. Giri Ray Gupta (Ed), *Family and Social Change in India*, P,8.
4. *Encyclopaedia Britannica*, Vol.9, P,56.
5. எஸ். லாரன்சு, ராஜம் கிருஷ்ணன், டி. செல்வராஜ் நாவல்கள், *தி.பாக்கியமுத்து* (ப.ஆ), *தமிழ் நாவல்களில் குடும்ப சக்தி சமுதாய மாற்றம்*, ப,24.
6. இரா. பாலசுப்பிரமணியன், *சி.சு. செல்லப்பாவின் வாழ்க்கையும் கலையும்*, ப,63.
7. தி.சு. நடராசன், *சிவசங்கரி நாவல்கள் – பெண்கள் படைப்பில் பெண்கள்*, *க.தொ*, ப,103.
8. சிவசங்கரி, *மூக்கணாங்கயிறு*, ப,108.
9. மேலது, ப,108.
10. மேலது, ப,111.
11. மேலது, ப,110.
12. சிவசங்கரி, *பாலங்கள்*, (மூன்று), ப,76.
13. சிவசங்கரி, *47 நாட்கள்*, ப,248.
14. சிவசங்கரி, *பொய்*, ப,121.
15. மேலது, ப,133.
16. சிவசங்கரி, *அது சரி அப்புறம்*, ப,122.
17. மேலது, ப,122.
18. மேலது, ப,196.
19. மேலது, ப,214.
20. Sylvia Feldman, *The Rights of Women*, P,86.

21. சிவசங்கரி, *சுறாமீன்கள்,* பக்,154–155.

22. மேலது, ப,154–155.

23. சிவசங்கரி, *திரிசங்கு சொர்க்கம்,* ப,35.

24. மேலது, ப,40.

25. சிவசங்கரி, *இன்னொருத்தி + இன்னொருத்தி,* ப,2.

26. சிவசங்கரி, *ஏன்,* ப,58.

27. மேலது, ப,38.

28. சிவசங்கரி, *சுட்டமண்,* ப,9.

29. மேலது, ப,329.

30. சிவசங்கரி, *அவர்கள் பேசட்டும்,* சிறுகதைத் தொகுப்பு, ப,169.

31. சிவசங்கரி, *எதற்காக,* ப,84.

32. சிவசங்கரி, *திரிவேணி சங்கமம்,* ப,123.

33. மேலது, ப,174.

34. சிவசங்கரி, *அம்மா ப்ளீஸ் எனக்காக,* பக்,48–49.

# 6. கூட்டுக்குடும்ப உறவு நிலைகள்

குடும்ப அமைப்பில் கூட்டுக்குடும்ப நிலை சிறப்பாகப் போற்றப்பெற்ற காலம் உண்டு. நகரியமாதல், நாகரிகவயமாதல், மேற்கத்திய கலாச்சாரப் பரவல், வேலைக்காக இடம் பெயர்தல் போன்ற காரணிகளால் கூட்டுக்குடும்பச் சிதைவு உருவாகியது. வேளாண்தொழில், கிராமப்புறம் ஆகியவை நிலைத்த காலத்தில் கூட்டுக்குடும்பத்திற்கு நல்ல வரவேற்பு இருந்தது. சமுதாய மாற்றம் கூட்டுக்குடும்பத்தில் ஆதிக்கம் செலுத்தியது. குடும்ப உறவுகளின் மதிப்புகளும் (values) போராட்டத்திற்குள்ளாயின. இச்சூழலைக் கருத்தில் கொண்டு தம் படைப்பிலக்கியங்களில் பதிவு செய்வது படைப்பாளர்களின் இயல்பாயிற்று. சிவசங்கரியும், கூட்டுக்குடும்ப உறவு நிலைகளின் போராட்டங்களைத் தம் நாவல்களில் பதிவு செய்துள்ளார். இந்நிலையை மதிப்பிடுவதாக இவ்வாய்வுப் பகுதி அமைகிறது.

## கூட்டுக்குடும்பமும் பாரம்பரியமும்

> "கூட்டுக்குடும்பம் என்பது ஒரே கூரையினடியில் பொதுச்சொத்தில் ஒரே சமையலறையில் சமைத்து ஒரே உணவு, ஒரே அறையில் உண்டு ஒரே வழிபாட்டு அறையில் வழிபாடு செய்யும் உறவினர்களைக் கொண்டது"[1]

குடும்ப உறுப்பினர்களிடையே 'பொதுமை' நிலவுவது தனிச்சிறப்பாகும்.

> "கூட்டுக்குடும்பத்தின் அடிப்படைப் பண்பாவது இரத்த உறவுள்ள உறவினர்கள் இணைந்து வாழ்வர். இதனாலேயே கூட்டுக்குடும்பம் இரத்த உறவுள்ள கூட்டுக்குடும்பம் (Consanguine Family)"[2]

எனப்பெறும்.

கூட்டுக்குடும்பத்தில் உறுப்பினர்களின் எண்ணிக்கைக்கு வரையறை இல்லை. தந்தைவழிச் சமூக அமைப்பாக இருப்பதால் கூட்டுக்குடும்பத்தில் ஆணாதிக்கமே நிலவியது.

"தனி மனிதர்களைவிடவும் குடும்ப பாரம்பரியமே சமூக மதிப்பாகக் கருதப்பட்டது. குடும்ப உறவுகளில்ஆண் சமூக மதிப்பிற்கு உரியவனாவான்"[3]

என்கிற கருத்தும் கருதத்தக்கதாகும்.

## பாரம்பரியத்தில் மூத்தோர் போற்றப்பெற்றமை

கூட்டுக்குடும்ப அமைப்பில் வயதுப்படி நிலைகள் பயன்படுத்தப் பெற்றன.

"குடும்பத்தின் தலைமைப் பொறுப்பு வயதில் மூத்த ஆண்மகனிடமிருந்து இளையவர்கள் தலைமையைப் பெற முடியாது. அத்துடன் பெரியவர்களுடன் மாறுபட்ட கருத்தை அவை நியாயமாக இருந்தாலும் சொல்ல முடியாது"[4].

அம்முறையில் பாரம்பரியத்தின் சிறப்பான மதிப்புத் தலைமை நிலைதான் என மதிப்பிடலாம்.

மாறி வரும் சமூக அமைப்பில் குடும்ப உறுப்பினர்களுக்கும் பாரம்பரிய மதிப்புகளுக்கும் முரண் உருவாகிற நிலையில் சிக்கல்கள் எழுகின்றன.

ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப் பெற்ற சிவசங்கரியின் நாவல்களில் தனிக்குடும்பம் சார்ந்த நாவல்களே மிகுதியாக (28) உள்ளன. கூட்டுக்குடும்ப வகையைச் சார்ந்தமையும் நாவல்களின் எண்ணிக்கை (16) குறைவாகும். இந்நிலைக்குக் காரணம் மாறிவரும் சமூகச் சூழல்கள்நிலவும் காலத்தில் சிவசங்கரி நாவல் எழுதுவதுதான் எனக் கருதலாம். நகரிய வாழ்க்கையும், நாகரிக வாழ்க்கையும் கிராமப் பொருளாதாரத்தின் வீழ்ச்சியும, வேலைக்காகப் பல இடங்களில்வாழ வேண்டிய சூழலும், எதார்த்த நிலையில் உள்ளன.

இவ்வகை எதார்த்த சூழலில் பாரம்பரிய மதிப்பு உள்ள (Cultural value) கூட்டுக்குடும்பங்கள் பல நிலைகளில் கேள்விக்குறியாக உள்ளன. இதனை, சிவசங்கரி தம் நாவல்களின் சிக்கல்களாகச் சித்தரித்துப் பதிவு செய்துள்ளார்.

சிவசங்கரி படைத்துக்காட்டும் கூட்டுக் குடும்பங்கள் கூடக் கிராமப் பின்புலத்தில் இல்லை. விவசாயக்காலததிற்கும இயந்திரக் காலத்திற்கும் இடையில் மாற்றிடைக்காலத்தைச் (Trasitional Period) சார்ந்த கூட்டுக்குடும்பச் சூழலை நாவலில் பதிவு செய்துள்ளதாக மதிப்பிடலாம். பல நாவல்களில் நகரங்களே களங்களாக உள்ளன. அம்மாப் பிள்ளை, நாவலில் மட்டுமே கிராமக் களம் உள்ளது.

சென்னைக் களத்தைச் சார்ந்தமையும் நாவல்கள் மிகுதியாக உள்ளன. 'மெள்ள மெள்ள' நாவல் ஆசிரியரின் துவக்ககால முயற்சியுடன் தொடர்புடையதால் அவருக்கு மிகவும் பரிச்சயமான திருச்சிக் களத்தைப் பின்னணியாகக் கொண்டு அமைந்துள்ளது. 1981–1989 கால கட்டங்களில் அவரால் எழுதப் பெற்றுள்ள நாவல்கள் மிகுதியாக உள்ளன.

கூட்டுக்குடும்பம்தொடர்பான நாவல்களும் களங்களும் பின்வருமாறு அட்டவணைப்படுத்தப் பெற்றுள்ளன.

அட்டவணை – 6.1

## கூட்டுக்குடும்ப நாவல்களும் களங்களும்

| வ. எண் | நாவலின் பெயர் | வருடம் | உறவினர்கள் தொடர்பு | | களம் |
|---|---|---|---|---|---|
| | | | கணவன் | மனைவி | |
| 1. | மெள்ள மெள்ள | 1978 | + | - | திருச்சி |
| 2. | ஆயுள் தண்டனை | 1979 | + | - | சென்னை |
| 3. | தான் தன் சுகம் | 1981 | + | - | பம்பாய் |
| 4. | தவம் | 1982 | - | + | சென்னை |
| 5. | பாலங்கள் | 1983 | + | - | சென்னை |
| 6. | ஆயிரம்காலத்துப் பயிர் | 1983 | + | - | சென்னை |
| 7. | கருணைக் கொலை | 1983 | + | - | சென்னை |
| 8. | ஒற்றைப்பறவை | 1985 | + | - | சென்னை |
| 9. | நூலேணி | 1985 | + | - | சென்னை |
| 10. | அம்மா பிள்ளை | 1985 | + | - | எடையாளம் (கிராமம்) |
| 11. | இனி தொடராது | 1986 | + | - | சென்னை |
| 12. | வேரில்லாத மரங்கள் | 1987 | + | + | சென்னை |
| 13. | உயர்ந்தவர்கள் | 1989 | - | + | சென்னை |
| 14. | ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால் | 1989 | + | - | சென்னை |
| 15. | குட்டி | 1991 | + | - | சென்னை |
| 16. | இவர்களும் அவர்களும் | 1992 | + | - | சென்னை |

கூட்டுக்குடும்பத்தில் கணவன் வழி உறவினர்கள் மிகுந்திருப்பதை அட்டவணையின் வழி உணரலாம். ஆணாதிக்கச் சமுதாயத்தில் இவ்வகைக் கூட்டுக்குடும்பங்கள் இருப்பது எதார்த்த நிலையாகும். இந்நிலையைப் பிரதிபலிப்பதாக, சிவசங்கரி யின் நாவல்களும் இருப்பது கருதத்தக்கதாகும்.

## சிக்கல்கள் வகைமை

குடும்பத்தில் கணவன் மனைவி இருவரும் உயிர்ப்புக் கரு ஆவர். குடும்பத்தில் இவர்கள் தனித்தியங்க இயலாது. மூத்தோர்களுக்குக் கட்டுப்பட்டு இயங்க வேண்டியவர்களாக உள்ளனர். கணவன் மனைவியரிடையே சிக்கல் உருவானால், மூத்தோர்கள் தாக்கம் அல்லது பராம்பரியத் தாக்கம் இருக்கும். இவர்கள் தந்தைவழிச் சமூகத்தில் இயங்குகிறவர்கள் ஆதலால் கணவனின் பெற்றோர் குடும்பத்தில் மனைவி இருக்கிறாள். மனைவி கணவன்வழி உறவினர்களுக்கிடையே சிக்கல் எழ வாய்ப்புண்டு. இச்சூழலைக் கருத்தில் கொண்டு கீழ்க்கண்ட வகைமை அமைத்துக் கொள்ளப் பெறுகிறது :

- கணவனின் பெற்றோர்களைச் சார்ந்தமையும் சிக்கல்கள்
- கூட்டுக்குடும்பத்தில் கணவன் மனைவியைச் சார்ந்தமையும் சிக்கல்கள்

> "முன்பின்னறியாத சூழலில், புதிய இல்லத்தில் எதிர்க்கட்சி மனப்பான்மையுடன் தன்னைக் கணிக்கின்ற புகுந்த வீட்டாரைத் தனக்கினியராக்கிக் கொள்வதுடன், பிறந்த வீட்டாருக்கும், புகுந்த வீட்டாருக்குமிடையே நல்லுறவுப் பாலம் அமைத்து, மனித உறவுகளைக் கூட்டுறவாக்குகின்ற பெண்ணுடைய திறமை மானுட வரலாற்றில் முதன்மை நல்கி, ஆய்வு செய்யப்பட வேண்டிய கூறு"[5]

என்று அறிஞர்கள் குறிப்பிடுவர். அவ்வகையில் கூட்டுக்குடும்பத்திலும் மனைவி என்கிற பெண்ணுக்குக் கூடுதல் பொறுப்புகள் இருப்பதாகக் கருதலாம்.

## கணவனின் பெற்றோர் மற்றும் கணவனைச் சார்ந்தமையும் சிக்கல்கள்

மனைவி கூட்டுக்குடும்பத்தில் கணவனின் வீட்டில் இருக்க வேண்டிய நிலையில் தந்தைவழிச் சமூக அமைப்பு நடைமுறையில் உள்ளது. கணவனின் பெற்றோர்களான மாமனாரும் மாமியாரும் மருமகளுடன் கொள்ளுகிற உறவு நிலைகள் இங்குக் கருதத்தக்கது. சிவசங்கரி இவ்வகை உறவு நிலைகளின் இயல்பையும் முரணையும் தம் நாவல்களின் வழி எடுத்துரைக்கிறார்.

### புறக்கணிப்பும் ஆதரவும்

மாமனார்–மாமியார் மருமகளை ஏதாவது காரணங்காட்டிப் புறக்கணிப்பதும் கணவன் ஆதரவாக நடந்து கொள்வதும் நடைமுறை நிலையாகும். ஆனால் கணவனே தன் இயல்பிலிருந்து மாறி நடக்கிற கூட்டுக் குடும்ப நிலையும் உண்டு என சிவசங்கரி நாவலின் வழி எடுத்துக் கூறுகிறார்.

'ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால்' நாவலில் சுட்டப்பெறும் நந்தக்குமார் ஏழை ஆசிரியரின் மகன். நிலையில்லாத மனம் உடையவன்

> "அன்பு என்ற பேரால் தொணதொணக்கும் அப்பா... தாலிகட்டிவிட்ட காரணத்தால் அழுத்தமான சுமையாகிவிட்ட மனைவி, குழந்தை உறவு என்கிற உரிமை வைத்துக் கொண்டு திரும்பிப் பார்த்தால் வந்து நிற்கும் கண்ணபிரான், மாமி, பெரியம்மா வகையறாக்கள் .... எல்லாரையும் விட்டுவிட்டு வெகுதூரம் தள்ளிப் போய் நின்று பழையபடி சுதந்திரமாய்ப் பறந்து திரிந்து சுவாசிக்க வேண்டும் போல இருக்கிறது"[6]

என்று நந்தகுமார் நினைக்கிறான். அலுவலகத்தின் வழி மேற்பதவிக்காக இலண்டன் செல்லும் வாய்ப்பில் மனைவியையும் குழந்தைகளையும் விட்டுவிட்டுச் செல்ல முடிவெடுக்கிறான்.

தந்தை அதற்கான காரணத்தைக் கேட்கும் போது,

"என் மனசுக்கு ஏத்த மாதிரி அவளுக்கு நடந்துக்கத் தெரியலை. என் நண்பர்களோட நாகரிகமா நாலுவார்த்தை பேசிப்பழகத் தெரியலே ..... மொத்தத்துலே எதுவுமே சரியில்ல. அவ எனக்குப் பொருத்தமானவளே இல்லை"[7]

என்று எதிர்த்துப் பேசிவிட்டு இலண்டன் சென்றுவிடுகிறான்.

அவன் மனைவி மஞ்சுளாவின் பெற்றோர்கள் செய்தி அறிந்து வருகின்றனர். தங்களோடு வந்துவிடும்படி கேட்கின்றனர். மஞ்சுளா மாமனாருடனும் அத்தையுடனும் தங்கவே முடிவெடுக்கிறாள். மாமனார் மஞ்சுளாவை மருமகளாக மட்டும் கருதாமல் மகளாகவே கருதி ஆதரித்தார். அவளைப் படிக்கவைத்து உயர்ந்த வேலைக்கும் அனுப்பினார். கணவன் நந்தகுமார் புறக்கணித்த போதும் மாமனார் மாமியாரின் ஆதரவு கணவன் குடும்ப அமைப்பில் நிலைப்படுத்தியது. அவளின் வாழ்க்கைக்கு நிம்மதி வழங்கியதுடன் பேரக் குழந்தையினையும் வளர்த்து ஆளாக்குகிறார்கள். மாமனார் துரைசாமியும் மாமியார் நாகமணியும் முன்மாதிரிப் பாத்திரங்களாக விளங்குகின்றனர்.

## கூட்டுக்குடும்ப உறவில் மாமியார்

சிவசங்கரி தம்முடைய நாவல்களில் 'மாமனார்' மையமிட்ட சிக்கல்களை வெளிச்சமிட்டுக் காட்டவில்லை. இந்நிலைக்கு நடைமுறையில் பெரும்பாலும் மாமனார் மருமகள் உறவு நிலையில் முரண்கள் வலுப்பதில்லை. மாமியார்–மருமகள் உறவு நிலைகளிலே முரண்கள் இயங்குகின்றன. சிவசங்கரியும் இவ்வகையில் அமையும் உறவுநிலை முரண்களை, 'மெள்ள மெள்ள', 'ஆயிரம் காலத்துப் பயிர்', 'ஒற்றைப்பறவை', 'இனித் தொடராது', 'அம்மா பிள்ளை' – ஆகிய நாவல்களில் சித்தரித்துக் காட்டுகிறார்.

## குணவறுமையான மாமியார்

நாவல் வாழ்க்கையிலிருந்து பிறக்கிறது. வாழ்க்கையினாலேயே வளர்க்கப்படுகிறது. அது வாழ்க்கையில் தன் பாதிப்புகளையும் உண்டாக்க வல்லது. எனவே வாழ்க்கையின் பொறுப்புகளைத் தட்டிக் கழித்துவிட்டுக் கற்பனையில் மட்டும் பிறக்கும் நிலை நாவல்களுக்கு இல்லை என்று

குறிப்பிடுவர். மெள்ள மெள்ள நாவல் வாழ்க்கையிலிருந்து தோன்றியது என்று படித்தவர் மதிப்பிடுவர். இந்நாவலில் சித்தரிக்கப் பெறும் அகிலா அழகானவள் இல்லை. ஆனால் மனஅழகு நிறைந்தவள். கல்வியிலும் சிறப்புப் பெறவில்லை. ஆசிரியர் வீட்டுப் பெண்ணாக, நடுத்தர வர்க்கக் குடும்பத்தில் பிறந்தவளுக்குப் பள்ளி இறுதி வகுப்பை முடித்ததே பெரிய சாதனை.

மஹாதேவன்-சாரதா தம்பதியினர்க்குப் பிறந்தவள் அகிலா. மூத்த சகோதரியின் திருமணத்திற்காக, தனக்கு ஒதுக்கப்பெற்ற பணத்தை இழந்தவள். சகோதரன் சுவாமிநாதன் வேலை கிடைத்ததும் பணக்காரப் பெண்ணைத் திருமணம் செய்து ஒதுங்கிக் கொண்டான். குடும்பம் என்பதன் புனிதத்தை உணராதவன். ராமு, பவானி இருவரும் கவலை உணராத வயது உடையவர்கள். படித்துக் கொண்டிருக்கிறார்கள். தாய் சாரதாவிற்குத் தீராத ஆஸ்துமா வியாதியாகிப் படுக்கையில் இருக்கிறாள். இவ்வளவுப் பிரச்சினையிலும் அகிலாவால்தான் குடும்பம் இயங்குகிறது.

திருச்சியில் கிருஷ்ணன் செல்வந்தர். அவரது மூத்த மகன் ஸ்ரீதரன் உடன் ஊனமானவன். தன் குடும்பம் கடன் பிடியிலிருந்து விடுபெற அகிலா ஸ்ரீதரனை மணக்கிறாள். கணவன் ஸ்ரீதரன், பச்சைக் குழந்தையின் பிடிவாதம், முரட்டுத்தனம், கோபதாபத்துடன் இருப்பான். சில சமயங்களில் இந்த உலகத்துக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? நான் ஏன் வாழ்கிறேன் என்ற சூன்யத்தில் அமிழ்ந்து உணர்ச்சிகளே அற்றுப் போவான். தன் உடம்பின் குறை காரணமாக, மனசில் காளானாய்ப் பூத்துப்போன தாழ்வு மனப்பான்மையின் காரணமாகப் பிறர் எது சொன்னாலும் எதிர்ப்பான். இத்தகு குணவியல்புகளைக் கொண்ட ஸ்ரீதரனைக் கணவனாக ஏற்றுக் கொள்ளத் தயங்காமல் எதிர்நிற்கிறாள் அகிலா.

அகிலாவின் மாமனார் கிருஷ்ணன் நல்ல குண இயல்பு கொண்டவர். மாமியார் ஜானகி அகிலாவின் சிறு சிறு தவறுக்குக்கூட முரண்பட்டுக் கொண்டிருந்தாள்.

> "பிரிஜ்ஜை பார்த்துத் திற. கதவை அடிச்சு மூடாதே. ஐஸ் தண்ணி குடிச்சு உனக்குப் பழக்கம் உண்டா? என்றும் மேஜையிலே சாப்பிடத் தெரியுமா? என்றும் இன்னும் சில்லறையாய்ப் பேசின பேச்சுக்களைச் சத்தியமாக அகிலா தப்பாக எடுத்துக் கொள்ளவில்லை"[8]

என்று சிவசங்கரி கதைப்போக்கில் குறிப்பிடுவது இங்கு கருதத்தக்கதாகும்.

மாமியார் ஜானகி பணத்தால் கிணற்றுத் தவளையாக வாழ்பவள். யாரையும் மதிக்காமல் பேசுவது அவளின் பிறவிக்குணம். நாத்தனார் வித்யாவும் அகிலாவிற்கு ஆறுதலாக இல்லை. தன்னம்பிக்கையுடன் புகுந்த வீட்டில்செயல்பட்டு, ஸ்ரீதரனை மாற்றிக் காண்பிக்கிறாள். ஆனால் மாமனார் கிருஷ்ணன் இறந்த பிறகு குணவறுமையுடைய ஜானகி தலையெடுக்கிறாள். நாத்தனார் வித்யா தாயின் துணைக்குப் போகிறாள். கணவன் ஸ்ரீதரன் தம்பியின் பணக்கார மனைவி உஷாவுடன் அகிலாவை ஒப்பிட்டு வார்த்தைகளால் மனைவியைத் துன்புறுத்துகிறான். இச்சூழலில் அகிலா நோய்வாய்ப்படுகிறாள். மாமியார் மற்றும் கணவனால் புறக்கணிக்கப் படுகிறாள். ஸ்ரீதரன் தம்பி ஹரியின் முயற்சியினால்அகிலாவிற்கு வாழ்க்கை கிடைக்கிறது.

## கலப்புத் திருமணத்தில் மாமியார்

ஆயிரம் காலத்துப் பயிர், நாவலில் மலர்விழி கண்ணன் ஆகியோர் காதலித்துப் பெற்றோர் சம்மதத்துடன் திருமணம் முடிக்கின்றனர். மலர்விழி வேறு ஜாதியைச் சேர்ந்தவள். மேலும் படித்து வேலை பார்ப்பவள். இவள் மாமியாரிடம் நேரடியாகவும் மறைமுகமாகவும் துன்பப் படுத்தப் பெறுகிறாள்.

மலர்விழி பற்றி மாமியார் தன் மகளிடம் சொல்லிக் கொடுத்துக் கணவன் மனைவியிடம் சிக்கல் உருவாக்குகிறாள்.

திருமணமான புதிதில் கண்ணனும் மலர்விழியும் வழக்கம் போல சேர்ந்து வீடு திரும்புகிறார்கள். அப்போது கணவனின் தாயார் பர்வதம்,

> "என்னமோ தனக்குத்தான் அதிசயமாய் ஆகாசத்துலேர்ந்து பெண்டாட்டி கிடைச்சிட்ட மாதிரியும், அவமேல தூசி படக்கூடாதுனுட்டுக் கூடவே போறதும் வர்றதும் .... தெருவே சிரிக்குது ..... என்று பர்வதம்உரக்க முணுமுணுக்க அன்றுதான் அவர்கள் சேர்ந்துவந்த கடைசி நாள்"[9]

என்று சிவசங்கரி கதைப்போக்கில் குறிப்பிடுகிறார். கணவன்–மனைவி அன்பாகப் பழகுவதற்கு இங்கு மாமியாரால் தடைவிதிக்கப் பெறுகிறது.

மலர்விழிக்குச் சமைக்கத் தெரியாததை மகளிடம் எடுத்துச் சொல்லி மனம் குலைய வைக்கிறாள். மலர்விழியின் தந்தை விபத்திற்குள்ளாகி மருத்துவமனையில் இருக்கிறார். மலர்விழி வேலை பார்க்கும் அலுவலகத்திலிருந்து மருத்துவமனைக்குச் சென்று தந்தையைப் பார்த்துவிட்டுத் தாமதமாக வீட்டிற்கு வருவாள்.

> "எதையும் கண்டிக்காம நீ இருக்கிறதாலே தான் அவ இந்த துள்ளு துள்ளுறா. ஒண்டியா அத்தனை வேலைகளையும் நா செய்யறேனிட்டு.... இப்படி பேசறன்னு நினைக்காதே. இப்ப அடக்கலைன்னா .... நாளைக்குக் கையவிட்டு நிலைமை போயிடும் .... ஜாக்கிரதை"[10]

என்று மகனிடம் சொல்லிக் கொடுக்கும் கொடுமைக்கார மாமியாராக விளங்குகிறாள்.

மலர்விழி கண்ணனிடம் எங்கள் அம்மா வீட்டிற்கு அனுப்புங்கள், அல்லது தனிக்குடித்தனம் போவோம் என்று கூறியபோது கண்ணன்,

> "ஷட் அப் ஐ ஸே .... போனாப் போவுதுன்னு பேசாம இருக்க இருக்க ...நீ ரொம்பத்தான் வாயாடறே .... கீழே அம்மா .... இங்கே நீ ..."[11]

என்று சினந்து கொள்கிறான்.

கண்ணனின் தாய் பர்வதத்தின் பேச்சுக்கள் குடும்பத்தில் அவ்வப்போது கணவன்–மனைவியிடையே மன அமைதியைக் குலைத்தது. கதைப்போக்கின் முடிவில் மலர்விழியும் கண்ணனும் மனம்விட்டுப் பேசி தங்களுக்குள் புரிதலை நன்கு வளப்படுத்தினர்.

## மகனின் முறையற்ற செயலுக்கும் துணை

'ஒற்றைப் பறவை' நாவலில் சுசீலா தம் தூரத்து உறவினரான செந்திலை மணமுடிக்கிறாள். திருணத்திற்குப்பின் செந்தில் சிங்கப்பூர் செல்கிறான். அங்கு வேலை பார்க்குமிடத்தில் முதலாளியின் பெண் லீலாவைத் திருமணம் செய்து கொள்கிறான். பெற்றோர்களுக்கும் கடிதம் எழுதுகிறான்.





மனைவி இருக்க மற்றொரு பெண்ணை மணப்பது முறையற்ற செயலாகும். இதனைப் பெற்றோர்கள் கண்டிக்கவில்லை. மகன் பணக்காரப் பெண்ணுடன் தொடர்பு கொண்டுள்ளதால் கண்டிக்கவில்லை, மேலும்,

> "கண்ட கண்ட சனியன்களுக்கு எல்லாம் சோறு போடணும்னு என் தலையில எழுதியிருக்கு" என்றும் "எதுக்கும் வக்கில்லா ஜென்மங்கள் நமக்குப் பாரமா வந்து சேர்ந்திட்டதுங்கப்பா ... என்றும் துக்கரி, மகாதுக்கிரி .... இதும் மூஞ்சிலே நான் விழிக்க வேண்டி இருக்கிறதே"[12]

என்றும் சுசீலா காதுபட மாமியார் முணு முணுப்பாள். 'சுசீலா தண்டச்சோறு' எனக் கருதப்பெற்றாள். சுசீலா, பெற்றோர் வீட்டிற்கு அழைத்துவரப் பெறுகிறாள்.

கணவனை எதிர்க்க முடியாத வறுமைச் சூழல். தனியே வேலைக்குச் சென்று தன்னையும், சித்தியையும் காப்பாற்றுகிறாள். இறுதியில் ஒரு பணக்கார வீட்டில் தாயற்ற பெண் குழந்தைகளைக் கவனிக்கும் பொறுப்பை ஏற்கிறாள். அந்த வீட்டுத் தலைவன் இவளை மணக்க முன்வரும் பொழுது தானாக அங்கிருந்து விலகுகிறாள். ஒரு அநாதை ஆசிரமத்தில் குழந்தைகளுக்கு ஆசிரியராக சேர்ந்து விடுகிறாள்.

பத்தொன்பது வருடம் கழித்து, கணவன் இறந்துவிட்ட சேதியுடன், அங்கு லீலாவின் மகனான ரவி இவளைத் தேடி வருகிறான். அப்பா உங்களை முதலில் திருமணம் செய்தது அம்மாவிற்குத் தெரியாது. அப்பாவின் மறைவிற்குப் பிறகு, ஊரிலிருந்து வந்த கடிதங்கள் மூலம் தெரிந்து கொண்டோம். அம்மா உங்களை அழைத்துவரச் சொன்னார்கள் என்று கூறும் பொழுது, அகிலா மறுத்துவிடுகிறாள்.

> "கடல் தாண்டி வந்து, எப்பவோ பட்ட காயத்துக்கு இன்னிக்கு உன்னை அனுப்பி உங்கம்மா மருந்து போட வச்சிட்டாங்களே ரவி. இது ஒண்ணே எனக்குப் போதும்"[13]

என்று கூறித் தனியே வாழ முடிவெடுக்கிறாள் சுசீலா.

## இரண்டாம்தார மாமியார்

இனி தொடராது நாவலில் கார்த்திகேயனின் தாய் இறக்கிறாள். தந்தை கனகம்மாவை இரண்டாம் தாரமாகத் திருமணம் செய்து கொள்கிறார். கனகம்மாள் மூத்தாள் மகனைப் பாசத்தால் கட்டிப் போட்டு, அவனுக்குச்செய்யும் சாதாரணமான செயல்களைக் கூட அவனுக்காகவே செய்ததாகக்கூறி நம்ப வைக்கிறாள். தான் இருப்பதே கார்த்திகேயனுக்காகத் தான் என்கிற பிரேமையை உண்டு பண்ணுகிறாள். அம்மாவிடம் கண்மூடித்தனமான அன்பு வைத்து, சுயமாகச் சிந்திக்க மறந்து போய், அவள் செய்யும் அடாவடித் தனங்களுக்குத் துணை போகுபவனாக கார்த்திகேயன் சித்தரிக்கப் பெறுகிறான்.

கார்த்திகேயனுக்கு புஷ்பாவைத் திருமணம் செய்து வைக்கிறாள். ஆனால் மனதில் வஞ்சக எண்ணம் உள்ள அவள் புஷ்பாவைக் கணவனுடன் சேரவிடாமல் தடுக்கிறாள். வயிற்றுக்குக்கூட சரியாகச் சோறிடுவதில்லை. புஷ்பாவின் வீடு வறுமையில் இருப்பதால்அவளின் பிறந்த வீட்டிலும் ஆதரவு இல்லாத நிலை. பதின்மூன்று வருடங்களாக இந்நிலை தொடர்கிறது.

புஷ்பாவிற்குக் குழந்தை இல்லாததைக் காரணம் காட்டி, இரண்டாம் திருமணத்திற்கு ஏற்பாடு செய்யப் பெறுகிறது. கனகம்மாளுக்குப் பிறந்த மகன் சுதாகர் நல்லவன். அவன் அண்ணியிடம் குடும்பச் சூழல்களை உணர்த்தி ஆதிரிக்கிறான். கனகா தன் மகள் கார்த்திகேயனிடம் மருமகளைப் பற்றிக் குறையே சொல்லுகிறாள்.

> "கொஞ்சம் சத்தமா பேசிட்டாக் கூட அழுதுவிடுகிறாள். வாழற வீட்டுல தினமும் ஒரு பொம்பளை அழுதுகிட்டே இருந்தால் நல்லாவா இருக்கும். பார்க்கிறவர்கள் என்ன நினைப்பாங்க. என்னவோ மாமியார்க்காரி மருமகளைக் கொடுமைப்படுத்துகிறாள் அடிக்கிறாள், விரட்டுகிறாள் என்று தானே பேசிக்கிவாங்க. எனக்கு ஏம்பா அந்தப் பெயரெல்லாம் .... ஏதோ என்னால முடியறவரைக்கும் உழைச்சிட்டாப் போவுது"[14].

கார்த்திகேயன் பேசாமல் தலை குனிந்து நிற்க, கனகம்மாள் தொடர்கிறாள்,

"இப்ப செய்கிறதைப் பற்றிக் கூட எனக்குக் கவலையில்லப்பா .... என் காலம் முடிஞ்சி போயிடுச்சின்னா, நீ என்ன பண்ணுவே .... ஏது பண்ணுவேனுதான் கவலையா இருக்கு .... வாயில்லாத அப்பாவி பிள்ளை நீ .... இப்பவே உன் தலைல எல்லாரும் மிளகாய் அரைச்சிட்டு இருக்காங்க ... உனக்கு வந்து வாய்த்ததும் சரியில்லே .... ஏதோ சீர் செனத்தினு அதிகமா இல்லாட்டிப் போனாலும், பொண்ணு நல்ல குணமா இருப்பாள்னு தரகர் சொன்னதைக் கேட்டு ஏமாந்துட்டோம். கையிலே காரியமும் இல்லே ... நல்ல புத்தியும் இல்லே .... சதா அழுதுகிட்டு, தனக்குத் தானே சிரிச்சுகிட்டு ... சரியான பைத்தியமா இல்லே இருக்குது .... பதிமூன்று வருஷமா நீ இவகிட்டே படற பாட்டைப் பார்த்து மனசு தவியாதவிக்குது. தப்புப் பண்ணிட்டோமோ என்று ...."[15]

கையில் காப்பியுடன் உள்ளே வரலாமா வேண்டாமா என்று தயங்கி நிற்கும் புஷ்பா, மாமியாரின் பேச்சைக் கண்டு திடுக்கிடுகிறாள்.

வெளியே வந்த கார்த்தி,

"நாங்கள் பேசுவதை மறைந்து நின்று கேட்கிறாயா என்று கேட்டவண்ணம் கொதிக்கும் காப்பியை அவள் தலையில் கொட்டுகிறான். அலறத் தொடங்கிய காட்சியைக் கண்டு, கொழுந்தன் சுதாகர் தட்டிக் கேட்கிறான். தாய் கனகம்மாள் .... கார்த்தி, உன் தம்பி என்னைக் குற்றம் சொல்லறத பார்த்தியா .... என்று அழுகிறாள்.

நிறுத்துடா இவள் என் பெண்டாட்டி. நான் என்ன வேணும்னாலும் செய்வேன். நீ யாரு அதைக் கேட்க. உன் படிப்பை எல்லாம் இங்கே காட்டாதே ... ஒழுங்கா படிச்சு பாஸ் பண்ற வேலையைப் பாரு. ஐயா படிப்புக்கே நான் தான் படியளக்கிறேன் என்கிறது நினைப்புல இருக்கட்டும். சும்மா வாயை ஓட்டாதே"[16]

என்று கார்த்தி தம்பியைக் கண்டிக்கிறான்.

கனகாவின் கொடுமைகளை, புஷ்பா தாங்கிக் கொள்கிறாள். பற்றாக்குறைக்குக் கணவனும் தன் தாயின் பேச்சைக் கேட்டுக் கொடுமைப் படுத்தும் முரண்பாடு நாவலைப் படிப்பவரின் மனதில் அவலச் சுவையை ஊட்டிவிடும்.

கனகா மூத்தாள் மகனிடம் பாசம் வைப்பது போல நடித்து அவன் வாழ்க்கையைச் சீரழிக்கிறாள். அந்த நடிப்பிற்குக் காரணம் கணவனின் மூத்தாள் மகனின்மேல் அவள் கொண்டுள்ள வெறுப்புதான் காரணம். இதனை உளவியல் பின்னணியில் மேலும் ஆராய்தல் பயன் உள்ளதாக இருக்கும். வெளிப்படையாகக் கார்த்திகேயனைக் கொடுமை படுத்தாமல், பாவனையாக அன்பு காட்டுபவள், அவனின் மனைவி புஷ்பாவை வெளிப்படையாகவே கொடுமைப்படுத்துவதால் அவளின் வக்கிர உணர்வு வெளிப்படுகிறது.

மாமியாரின் வக்கிர உணர்வுக்கு அவளின் உண்மையான மகன் துணை போகாததால் புஷ்பா பிழைக்கிறாள். மாமியார் அடிக்கடி புறக்கணிக்கும் நிலையில் அண்ணியைத் தாய்போலக் கருதி பாதுகாப்பாக வீட்டைவிட்டு வெளியேற்றுகிறான்.

## கடமையில் உரிமை

'இவர்களும் அவர்களும்' நாவலில் அபிராமி குமரேசன் தம்பதியினர், குமரேசனைப் பெற்றவர்களுடன் குடும்பம் நடைபெறுகிறது. இரண்டு வருடங்களாக எல்லாம் சரியாகப் போய்க் கொண்டிருக்கிறது. அபிராமியின் தந்தை திடீரென்று விபத்தில் இறந்துவிட, அந்தக் குடும்பத்திற்கு அபிராமி தன் சம்பளத்தைக் கொடுத்து, உதவ நினைக்கிறாள். அதற்கு மாமனார் மாமியார், கணவன் எல்லோரும் எதிர்க்கின்றனர்.

இந்நிலையில் என் குடும்பம் ஒரு நிலைக்கு, அதாவது தம்பி வேலைக்குப் போகும் வரை என் சம்பளம் அந்தக் குடும்பத்திற்கு அவசியம் தேவை, என்ற கருத்தினைத் தெரிவிக்கிறாள்.

> "பெத்தவங்களைப் பொறுத்தவரை பெண்ணுக்கும் பிள்ளைக்கும் கடமை ஒன்றுதான். அது புரிந்து என் கடமையை நிறைவேத்தப் போறேன் ... எங்கம்மா என்னோட தீர்மானத்தை ஒத்துக்க மாட்டாங்க .... ஆனா எனக்கு வேற வழி தெரியல .... என்னைப் பொறுத்தவரை நீங்களும் அவங்களும் ஒண்ணுதான். இரண்டு குடும்பமும் என்னோட ரெண்டு கண்களுக்குச் சமம்னு நா நினைக்கிறேன். ஆனா அப்படி நீங்க நினைக்கல. உன்னைப் பெத்தவங்களும் இக்குடும்பத்தைச் சேர்ந்தவங்கதான், அவங்க கஷ்டத்துல பங்கு கொள்றது நம்ம

கடமையின்னு நீ நினைச்சிருந்தா நா ரொம்ப அதிர்ஷ்டசாலின்னு குதிச்சிருப்பேன் .... ஆனா அதுக்குக் கொடுப்பினை இல்லை"[17]

என்று கூறி தாய் வீட்டுக்குப் புறப்படுகிறாள்.

## மதச்சடங்குகளில் முரண்

'வேரில்லாத மரங்கள்' என்ற நாவலில் மாதவன் வசுந்தரா மேரி வெவ்வேறு மதத்தைச் சேர்ந்தவர்கள். காதலித்து வீட்டினரை எதிர்த்துத் திருமணம் செய்து கொள்கின்றனர். மதத்தைப் பற்றிக் கவலையின்றி, ஒருவரையொருவர் மதிப்போம் என்று முடிவு செய்து கொள்கின்றனர்.

இவர்களுக்குப் பிறந்த குழந்தையைப் பார்த்துக் கொள்ள, உதவிக்காக, வசுந்தராவின் அத்தை (கிருத்துவ மதம்) வீட்டிற்கு வருகிறாள். அதன் பிறகு மாதவனின் தாயார் தவறிப்போக, தனியாக இருக்கும் தந்தை, மகனுடன் தங்குகிறார். பின் மதம் காரணமாக, கணவன், மனைவி இருவருக்கும் பிரச்சினை உண்டாகிறது. இறுதியில் சிக்கல் பெரிதாகிறது.

இதற்கிடையில் பிறந்த குழந்தை ராஜாவிற்கு மஞ்சள் காமாலை வந்தது. இருபக்கப் பெரியவர்களும் அவரவர் மதச் சடங்குகளைச் செய்ய, நோய் முற்றிப் பையன் இறந்துவிடுகிறான். அப்பொழுது பக்கத்து வீட்டுக் கதையாசிரியர்,

"மதம் வேறு ... சடங்குகள் வேறு .... பெரியவங்க இளைய தலைமுறைக்கு வழிகாட்டியா நடந்துக்கணுமே தவிர அவங்க சீரழிவுக்கும், அழிவுக்கும் நாமே நம்மோட வெறித்தனமான சிந்தனைங்க காரணமாயிடக் கூடாது"[18]

என்று அறிவுரை கூறுமிடம் ஆசிரியர் குரலாக ஒலிக்கிறது.

## மகனுக்குத் துணை

அம்மா பிள்ளை நாவலில் எடையாளம் கிராமத்து மிராசுதார் புருஷோத்தமன். அவனின் மனைவி ரங்கம்மாள். அவர்களின் ஒரே பையன் ராஜசேகர் என்கிற ராஜா. அதிகமான செல்லம் கொடுத்து அவன் கெட்டுப் போவதற்குத் தாய் காரணமாகிறாள். இந்நிலையில் ராஜாவிற்கு தூரத்துச்

சொந்தக்காரரின்பெண் ஆனந்தியைத் திருமணம் செய்து வைக்கிறாள். அவளுடன் ராஜா சரியாகக் குடும்பம் நடத்தவில்லை. தட்டிக் கேட்ட மனைவியை மாமியார் திட்டுகிறாள். மகன் செய்வது தவறு என்று தெரிந்தும் மருமகளையே குறை கூறுகிறாள். இந்நிலையில் ஆனந்தி, பிறந்த வீட்டுக்குச் சென்றுவிடுகிறாள். இறுதியில் தாய் திருந்தி மகனையும் திருத்துகிறாள். ஆனந்தியுடன் சேர்ந்து குடும்பம் நடத்துவதாக நாவல் முடிகிறது.

## கூட்டுக்குடும்பத்தில் கணவன்-மனைவியிடையே சிக்கல்

கூட்டுக்குடும்பத்தில் கணவன் வழிப் பெற்றோர்களின் ஆதிக்கமும் பாரம்பரிய மதிப்புக்களைச் சார்ந்த அடக்குமுறையும் பெரும்பாலும் இடம் பெற்றிருக்கும். கணவனின் தந்தையும் தாயும் மகனிடம் பொருந்தாதனவற்றைக் கூறி, மகனையும் மருமகளையும் உறவில் முரண்பட வைப்பார்கள். எனினும் கணவனை மட்டும் சார்ந்து, உறவு முறையில் முரண் அமையக்கூடும். அந்நிலை வழக்கில் பெருவழக்குப் பெறாது. இந்நிலை சார்ந்த எதார்த்தத்தை சிவசங்கரி தம் நாவல்களில் எதிரொலிக்கச் செய்கிறார்.

கணவன்–மனைவியரிடையே அமையும் சிக்கல்களைக் குறைவாக சிவசங்கரி சித்தரித்துள்ளார். 'ஆயுள் தண்டனை' நாவலில் வரும் 'பரத்' என்கிற கணவன் பாத்திரத்தின் செயல்பாடுகளை எடுத்துக்காட்டு விளக்கத்திற்காகக் காணலாம்.

பரத் செல்வந்தர் வீட்டுப் பையன். அலுவலகத்தில் உதவியாளராகப் பணிபுரியும் மோகனாவைத் திருமணம் செய்ய விரும்புகிறான். அவள் குடும்பச் சூழல் காரணமாக முற்கால வாழ்க்கையில் விலைமகளாக இருந்தவள். தன் வாழ்வின் முன்பகுதியை அவர் எடுத்துக் கூறிக் காதலை மறுத்துப் பார்க்கிறாள் 'பரத்' அது தெரிந்தும், அவளைச் சம்மதிக்கச் செய்து திருமணம் செய்து கொள்கிறான்.

மோகனாவின் பழைய கால வாடிக்கையாளர்கள் பரத்தின் நண்பர்களாக இருக்கின்றனர். சந்தேகத்தீயை மனதிற்குள் வளர்த்து மனைவி மோகனாவைக் கொடுமைப்படுத்துகிறான். குடி வெறியில் மனைவி மோகனாவைக் கண்டபடி பேசுகிறான்.

> “நா குடிவெறியிலே நடந்துக்கல ... மோகனா ... உனக்குத்தான் கிரி கிஸ் பண்ணிய பின்பு நான் பண்ணறது பிடிக்கலை”[19]

என்று குத்திக் காட்டுகிறான். தன் நண்பன் கிரியையும் மனைவி மோகனாவைச் சந்தேகக் கண்ணோடு பார்க்கிறாள்.

அவள் சத்தம் போட்டு இரைச்சலாகப் பேசுவதை மனைவி மோகனா தடுத்துப் பார்க்கிறாள் கேட்டு என்ன?

> “சொன்னா கேக்கட்டும் தலைல வைச்சுண்டு கூத்தாடி மாட்டுப் பெண்ணோட யோக்யதை அம்மாவுக்க நன்னா தெரியட்டும். நாயைக் குளிப்பாட்டி நடு வீட்ல வைச்ச கதை உன் விஷயத்துல சரியாயிடுத்து ... அப்புறம் பேச்சு என்ன”[20]

என்று கேட்டுக் கொடுமைப் படுத்துகிறான்.

> “என்னை இவ்வளவு மட்டமானவளா உங்க அடி மனசுல நினைக்கிறப்போ .... நா சொல்றது எதுலயும் உங்களுக்கு நம்பிக்கை வராதப்ப ... என்னைக் கல்யாணம் பண்ணிகிட்டதே பெரிய தப்பு பரத்.
>
> எஸ் .. பெரிய தப்புதான் ... ஆயுசுக்கும் உன்னோட நா வேதனைப் பட்டாகணுமா ... இத்தனை பெரிய தண்டணை வாங்க நா என்ன பாவம் பண்ணினேன் ...”[21]

என்று பரத் அரற்றுகிறான்.

> “உனக்கு அபார்ட் ஆனதை நினைச்சு இந்த நிமிஷம் ரொம்பச் சந்தோஷப் படறேன் ..... மோஹனா ... உங்கம்மா ஹஸ்பெண்டை விட்டுட்டு இன்னொருத்தனோட ஓடி வந்தவ ... ஊரும் உலகமும் அவளைத் தேவடியான்னுதானே சொல்லித்து ... நீ டெல்லி புகழ் கால்கேர்ள் .... கல்யாணமாகி என்னோட வாழறப்பவே உன் தெருநாய்க் குணத்தைக் காட்டிட்டே. இந்த விபச்சார புத்தி உங்காத்துல பரம்பரையா வரதுபோல இருக்கு ... முதல்ல உங்க அம்மா ... அப்புறம் நீ ... ப்ரெக்னென்ஸி தங்கி, அது ஒரு பெண்ணா பிறந்திருந்ததுன்னா ...

ஓ ... காட் ... நிச்சயம் அதுவும் உங்கள மாதிரிதானே இருந்திருக்குமில்லே ... அதே இரத்தம் தானே"[22]

என்று அரற்றுகிறான்.

பரத், மோகனா விலைமகளாக வாழ்ந்தவள் என்று தெரிந்திருந்தும் அவளை திருமணம் செய்த நிலை புதுமை முயற்சியாகும். அவனது மனசாட்சி, அப்பெண் மேல் சந்தேகம் கொள்ளக் காரணமாகிறது. மோகனா சந்தேகத்தையும் கொடுமையினையும் புறக்கணித்து வெளியேறுகிற நிலையில் தன்னம்பிக்கையுடைய பெண்ணாகச் சித்தரிக்கப் பெறுகிறாள்.

## பிற உறவுகள்

சிவசங்கரியின் கூட்டுக்குடும்ப நாவல்வகைகளில் கணவனின் பிற உறவுகளை மையமிட்டு மனைவியின் உறவில் சிக்கல்கள் ஏற்படுவது போன்ற கதைப் போக்குகள் அமைக்கப் பெறவில்லை. கணவனின் சகோதரி சார்ந்த உறவுகள் தாயுடன் சேர்ந்து முரண்படுவது நாவலில் மையப்பொருளாக்கப் பெறவில்லை. கதையின் போக்கில் அச்சகோதரி முரண்படுவது காட்டப் பெறுகிறது.

கூட்டுக்குடும்பத்தில் கணவனின் சகோதரன் அண்ணியுடன் முரண்படுகிற சூழல் சிவசங்கரியின் நாவல்களில் இடம்பெறவில்லை. தாயும், சகோதரனும், அண்ணியைக் கொடுமைப்படுத்தினால், நியாயத்திற்கு குரல் கொடுக்கும் சகோதரனே முன்மாதிரிப் பாத்திரமாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளனர்.

சிவசங்கரிபடைத்துக் காட்டும் கூட்டுக்குடும்ப உறவில் கணவனின் பெற்றோர், கணவனின் சகோதரி மற்றும் சகோதரன் வரையே இடம் பெற்றுள்ளனர். இரத்த உறவுள்ள விரிந்த உறவுகள் கூட்டுக்குடும்ப நாவல்களில் சித்தரிக்கப் பெறவில்லை. இந்நிலைக்குக் காரணம், சிவசங்கரி படைத்துக் காட்டும் கூட்டுக்குடும்ப வகை நகரத்தைக் களமாகக் கொண்டது என்பதும் கருதத்தக்கதாகும்.

குழந்தையை மையமிட்டுக் கூட்டுக்குடும்பத்தில் சிக்கல்களை உருவாகிற நிலையைச் சிவசங்கரி தம் நாவல்களில் வெளிப்படுத்தவில்லை.

## முடிவுரை

கூட்டுக்குடும்ப உறுப்பினர்களிடையே பொதுமை நிலவும். இரத்த உறவுள்ளவர் ஒரு கூரையின் கீழ் கூடி வாழ்வது கூட்டுக்குடும்பத்தின் இயல்பாகும். கூட்டுக்குடும்பத்தில் தந்தைவழிச் சமூக அமைப்பு இருப்பதால் ஆணாதிக்கமே கூடுதலாக இருக்கும். கூட்டுக்குடும்பத்தில் தலைமைப் பொறுப்புப் பெரும்பாலும் மூத்தோர்களிடமே குவிந்திருக்கும். மேலும் பாரம்பரிய மதிப்புகள் (Cultural Vlues) போற்றப்பெறும்.

பாரம்பரிய மதிப்புகளும் அண்மைக்காலச் சமூகப் போக்குகளும் முரணுக்குள்ளாகும் போது சிக்கல்கள் தோன்றுகின்றன. சிவசங்கரி இவ்வகை சிக்கல்களில் சிலவற்றை நாவல்களில் பதிவு செய்துள்ளார்.

சிவசங்கரியின் கூட்டுக்குடும்பத்திற்கான களங்கள் நகரங்களாகும். சென்னைக் களத்தைச் சார்ந்த நாவல்கள் மிகுதியாக உள்ளன. இவரது கூட்டுக்குடும்பம் நாவல்கள் மாறிவரும் சமூக சூழலைப் பிரதிபலித்துக் காட்டும் வகையில் கிராமத்தைக் களமாகக் கொள்ளாமல் நகரத்தையே களமாகக் கொண்டுள்ளமை கருதத்தக்கதாகும்.

சிவசங்கரி சித்தரிக்கும் கூட்டுக்குடும்ப நாவல்களில் கணவன் வழி உறவினர்களே மிகுந்திருக்கின்றனர். ஆணாதிக்கச் சமுதாயத்தில் இவ்வாறு இருக்கும் இயல்பு நிலையை எதார்த்தமாகப் படைத்துக் காட்டுகிறார்.

கூட்டுக்குடும்பத்தில் கணவன் மனைவி இருவரில் மனைவியே மிகுந்த அளவு பாதிக்கப்படுபவள். மாமனார், மாமியார், கணவன் வழி உறவுகள் மற்றும் கணவன் அனைவரையும் மனைவி எதிர்கொள்ள வேண்டிய நிலையில் சிக்கல்கள் உருவாகின்றன.

சிவசங்கரி சித்தரிக்கும் கூட்டுக்குடும்ப நாவல்களில் கணவன் மனைவியைப் புறக்கணிக்க, மாமனார்–மாமியார் அரவணைக்கும் இலட்சியச் சித்தரிப்புக் காட்டப் பெறுகிறது.

மாமனார் மருமகளை மையமிட்ட சிக்கல்களை சிவசங்கரி தம் நாவல்களில் படைத்துக் காட்டவில்லை. படைத்துக்காட்டப் பெறுகிறவர்கள் பெரும்பாலும் மருமகளுக்கு ஆதரவாக உள்ளமை உணரப்பெறுகிறது.

குணவறுமையான மாமியார், கலப்புத் திருமணத்தை எதிர்க்கும் மாமியார், மகனின் முறையற்ற செயலுக்கு ஆதரவு தெரிவிக்கும் மாமியார், இரண்டாம்தார மாமியாரின் உளவியல் பிறழ்வு, கடமையில் உரிமை தர மறுக்கும் மாமியார், மதச் சடங்குகளில் ஆதிக்கம் காட்டும் மாமியார் என்ற நிலையில் பல குணாதிசயமுள்ள மாமியார் பாத்திரங்களைச் சிவசங்கரி படைத்திடும் நிலை குறிப்பிடப் பெற்றுள்ளது. இந்நிலைக்கு நடைமுறை எதார்த்தம் ஒருவகையில் காரணியாகும். மேலும் சிவசங்கரி பெண் எழுத்தாளராக இருப்பதால், பெண்ணின் உணர்வுகளை நன்கு அலசி மாமியார்–மருமகள் முரண்களை கலை உணர்வுகளுடன் நாவலாக்கம் செய்துள்ளார் என மதிப்பிடலாம்.

சிவசங்கரி காட்டும் கூட்டுக்குடும்பத்தில் கணவன்–மனைவியைச் சார்ந்தமையும் சிக்கல்கள் குறைவு. கணவன் மூத்தோர் தலைமைக்குக் கட்டுப்பட்டு இயங்க வேண்டியுள்ளதால் முரண்கள் குறைவு எனக் கருதலாம்.

கூட்டுக்குடும்பத்தில் கணவன் வழி உறவினர்களில் கணவனின் சகோதரி இடம் பெறுகிறாள். இவள் உருவாக்கும் சிக்கல்கள் நாவல்களில் மையப் பொருளாக இல்லை. தன் தாயுடன் இணைந்து அண்ணிக்குத் துன்பம் தருவது கதைப் போக்கில் கூறப் பெறுகிறது. தாய் மற்றும் சகோதரன் அண்ணிக்குச் செய்யும் துன்பங்களைத் தட்டிக் கேட்கும் முன்மாதிரிப் பாத்திரமாக கணவனின் சகோதரர்கள் சித்தரிக்கப் பெறுகிறார்கள்.

பொதுவாகக் கூட்டுக்குடும்பம் ஆணாதிக்கமாக இருந்தாலும் ஆண்களின் அடக்குமுறையில் செறிவான இறுக்கத்தைச் சிவசங்கரி தம் நாவல்களில் காட்டவில்லை. மாமியார்–மகள் உறவுநிலை முரண்களின் சிக்கல்களையும் தீர்வுகளையும் ஆராய்ந்துள்ளார்.

* * * * *

## சான்றாதாரங்கள்


1. D. Aileen Ross,(1973), The Hindu Family in its Urban Setting, P,9.
2. சீ. பக்தவசல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப,350.
3. Dr. ஜெயராணி ராசதுரை, பெண்கள் படைப்பில் பெண்கள், ப,26.
4. மேலது, பக்,26-27.
5. விஜயலட்சுமி ஹரி.,ராஜம் கிருஷ்ணன் புதினங்கள் பெண் மாந்தர், ப,114.
6. சிவசங்கரி, ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால், ப,168.
7. மேலது, ப,185.
8. சிவசங்கரி, மெள்ள மெள்ள, பக்,149–150.
9. சிவசங்கரி, ஆயிரம் காலத்துப் பயிர், ப,133.
10. மேலது, ப,136.
11. மேலது, ப,155.
12. சிவசங்கரி, ஒற்றைப்பறவை, ப,48.
13. மேலது, பக்,153–154.
14. சிவசங்கரி, இனித்தொடராது, பக்,9–10.
15. மேலது, ப,10.
16. மேலது, ப,12.
17. சிவசங்கரி, இவர்களும் அவர்களும், ப,87.

18. சிவசங்கரி, வேரில்லாத மரங்கள், ப,267.

19. சிவசங்கரி, ஆயுள் தண்டனை, ப,196.

20. மேலது, ப,197.

21. மேலது, பக்,197–198.

22. மேலது, ப,199.

ଔଋ

# 7. பெண்ணியச் சிந்தனைகள்

பெண்ணியம் (Feminism) என்ற சொல் அண்மைக்காலமாக மிகுதியாகப் பேசப்பெறும் சொல்லாகும். சமூகத்தில் ஆண்-பெண் இருபாலரும் சிறப்பிடம் பெறுகின்றனர். இருவரில் ஒருவர் மட்டும் ஆதிக்க நிலையில் இயங்குகிறபோது சரிநிகர்ச் சூழல் சிதைகிறது. சமூகத்தில் ஆணாதிக்க நிலை நிலவி வரும் முறையில் பெண்கள் பல நிலைகளில் அடக்கப் பெறுகின்றனர். இந்நிலையிலிருந்து மீட்சி பெறுவதற்கான விழிப்புணர்ச்சி வளர்ந்து வருகிறது. அவ்விழிப்புணர்ச்சி 'பெண்ணியச் சிந்தனை' எனக் கூறலாம். சிவசங்கரி தம் நாவல்களில் பெண்களின் விழிப்புணர்ச்சிக்கும் மேன்மைக்கும் சில சிந்தனைகளை முன்வைக்கிறார். அப்பெண்ணியச் சிந்தனைகளை மதிப்பிடுவதாக இவ்வியல் அமைகிறது.

## பெண்ணியம் விளக்கம்

'Feminism' என்ற ஆங்கிலச் சொல் பெண்ணியத்தைக் குறிக்கும். இச்சொல் 'Femina' என்ற இலத்தீன் சொல்லிலிருந்து மருவி வந்ததாகும். 'Femina' என்றால் பெண்ணின் குணாதியங்களைக் கொண்டுள்ள என்பது பொருளாகும். இச்சொல் முதலில் பெண்களின் பாலியல் குணங்களைக் குறிக்கப் பயன்பட்டு, அதன் பின் பெண்களின் உரிமை பேசும் சொல்லாகப் பயன்பட்டது. 1894-ஆம் ஆண்டு வெளிவந்த ஆக்ஸ்போர்ட் ஆங்கில அகராதியிலேயே இச்சொல் எடுத்தாளப் பெற்றுள்ள நிலை கருத்திற்குரியதாகும்.

> "உலகத்தோடு பெண் எத்தகைய தொடர்பு கெண்டிருக்கிறாள், எவ்வாறு அவள் அடக்குமுறைக்கு ஆளாகிறாள், ஆணுக்கு ஒரு நீதி, பெண்ணுக்கு ஒரு நீதி என்ற நிலை நிலவுதல் போன்ற பல செய்திகளை நன்கு அறிவதும் அவ்வறிவினை மேற்கூறிய நிலையை மாற்றியமைக்கத் தக்கச் சக்தியாகப் பயன்படுத்துதலும் எனலாம்"[1])

என்று குறிப்பிடுவர். சக்தியாகப் பெண்களின் நிலையை அறிதலும், அவ்வறிதலை ஆக்க சக்தியாக மாற்றிப் பெண்களின் நிலையை உயர்த்தலும் என்கிற சிந்தனைகள் வலியுறுத்தப் பெறுவதைக் காணலாம்.

"பெண்ணியம் என்பது பெண்களின் எல்லாச் சிக்கல்களையும் புரிந்து கொண்டு, அவற்றை நீக்க முயல்வதாகும். அதனால் உலகளவில் அரசியல், பண்பாடு, பொருளாதாரம், ஆன்மீகம் என்ற துறைகளில் பெருத்த மாற்றம் ஏற்படுத்த முடியும் என்கிறார் சார்லட் பன்ச் (Charlotte Bunch)"[2]

மேலும் அவர் குறிப்பிடுகையில்,

"பெண்ணியம் என்பது பெண்களுக்கான உரிமைகளைப் பெற்றுத் தருவது மட்டுமல்ல, சமூகத்தையே மாற்றியமைக்க முயல்வதாகும்"[3]

என்றும் குறிப்பிடுகிறார்.

பெண் சமூகத்தாரிடம் நிலவும் சிக்கல்களை அறிந்து அவற்றைக் களைவதன் மூலம் எல்லாத்துறைகளிலும் பெரும் மாற்றத்தைத் தோற்றுவிக்க முடியும். குறிப்பாகச் சமூகத்தையே மாற்றியமைத்தல் (Transformational Politics of the Society) கூடும் என்பதில் உறுதியாக இருக்கிறார்.

## பெண்ணியம் ஆடவர்க்கு எதிரானதா?

பெண்களுக்கான உரிமைகளுக்குப் போராடி எல்லாவித அடிமைத் தளையிலிருந்தும் மீட்சியடைவது தான் பெண்ணியம் ஆகும். இருப்பினும், பெண்ணியம் என்றால் அஃது ஆண்களை எதிர்ப்பது என்கிற தவறான எண்ணமும் நிலவிவருகிறது. (ஆண் சமூகத்திற்கு இணையாகப் பெண் சமூகத்தை உருவாக்க வேண்டும் என்பத பெண்ணியச் சிந்தனையாகும்.)

"பெண்ணியம் ஒரு சமூகக் கருத்தாக்கம். இது குறுகிய காலத்திற்குள் சமூக அறிவியலின் அனைத்துத் தத்துவங்களையும் சித்தாந்தங்களையும் மறுபரிசீலனைக் குட்படுத்தத் தூண்டுகின்ற எழுச்சி மிக்க ஆற்றலாகப் பரிணமித்து வருகிறது"[4]

என்கிற சிந்தனை கருத்திற்குரியதாகும்.

## பெண்ணியத்தின் வகைகள்

பெண்களின் வாழ்க்கைச் சூழலுக்கும் அனுபவத்திற்கும் ஏற்ப பெண்ணிய இயக்கத்தில் மூவித வகைப்பாடு அமையும் என்று குறிப்பிடுவர்[5]. அவையாவன :

- தாரளப் பெண்ணியம் (Liberal Feminism)
- சமதர்மப் பெண்ணியம் (Socialist Feminism)
- தீவிரவாதப் பெண்ணியம் (Redieal Feminism)

இவைகளைக் குறித்து அறிமுக விளக்கங்களைப் பின்வரும் பகுதிகளில் காணலாம்.

மேற்கத்திய நாடுகளில் தாராளப் பெண்ணிய வாதம் பரவலாக நிலவுகிறது. தனிநபர் விடுதலை, அரசியல் செல்வாக்கு, சமவாய்ப்புப் போன்ற கோரிக்கைகளை முன்னிறுத்தி, மக்களாட்சிக்கு ஏற்ற முறையில் தாராளப் பெண்ணியத்தை இயங்க வைத்து வெற்றியும் பெற்றிருக்கிறது.

'சமதர்மப் பெண்ணியம்' முதலாளித்துவத்தின் வகுப்புவாத அடக்கு முறைக்கு முரணாக இயங்கி, அதற்கேற்பத் தன்னுடைய கொள்கைகளை வடிவமைத்துக் கொண்டது.

'தீவிரவாதப் பெண்ணியத்தில்' ஆண்களே முக்கிய எதிரிகளாகக் கருதப் பெற்றனர். இவர்கள் ஆண்களால் தாங்கள் அடக்கப் பெற்றிருக்கிறோம் என்பதை உணர்ந்து உரிமை பெற நினைப்பவர்கள்.

'பெண்ணியம்' என்று பொதுவாகக் குறிப்பிட்டாலும், அது இயங்கும் விதத்திலும், வடிவமைப்புப்பெற்ற விதத்திலும், முரண்படுகிற நிலையிலும் வேறுபட்டு நிற்கின்றன. இவ்வேறுபாடுகளை அடியொற்றியே பெண்ணிய வகைகள் வகைப்படுத்தப் பெறுகின்றன. எல்லா நாடுகளிலும் இப்பெண்ணிய நிலைகள் ஒன்றுபோல இருக்கும் என்று கூறுவதற்கில்லை.

## இந்தியப் பெண்ணியம்

இந்தியப் பெண்ணியத்தை அறிவதற்குப் பாரம்பரியமாகப் பெண்களின்நிலை எங்ஙனம் இருந்தது, என்பது முதலில் அறியப் பெறல் வேண்டும். இந்தியச்சமுதாய அமைப்பில் தாய்வழிச் சமூகம் தந்தை வழிச் சமூகம் என்கிற இருவகைகள் இருந்ததை வரலாற்றாய்வாளர்கள் கூறுவார்கள்.

வேதகாலச் சமயங்களைப் பொது நோக்காக நோக்கும் போது, ஆண் கடவுளர்களே மிகுந்திருக்கின்றனர். இந்நிலை ஆணாதிக்கச் சமுதாயத்தின் அடித்தளத்தைக் காட்டுகின்றன. தாய்வழிச் சமூக அமைப்பு நிலவியபோது பெண்கள் முதன்மை பெற்றிருந்தனர். திராவிடச் சமயத்தில் பெண் தெய்வங்கள் மிகுந்திருக்கிற நிலை இங்குக் கருத்திற்குரியதாகும். ஆரியச் சமயத்துடன் குழுச்சமயங்கள் பல இணைந்து இந்து சமயம், தேசியச் சமயமாக (National Religion) உருவெடுத்தது.

இந்து சமயம் வளம் பெற்றபோது ஆணாதிக்கச்சமுதாயத்தைச் சார்ந்த கடவுளர்களும், பெண்ணாதிக்கச் சமுதாயத்தைச் சார்ந்த கடவுளர்களும் இடம் பெற்றிருந்தனர். எனினும் பழக்கவழக்கங்கள் மற்றும் சடங்குகள் என்னும் போர்வையில் பெண்கள் அடக்கப் பெற்றிருந்த நிலை மறுப்பதற்கில்லை.

> "பழஞ் சமயங்களான சமணமும் பௌத்தமும் பெண் எதிர்ப்புக் கொள்கையை வலியுறுத்தின. இம்மதங்கள் பெண்ணை ஒதுக்கித்தான் ஆண் துறவு பூண வேண்டும் என்று கூறின"[6].

இந்தியச் சமுதாயத்தில் சமயம் ஆன்மாவாக விளங்குகிறது. காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரி வரை சமயம் சார்ந்த பண்பாடே இந்தியாவில் நிலவுகிறது. பிறப்பிலிருந்து இறப்புகள் வரையிலான சடங்குகளிலும் பொதுமை நிலையும் நிலவுகிறது. இவைகள் பெண்கள் சமூகத்திற்கு மதிப்புத் தருவது போல இருப்பினும் பூரண அதிகாரம் தந்திருப்பதாகக் கருத இயலாது.

ஆங்கிலேயர் வரவிற்குப் பின் இந்தியாவில் அரசியலில் மட்டுமல்லாமல் பல துறைகளிலும்மாற்றங்களும், சமூகச் சீர்திருத்தங்களும் தோன்றின. அரசியலில் பங்கேற்கும் நிலை உருவாக்கப் பெற்றமையைக்

குறிப்பிடலாம். இராஜாராம் மோகன் ராய் போன்ற சமூகச் சீர்திருத்த வாதிகள் பெண்கள் சமூகத்தின் உரிமைக்குப் பாடுபட்டனர்.

> "பெண்கள் பின்தங்கிய நிலையில் வாழும் எந்த நாடும் முன்னேறாது என்று ஜவஹர்லால் நேரு கூறியுள்ளமை ஈண்டு கருதத்தக்கதாகும்"[7].

ஐரோப்பியர் வருகையால் ஆங்கிலக் கல்வி இந்தியர்க்குக் கிடைக்க ஏதுவாயிற்று. அக்கல்வியைச் சாளரமாகக் கொண்டு மேலை நாட்டு மாற்றங்களையும் விழிப்புணர்வுகளையும் உணர முடிந்தது. இவ்வகைச் சூழலில் பல மரபுகள் ஆட்டங்கண்டன, மாற்றங்கண்டன. அம்மாற்ற நிலைகளில் 'பெண்கள் சமூகம்' பெற்ற விழிப்புணர்வு நிலையும் குறிக்கத் தகுந்தது. பெண்கள், பெண்கள் சமூகத்திற்காக விழிப்புணர்வு கொள்வது ஒரு வகை. ஆண்களும் பெண்கள் சமுதாயத்தின் மேன்மைக்குக் குரல்கொடுத்தனர். மேலை நாடுகளில் 17–ஆம் நூற்றாண்டில் பெண்ணியச் சிந்தனைகள் தலை தூக்கத் தொடங்கின. இந்தியாவிற்குப் பெண்ணியச் சிந்தனை சற்றுத் தாமதமாகவே வந்தது.

அத்தாமதத்திற்குப் பல காரணங்கள் உண்டு. மேலைநாட்டுப் பெண்ணியம் இந்தியப் பெண்ணியத்திலிருந்து வேறுபட்டதாகும். எனவே, இந்தியப் பெண்ணியம் தனக்கெனத் தனித்த சில இயல்புகளைப் பெற்றிருப்பதை உணரலாம்.

இந்தியப் பெண்கள் தங்கள் தனித் தன்மையையும் சிறப்பையும் முழு அளவில் உணர வேண்டும். இந்தியப் பெண்ணியம் மேலை நாட்டுப் பெண்ணியத்தைப் போன்று ஆணாதிக்கச் சமயத்தை எதிர்த்தோ பெண்ணடிமைத்தனத்தை மறுத்தோ பேசவில்லை. மனைவி, தாய் என்ற பங்கு நிலைகளை ஆழமாக வற்புறுத்தி விழிப்புணர்வு ஏற்படுத்தி வந்துள்ளனர். இந்த விழிப்புணர்வு ஏற்படுத்தும் செயலில் ஒரு சில ஆண் சீர்திருத்தவாதிகளும் தலைமையிடம் வகித்தனர்.

இந்தியப் பெண்ணியக் கோட்பாட்டின்படி, பெண்ணியம் என்பது ஆணிற்கு எதிரான இயக்கமன்று. பெண் விடுதலை என்ற பெயரில் வாழ்க்கை வரம்புகளை மீறுவதும், திருமண உறவுகளை நிராகரிப்பதும் தெய்வீகத் தன்மையை மறுப்பதும் இதன் நோக்கமன்று.

பெண் என்பவள் போகப்பொருள் மட்டுமல்லள். தனித்துவம் வாய்ந்தவள், சில அர்த்தமற்ற அடக்குமுறை, ஒடுக்கமுறைச் சக்திகளால் பெண்களின் மதிப்புகள் ஆணாதிக்கச் சமுதாயத்தில் நசுக்கப்படும் பொழுது, அதற்கு எதிராகக் குரல் கொடுத்து, பெண்ணின் தனித்துவத்தை ஆணாதிக்கச் சமுதாயத்திற்கு உணரவைத்தல் வேண்டும். பெண்களின் மதிப்புகள் பற்றிய விழிப்புணர்வை வளரச் செய்தல் வேண்டும். இவைகளே பெண்ணியத்தின் நோக்கங்களாகும்.

## தமிழ்ப் பெண்ணியம்

உரிமை கொடுத்த கிழவோன் பாங்கில்
பெருமையின் திரியா அன்பின் கண்ணும்,

என்ற நூற்பாவில் தொல்காப்பியம் (1093) பெண்ணுரிமையைக் குறிப்பிடுகின்றது.

சங்கப் புலவர்களில் பெயர் சிறக்க அமைந்த புலவர்கள் ஔவையாரும் ஒருவர்.

> "நிலத்தில் யார்க்கும் அஞ்சாத ஞானம் என்று புரட்சிப் பெண்ணுக்குப் பாரதியார் வகுத்த பண்புகள் அந்தக் காலத்திலேயே ஔவையாரிடம் அமைந்திருந்தது சிறப்பிற்குரியது"[8].

பிற்காலத்தில் ஆட்சி மாற்றம், பிற சமயங்களின் வரவு, போன்ற பல காரணங்களால் பெண்களின் நிலை வீழ்ச்சி அடைந்தது. இதன் விளைவு பெண்கள் கல்வி மறுக்கப்பெற்று, வீட்டிலே அடைத்து வைக்கப்பட்டனர். இத்துடனன்றிக் கற்பு நிலையிலும், வற்புறுத்தி பெண்ணின் விருப்பம் அறியாமல் மணமுடிக்கும் நிலையும் உருவாகியது. இத்துடனன்றி தந்தைவழி, ஆணாதிக்கமும் வளர்வதாயிற்று. இது பெண்ணின்சுதந்திரம், பெண் கல்வி, பெண் வேலைக்குச் செல்லுதல், போன்ற நிலைகளிலும் உரிமை மறுக்கப் பெற்றது. குடும்ப அமைப்புகளில் அடிமை நிலை, சொத்துக்களில் உரிமையற்ற நிலையும் ஏற்பட்டது. இந்நிலையை மாற்றுவதற்குச் சமுதாயச் சிந்தனையாளர்களும், இலக்கியப் படைப்பாளிகளும், சில இயக்கங்களும் முயற்சி செய்து வந்தமை கருதத்தக்கதாகும்.

பெண்ணியச் சிந்தனைகள் அண்மைக்கால இலக்கியத்தில் செல்வாக்குப் பெற்றிருத்தலை உணர முடிகிறது. இவைகளினால் விழிப்புணர்ச்சி உண்டாக்கவும், பிரச்சினைகளுக்குத் தீர்வினை எடுத்துரைக்கவும் உதவுகிறது. காலங்காலமாக நம்முடைய சமூக மரபில் பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்களைக் குடும்ப, சமூக நிலைகள் போன்ற நிலையிலிருந்து படைப்பாளர்கள் வெளிப்படுத்தியுள்ளனர். சில பிரச்சினைகள் தொடர்ந்து காணப்படுவதும், சில மாறியும்வேறுபட்டும், புதிய பரிணாமங்களைப் பெற்றும் வந்துள்ளன.

> "ஆழமான சமூகப் பிரச்சினைகளை மையமிட்டு எழுதப்படும் புனை கதைகள் சமூகவியலாருக்கும் சமூக வரலாற்று ஆசிரியர்களுக்கும் உதவும் சமூக ஆவணங்களாக உள்ளன. தமிழ்ச் சமூக வாழ்க்கையை அதன் சகலவிதமான போக்குகளுடனும் காட்டுவதால் புனை கதைகள் ஆவணங்களாகின்றன. வெறும் பொழுது போக்கு எழுத்துக்கள் வணிக இதழ்களில் பக்க நிரப்புகளாக வரும் அச்சுருவங்கள் இத்தகுதியைப் பெறுவதில்லை"[9].

இந்நிலையில் இலக்கியங்களிலும் பெண்ணியக் கொள்கைகளைத் தம் படைப்பில் படைக்கத் தலைப்பட்டனர்.

எந்த ஓர் இலக்கியமும் சமுதாயத்தின் மாற்றங்களைத் தன்னுள் காட்டாமல் இருக்க முடியாது. ஏனென்றால், இவை நடப்புச் சமூகத்தின் சமூக ஆவணங்களாகின்றன. அந்த வகையில் நாவலாசிரியர்கள் தத்தம் போக்கில் பெண்ணியச் சிந்தனைகளை வலியுறுத்தி, தம் படைப்புகளைப் படைத்து வருகின்றனர்.

## பெண் படைப்பாளர் பார்வையில் பெண்ணியம்

சமூக நிகழ்வுகள் இலக்கியங்களில் பதிவாகின்றன. பெண் சமூகம் சார்ந்த சிக்கல்களை ஆண் படைப்பாளர்கள் இலக்கியத்தில் வெளிப்படுத்து கின்றனர். எனினும் பெண் படைப்பாளர்கள் பெண்களாக இருப்பதாலும், பெண் உணர்வுகளையும் சிக்கல்களையும் வேகமாகப் புரிந்து கொள்வார்கள் என்கிற நிலை கருத்திற்குரியதாகும். தாங்கள் புரிந்து கொண்டதை இலக்கியங்களில் புலப்படுத்துகிற நிலை இயல்பானதாகும். அண்மைக்கால இலக்கிய வகைகளில் 'புரிதலை' வெளிப்படுத்துவதற்கு நாவல் நல்ல

ஊடகமாக விளங்குகிறது. ஆண் படைப்பாளர்களை விடப் பெண் படைப்பாளர்கள் வரவால் மாற்றம் நிகழ்ந்ததாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

> "பெண் எழுத்தாளர்களின் எழுத்தின் போக்கு பெண்களுடைய பிரச்சினைகளைப் பற்றியதாகவே அமைகின்றது. திறனாய்வு, செய்யுள், புதினம், சுயசரிதை ஆகிய அனைத்து இலக்கிய வகைகளிலும் இந்தப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் முயற்சியை அவர்கள் மேற்கொள்ளுகின்றனர். மீண்டும் மீண்டும் இதே உணர்வுதான் அவர்கள் படைப்புக்களில் தலை தூக்கி நிற்கின்றது"[10]

என்ற பெட்ரீஷியா மேயர் ஸ்பாக்ஸின் கருத்து உலகளாவிய பொருத்த முடையது என்று ஆய்வறிஞர்கள் காட்டுவர்.

பெண் படைப்பாளரின் படைப்பாக்கங்களில் பெண் இனத்திற்காக வாதாடுகிற நிலையில் வன்மையான குரல் எதிரொலிக்கும் 'மிழல் மார்ச்', 'ஜேன் அயர்' முதலிய புதினங்களில்,

> "பாத்திரப் படைப்புக்களுக்கு அப்பாற்பட்டு தன்னுடைய இனம் நடத்தப்படுகின்ற முறையில் வெறுப்பும், அவர்களின் உரிமைகளுக்காக இறைஞ்சுகின்ற குரலும் கொண்ட ஒரு பெண்ணின் இருப்பை உணர முடிகின்றது. ஆடவர் படைப்புக்களிலிருந்து பெண்களின் படைப்பிலக்கியத்தை வேறுபடுத்திக் காட்டும்கூறு இதுவே"[11]

என்று பெண்கள் படைப்பின் சில தனிக் கூறுகளை வர்ஜீனியா வுல்ஃப் எடுத்துக்காட்டுவதை அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

தமிழ்ப் படைப்புலகத்தில் பெண் படைப்பாளர்கள் அண்மைக் காலங்களில் செவ்விய முறைகளில் இயங்கி வருகிறார்கள். அவர்களின் படைப்புக்கள் தமிழ்ச் சமூகத்திற்கு நல்லதொரு பாதிப்புக்களை வழங்கி வருகின்றன. "பெண் சமூகத்தில் அப்பாதிப்புகளால் பெற்ற மாற்றத்தை ராஜம் கிருஷ்ணன் கூர்ந்து நோக்கிக் கூறும் போது,

"இருண்ட காலம் கரைய, விடி வெள்ளி முளைத்திருக்கிறது. இந்த வெளிச்சத்தில் பெண் தனக்கிழைக்கப் பட்டிருக்கும் அநீதிகளை உணரத் தொடங்கியிருக்கிறாள். தனக்குரிய மதிப்பைக் கோருகிறாள். அடுக்களைக்கும் படுக்கையறைக்குமாக வார்க்கப்படும் அச்சுக்களில் புகுந்து கொள்ள மறுக்கிறாள்"[12]

என்று குறிப்பிடுவது இங்குக்கருதத் தக்கதாகும். பெண் எழுத்தாளராக விளங்கும் ராஜம் கிருஷ்ணன் சமதர்மச் சமுதாயத்தை விரும்புபவர். பெண்கள் சமூகத்திற்காகக் குரல் கொடுக்கிற புரட்சி எழுத்துக்களுக்குச் சொந்தக்காரர்.

பெண் எழுத்தாளர்களில் நகர்ப்புற சமுதாயம் சார்ந்த பெண் பாத்திர உருவாக்கங்களில் அனைவரின் கவனத்தையும் கவர்ந்தவர் வாஸந்தி. வாஸந்தியின் நாவல்களில்,

"பெண் விடுதலை என்பது தனி மனித சாதனையால் அடையக் கூடியது என்ற சிந்தனை செல்வாக்குப் பெற்றுள்ளது. அந்த அடிப்படையில் பெண் விடுதலை பெற, தளை நீக்கி மறுமணம் செய்து கொள்ளுதல் தான் ஒரே வழி என்று நாவல்களில் காட்டப்பட்டுள்ளது. தளை நீக்கம் பெறுவதற்கான தூண்டுதலும் ஓர் ஆணால் நிகழ்வதாக இவரது நாவல்கள் சித்தரித்துள்ளன. பெண் விடுதலையும் ஒரு பெண்ணால் ஓர் ஆணைச் சார்ந்தேதான் பெற முடியும் என்ற படைப்பாளரின் கருத்தையும் நாவல்கள் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது"[13]

என்று மதிப்பீடு செய்கின்றனர்.

சிவசங்கரி பெண் படைப்பாளராக இருந்தாலும் தனித்த பெண்ணியச் சிந்தனை உடையவர் எனத் தெரிகிறது.

"இயற்கை நமக்குக் கொடுத்திருக்கிற சிலதை முரண்படாமல் ஒத்துக்கிட்டு சில உரிமைகளுக்காகப் போராடுவதுதான் பழமைவாதப் பெண்ணிலை வாதம் (Conservative Feminism)"[14]

என்று சிவசங்கரி குறிப்பிடுவது மிதவாதப் பெண்ணிய வகைக்குள் அடங்கும்.

பெண் விடுதலை பற்றிய வினாவிற்கு, சிவசங்கரி,

> "சமுதாயத்தினரால் என்றைக்குப் பெண் மனப்பூர்வமாக மதிக்கப்படுகிறாளோ அது தான் உண்மையான வளர்ச்சி, பெண் விடுதலை. ஆனால் ஒரு பெண் அடுத்தவர்களின் மதிப்பையும் மரியாதையையும் பெற வேண்டுமென்றால் முதலில் தன்னைத்தானே மதிக்க, அவளுக்குக் கற்றுத்தர வேண்டும்"[15]

என்று குறிப்பிடுகிற சிந்தனை கருதத் தக்கதாகும். சமூகத்தினரால் 'பெண்' என்பதாலேயே அடக்கப்பட்டு வந்திருக்கிற ஆணாதிக்கச் சமூகத்தின் மனோ நிலை மாற வேண்டுமென்பதில் சிவசங்கரி உறுதிபட இருக்கிறார்.

> "இயற்கையின் படைப்பின்படி ஆணும் பெண்ணும் வெவ்வேறு இயல்புடையவர்களே. இதை ஏற்று எனக்கென்று குடும்பத்திலும் சமுதாயத்திலும் உள்ள பொறுப்புகளை உதறித் தள்ளாமல், அதே சமயம் நான் நானாக இருக்க அவசியமான தனித்தன்மையைக் காப்பாற்றிக் கொண்டு எனக்குரிய இடம் அந்தஸ்தைப் பெறுவேன் என்பதே பழமை எண்ணங்களில் நம்பிக்கை கொண்ட பெண்ணுரிமையின் சித்தாந்தம்"[16]

என்று சிவசங்கரி கருதுகிறார். குடும்பத்தில் பெண்ணியம் என்கிற பெயரில் குடும்பத்தையும் பொறுப்புக்களையும் உதறிவிட்டு வருதல் கூடாது. அதே சமயத்தில் இயற்கையில் ஆணிற்கும் பெண்ணிற்குமிடையில் உடல் ரீதியாக இருக்கும் வேறுபாட்டின் இயல்புகளையும் கருத்தில் கொள்ள வேண்டும். இத்தளத்தில் இருந்தபடியே ஒரு பெண் தன் சுயமரியாதையைப் பெற வேண்டும் என்று சிவசங்கரி விரும்புகிறார்.

> "தகுதியிலும் அறிவிலும் சமமாக இருப்பினும், பிறப்பினால் ஆணும் பெண்ணும் மாறுபட்டவர்களே. இதை மறந்துவிட்டு இயற்கையுடன் முரண்டுவது ஏன்? ஆண்கள் நமக்கு எதிரிகள் இல்லை. ஜனத்தொகையில் சரிபாதி இருக்கும் நாம், நமக்குரிய அந்தஸ்தை, மரியாதையைப் பெறவேண்டும் என்ற இலக்கிலிருந்து வக்கிரப்படுவது யாருக்கு எந்த ஆதாயத்தைத் தரும்?"[17]

சமூகத்தில் மாற்றம் என்பது இயல்பானது. அதற்காகப் பழமையான மதிப்புக்களையே போற்றிக் கொண்டிருந்தால் மாற்றத்தைச் சமாளிக்க இயலாது. சிவசங்கரி தம் நாவல்களில் மாற்றம் பற்றித் தெளிவாகச் சிந்திக்கிறார்.

> "தலைமுறைக்குத் தலைமுறை ஒவ்வொரு குடும்பத்துலேயும் பழக்க வழக்கங்கள் மாறுபடும். இது இயற்கையா நடக்கிற சமாச்சாரம். "ஐயோ – இவா மாறிட்டாளேனு புலம்பறது கூடாது. ஏன்னா, மாறுதல் வந்தாத்தான் வளர்ச்சி இருக்கும், மாறாம இருக்கிறவள் தேங்கின குட்டைக்குச் சமம். அது கடைசியில பாசி புடிச்சு, கொசு உற்பத்தியாகி யாருக்கும் உபயோகம் இல்லாம ஆயிடறது போல, மாற மாட்டேன்னு பிடிவாதமா இருக்கிறவாளும் வீணாப் போயிடுவா. மாற்றம் நல்ல முறையில் வரணும். அது தான் வளர்ச்சி, அப்பத்தான் நாம்பளும் நன்னா இருந்து நம்பள சுத்தி இருக்கிறவாளும் சுபிட்சமா இருக்க முடியும்"[18]

பார்வதி என்ற பாத்திரக் கூற்றின் வழி சிவசங்கரி தெரிவிக்கிறார்.

சிவசங்கரி மிதவாதப் பெண்ணியச் சிந்தனை உடையவராக இருந்தாலும், சமூக மாற்றத்திற்குத் தக வாழ வேண்டும். அந்நிலையோடுதான் வளர்ச்சி தொடர்பு பெற்று வளர்கிறது எனக் கூறுவது கருதத் தக்கதாகும்.

தலைசிறந்த பெண் படைப்பாளர்களில் ஒருவரான, சிவசங்கரியினுடைய நாவல்களில் பெண்ணியச் சிந்தனைகளை இனி வரும் பகுதியில் விளக்கமாகக் காணலாம்.

## பெண் கல்வி

தமிழ்ச் சமூகத்தில் பெண்களுக்குக் கல்வி மறுக்கப் பெற்றது. இந்நிலையிலிருந்து மீட்சி பெற பாரதியார்,

"விண்ணுக்குப் பறப்பது போல் கதைகள் சொல்வீர்
விடுதலையென்பீர் கருணை வெள்ள மென்பீர்
பெண்ணுக்கு விடுதலைநீ ரில்லை யென்றால்
பின்னிந்த உலகினிலே வாழ்க்கையில்லை"[19]

என்று குரல் கொடுக்கிறார். பாரதிக்குப் பின் வந்த பாரதிதாசனும் பெண் சமூக மேன்மைக்கு வேகம் கொடுத்தார்.

"பெண்ணடிமைச் சமுதாயத்தில் பெண் கல்வி மறுக்கப் பட்டது, பெண்ணறிவென்பது பெரும் பேதைமைத்து என்று சொல்லியே பெண்மையின் நுண்ணறிவு பாழடிக்கப்பட்டது. அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு என்று சிறுமதியாளர்கள் வினவினர்"[20]

எனக் குறிப்பிடுவர்.

பாரதிதாசன் பெண்ணடிமை நிலையை வீரத்தாயில் காங்கேயன் பாத்திரத்தின் வழி,

"ஆடை அணிகலன் ஆசைக்கு வாசமலர்
தேடுவதும் ஆடவர்க்குச் சேவித் திருப்பதுவும்
அஞ்சுவதும் நாணுவதும் ஆமையைப் போல் வருவதும்
கொஞ்சுவது மாகக்கிடக்கும் மகளிர் குலம்
மானிடர் கூட்டத்தில் வலியற்ற பகுதி"[21]

என்று குறிப்பது கருதத் தக்கதாகும்.

பெண் அடிமைப் படுத்தப் பெற்றதில் அவர்களுக்குக் கல்வி மறுக்கப்பெற்றுதும் ஒன்றாகும்.

உளரென்னும் மாத்திரையர்அல்லால் பயவாக்
களரனையர் கல்லா தவர் (குறள் 406)

என்று வள்ளுவர் கல்லாதவரைக் களர் நிலம் என்று குறிப்பிடுவார்.

எல்லா நலமும் ஈந்திடும் கல்வி
இல்லா வீட்டை இருண்டவீ டென்க[22]

என்பார் பாரதியார்.

பெண் படைப்பாளரான சிவசங்கரியும் பெண்களுக்குக் கல்வி வேண்டும் என்கிற பெண்ணிய சிந்தனை உடையவராக திகழ்கிறார். சிவசங்கரி படைத்துக் காட்டும் பெண் பாத்திரங்கள் பெரும்பாலும் பட்ட வகுப்புப் படித்தவர்களாக இருப்பார்கள். படித்த அவர்களிடம் சிக்கலை எதிர் கொள்ளும் பண்புருவாக்கத்தைப் பல நாவல்களில் அவர்கள் சித்தரித்துள்ளார்கள். 'நான் நானாக' நாவலில் வரும் பாரதியின் அப்பா மகளிடம் கூறுகிற வரிகள் இங்குக் கருதத் தக்கன.

> "காலம் இருக்குற இருப்புல பெண்களுக்கு அகடமிக் குவாலிபிகேஷன் அவசியம்னு நான்நம்பறேன். அத முதல்ல முடிச்சுடு ..... அப்புறமா மத்தத பார்த்துக்கலாம். தன்னம்பிக்கையோட வாழ்க்கையிலே எதிர்ப்படற பிரச்சினைகளைச் சமாளிக்கப் படிப்பு நல்ல அஸ்திவாரமா உதவும். அதனால காலேஜ்ல சேர்ந்து டிகிரி வாங்கறது என்னைப் பொறுத்த வரை முக்கியம்"[23]

என்கிற நிலையில் ஆரம்பமாகிறது. சமுதாயத்தில் இருக்கிற தந்தை, தன் பெண்ணின் இன்றைய வாழ்விற்குக் கல்விதான் முக்கியத் தேவை என்று வாதிடுவது குறிக்கத் தக்கதாகும்.

> "தனி நபர் – குடும்பம் – சமூகம் – நாடு – தனி நபர் இந்த வட்டத்தில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிறது. அதனால் தான் தனி நபர் ஒவ்வொருவரும் தத்தம் பலம், பலவீனங்களை அலச வேண்டிய கட்டாயம் உள்ளது. அவர் தன்னைச் சுற்றி உருவாக்கிக் கொள்ளும் உறவுகளின் அவசியம் மனதைக் காற்றோட்டமாக வைத்துக் கொள்வது, நிர்ப்பந்தம் இவைகளை எல்லாம் ஆராய்ந்து எழுதுவதில் தான் அதிகம் ஆர்வம் காட்டுகிறேன்"[24]

என்ற சிவசங்கரி தம் எழுத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அவர் குறிப்பிடும் அந்தத் தனிநபரில் பெண்களும் அடங்குவர். இவள் தன்னைச் சுயமாக அலச, திறன் உடைவளாக இருக்க வேண்டிய நிலையில் கல்வி தேவையாகிறது என மதிப்பிடலாம்.

## பெண்பார்த்தலில் மரபும் மாற்றமும்

ஆணுக்குப் பெண் நிகரானவர்கள் தான், இருப்பினும் பெண்களுக்குக் கல்வி மறுக்கப் பெற்றதைப் போலவே, சொந்த விருப்பு வெறுப்புக்களுக்கும் உரிமைகள் மறுக்கப் பெற்ற நிலைத் தமிழச்சமூகத்தில் இருந்தது. இந்நிலைக்கு அவர்களின் திருமணம் நல்ல எடுத்துக்காட்டாகும்.

சங்க காலத்தில் களவு, கற்பு என்ற நிலையில் கூடப் பெண்களின் காதலுக்கும், திருமணத்திற்கும் உரிமைகள் இருந்தன. காலப் போக்கில் பலவிதச் சடங்குகளும், சோதிட நம்பிக்கைகளும், வரதட்சணை முறையும், திருமணத்திற்குள் புகுந்த நிலையை வரலாற்றின் வழி அறியலாம். திருமண நிகழ்வில் ஆண்களிடம் இசைவு கேட்பவர்கள் பெண்களின் பக்கத்து விருப்பம் பற்றிக் கவலையே கொள்வதில்லை. இதற்காகத் தான் பாரதிதாசன் தம் சீர்திருத்த திருமணத்திற்கு மணமக்களின் ஒப்புதலில் பெண் ஒப்புதலையும் இணையாக வைத்தார்.

"பாவையீரே! உங்கள் பாங்கில் அமர்ந்துள்ள
ஆடவர்தம்மை அறிவீரோ? அன்னாரைக்
கூடிஉம் வாழ்க்கைத் துணையாகக் கொள்ள
உறுதி உரைப்பீரோ? என்று வினவ
உறுதிஅவ் வாறே உரைத்தார் மகளாரும்"[25]

என்று பாரதிதாசன் பாடும் வரிகள் இங்கு சிறப்பிற்குரியதாகும்.

பெண் படைப்பாளர்களும் முற்சுட்டிய நிலையைக் கருத்தில் கொண்டு படைப்பு உருவாக்கம் செய்துள்ளார்கள். சிவசங்கரி இந்நிலையிலிருந்து மீட்சியடைவதைப் பெரிதும் விரும்புகிறார்.

சமூகத்தில் ஆணின் மேலாதிக்கம் வெளிப்படுமாறு பெண் பார்த்தல், வரதட்சணை வியாபாரம் பேசுதல் போன்றவை உள்ளன. ஆணின் விருப்பங்களும், எதிர்பார்ப்புகளும் பெருமையாகப் பேசப்படுகின்றன. பெண் எவ்வளவுதான் படித்து, வேலை பார்த்து, பொருளாதாரச் சுதந்திரம் பெற்றவர்களாக இருந்தாலும், பெண்ணின் ஆளுமை சிதைகிறது. மணவாழ்வின் முதற் கட்டமான பெண் பார்த்தல், மணம் பேசுதல் போன்றவை அமைந்துள்ள நிலையை சிவசங்கரி தம் நாவல்களில் தெளிவாகக் காட்டிச் சிந்திக்க வைக்கிறார்.

சிவசங்கரி நாவல்களில் இந்த மரபு மீறப்பட்டவில்லை. ஆனால், பலமுறைப் பெண்ணைப் பார்க்காமல், பார்க்கும் முதல் பெண்ணே மாப்பிள்ளை வீட்டினர்க்குப் பிடித்துப் போகும் வகையில் நாவல்கள் அமைந்துள்ளன. எதற்காக, திரிவேணி சங்கமம், ஒரு அப்பாவும் இரண்டு பெண்களும், பிராயச் சித்தம், திரிசங்கு சொர்க்கம் போன்ற நாவல்களில் மாப்பிள்ளைகள் மேற்கண்ட நாவலின் பெண்களை விரும்பி மணம் செய்யும் விதமாக அமைக்கப்பட்டுள்ளன.

'இவர்களும் அவர்களும்', 'பொய்', 'வளர்த்த கடா', 'நான் நானாக', 'பாலங்கள்' (I, II, ஆம் பாகம்) போன்ற நாவல்களில் மாப்பிள்ளைகள் தாங்கள் பார்க்கும் முதல் பெண்ணே மனைவியாக அமையுமாறு அமைக்கப் பெற்றுள்ளன.

## பெண் வணிகப் பொருளா?

திருமணத்தில் வரதட்சணை என்ற பெயரில் வணிகச் சிந்தனை இடம் பெற்ற நிலை கவலைக்குரியதாகும். துவக்கத்தில் பெண் வீட்டார்க்குப் பொருள் கொடுத்து மணமகள் வீட்டார் பெண்ணைத் திருமணம் செய்தார்கள். காலப் போக்கில் இந்நிலை தலை கீழாக மாறி விட்டது. துவக்கத்தில் ஒரு சில இனத்தார்களிடமிருந்த வரதட்சணைப்பழக்கம் அண்மைக் காலங்களில் எல்லா இனத்தாரிடமும் பரவியிருக்கிறது. வரதட்சணை வாங்குதல் அதன் தொடர்பான விளைவுகள் என்ற நிலையில் மண வாழ்வு சாரமற்றுப் போய்விடுகிறது. இந்நிலை மாற்றம் குறித்து சிவசங்கரித் தம் நாவல்களில் தீவிரமாகச் சித்தரித்துள்ளார்.

'நான் நானாக' நாவலில் ரமணி தகப்பனார் மகாலிங்கம் ஆவார். பெண் பார்க்க வரும் முன்னர் அவர் பேசுகிற பேச்சு, புரட்சிச் சிந்தனையாக உள்ளது.

> "சந்தையில் மாடு வாங்குற மாதிரி பெண்களை நிக்க வைச்சுப் பாடச் சொல்லுறதுலயும், நடக்கச் சொல்லுறதுலயும் எங்களுக்கெல்லாம் நம்பிக்கை இல்லை. உங்காத்துப் பெண்ணோட போட்டோவைப் பார்த்தோம், எங்க எல்லாருக்கும் பிடிச்சிருக்கு. அதான் வெள்ளிக்கிழமை குடும்பமா பெண் பார்க்க வரதுக்கு ஒத்துண்டோம். வீடு வீடாகப் போய் பஜ்ஜி, ஜொஜ்ஜி தின்னுட்டு வர்றதிலே எங்களுக்கு

உடன்பாடில்லே ..... நாங்க முதன் முதல்லே பெண் பார்க்க வர்றதே உங்காத்துக்குத் தான்"[26]

என்று கூறி உரையாடலில் சம்பிரதாயமான மரபுகள் புறக்கணிக்கப் பெறுவதைக் கூறுகிறார்.

'பொய்' நாவலில் கிரிதரும், அவனது தாயும், துர்க்காவைப் பெண் பார்க்க வருகின்றனர். அதைப்பற்றி தரகர், துர்கா வீட்டில், பெண்பார்ப்பதை,

"நாளைக்கு வெச்சுக்கலாம்னா, ..... சனிக்கிழமை முடியாது. அதான் இன்னிக்கே பார்த்துடலாம்னு சொன்னாங்க .... இருட்டினப்புறம் எதுவும் சாப்பிட மாட்டாங்களாம். அதனால அவங்களுக்கு வெறும் பாலும், பையனுக்கு காபியும் மட்டும் கொடுத்தா போதும். வேற பலகாரமெல்லாம் வேணாங்கறாங்க. நீங்க துர்காவை ரெடியா இருக்கச் சொல்லுங்க"[27]

என்று கூறுகிறான். இவர்கள் எளிமையாகப் பெண் பார்க்க வருதைப் பார்த்து பெண் துர்க்கா வியந்து போகிறாள்.

"சொஜ்ஜி, பஜ்ஜி இத்யாதிகள், புரோக்கர் உறவு மனிதர்கள் – மாப்பிள்ளை வீட்டாருக்கு டாக்சி செலவு என்று எதுவுமே இல்லாமல் இரவு எட்டு மணி சுமாருக்கு கிரிதரும் அவன் தாயும் நடந்தே வந்து இவளைப் பார்த்து, துர்க்கா பரபரத்துத்தான் போனாள்"[28].

கிரிதரின் தாயார் சின்ன சரமாய்க் கோத்த மனோரஞ்சிதப் பூக்களை இவள் கையில் கொடுத்து, "பூவைத் தலையில் வெச்சுகிட்டு நீயும் கூடத்துக்கு வாம்மா ..... என்ற பொழுது பரபரப்பு இன்னும் கூடியது," என்று பெண் பார்க்கும் சூழலை அமைப்பதிலிருந்து சிவசங்கரியின் வித்தியாசமான அணுகுமுறையினை உணரலாம்.

'வளர்த்தகடா' நாவலில் சம்பத் பெண்ணைப் பெற்றவர்களிடம் சீர்வரிசைக் கேட்கக் கூடாது என்பதில் உறுதியாக இருக்கிறான்.

அதேபோல் அனது பெற்றோர்களும்,

"பெண்ணைப் பெற்றவர்களுக்குத் தெரியாதா ..... நாம் வாயைத் திறந்து கேட்க வேண்டிய அவசிம் என்ன"[29]

என்று பெருந்தன்மையுடன் இருக்கின்றனர். இங்கு மகன் மட்டுமல்ல ..... மூத்த தலைமுறையினரும் மகன் கருத்திற்கு இணைந்து வருகின்றனர்.

'நான் நானாக' நாவலில் ரமணியின் தந்தை மகாலிங்கம் பாரதியின் பெற்றோரிடம்,

"வரதட்சணை, சீர், செனத்தியின்னு எதைப் பற்றியும் பேச வேண்டிய அவசியமே கிடையாது. இத்தனை வருஷமா உங்க பெண்ணா வளர்ந்த குழந்தை எங்காத்துக்குப் பெண்ணா வரப்போறா. அவ்வளவேதான். பெண் குழந்தை இல்லாத எங்காத்துக்கு, மஹாலட்சுமி மாதிரி பெண்ணை நீங்க அனுப்பறதுக்கு ஆயுசு பர்யந்தம் நாங்கதான் கடமைப்படப் போறோம்"[30]

என்று கூறுகிறார். அவர் கூற்றில் வரதட்சணை எதிர்பார்க்காத தன்மை வெளிப்படக் காணலாம்.

'மாலையில் பூக்கும் மலர்களின்' நாயகன் பாலாஜி, சதாசிவத்தின் ஒரே மகள் கௌரியை மணக்கிறான். திருமணத்திற்குப் பின் அவர் மனமுவந்து தரும் பணத்தை வாங்க மறுக்கிறான். வீட்டோடு மாப்பிள்ளையாக இருக்க விரும்பாமல் தான் தன் சொந்த சம்பாத்தியத்தில் மனவியுடன் வாழ விரும்புகிறான். பெண் பார்த்தலில் சம்பிரதாயமான மரபுகள் மாற்றப் பெறுகின்றன. இந்நிலைக்கு மணமகன் வீட்டுப் பெற்றோரே முன் மாதிரியாக அமைக்கப் பெறுகிறது, பெண் பார்த்தலில் ஆடம்பரம் இல்லாத எளிமை சித்தரிக்கப் பெறுகிறது. மணமகனே வரதட்சணை, மற்றும் சீர்வரிசை கேட்கக் கூடாது என்ற நிலையில் முன் மாதிரிக் கருத்து உடையவனாக இருக்கிறார். பெற்றோர்கள் அவர்கள் பெண்ணுக்குத் தருவதில் கட்டாயம் என்கிற நிலையை மணமகனும் மணமகள் பெற்றோர்களும் உணர்ந்திருக்கிற நிலை சிவசங்கரி நாவல்களில் வெளிப்படுகிறது.

## மணவாழ்வு

*திருமணமானபின் முதலிரவு பற்றி சிவசங்கரி சில நாவல்களில் கருத்துக்களை வெளிப்படுத்தியிருக்கிறார். ஆண், பெண் என்ற இருவருக்குள் நடைபெறும் அந்தரங்கமான செயலைப் பலரறியச் செய்வது விரும்பத்தகாதது என்ற சிந்தனை உடையவராக இருக்கிறார்.*

*'பாலங்கள்' நாவலின் வெங்கிட்டு, 'அதுசரி அப்புறம்' நாவலில் ஜானா–ரகு தம்பதியினர், 'ஏரிக்கடியில் சில கனவுகள்' நாவலின் மனோகர் போன்றவர்கள் முற்குறித்த சிந்தனை உடையவர்களாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளனர். 'அது சரி அப்புறம்' நாவலில் வரும் ரகு, ஜானாவின் பேச்சுக்களை இங்கு எடுத்துக்காட்டு விளக்கத்திற்காகக் குறிப்பிடலாம்.*

> *"சம்பிரதாயம், அது இதுன்னு சொல்லி, ரொம்ப அந்தரங்கமா நடக்க வேண்டிய ஒண்ண இப்படி டாம்டாம் அடிக்கிறது, அநாகரிகமா எங்களுக்குப் படுது"*[31]

*என்று ரகு–ஜானா குறிப்பிடுவதைப் பெரியவர்களும் ஏற்றுக் கொள்கிற மாதிரிக் கதைப் போக்கு உள்ளது.*

## மனைவி கணவன் பெயரைச் சொல்லலாமா?

*திருமணமான பெண்கள் நமது நாட்டில் கணவன் பெயரைச் சொல்லி அழைப்பதில்லை. இதற்குக் காரணம் கணவனைப் பெயர் சொல்லி அழைத்தால் கணவனின் ஆயுள் குறையும் என்ற பழமையான நம்பிக்கையாகும்.*

*கிராமப்புறப் பெண்களிடம் இந்நம்பிக்கை இன்றளவும் பரவலாக இருக்கக் காணலாம். பெண்கள் கணவனின் பெயரையோ அல்லது அப்பெயரோடு தொடர்புடைய பொருள் அல்லது சொல்லையோ சொல்வதில்லை.*

*பெண் சமூகத்தார் இந்நம்பிக்கையிலிருந்து விடுபட வேண்டுமென்பது சிவசங்கரியின் சிந்தனையாக இருக்கிறது. 'எதற்காக', 'நான் நானாக', 'சுறா மீன்கள்', 'ஏன்', பாலங்கள்', 'இனி', பொய்', 'வளர்த்த கடா', 'சுட்டமண்'*

போன்ற நாவல்களில் மனைவி கணவனைப் பெயரிட்டே அழைப்பது போல நாவல் உருவாக்கங்ளை அமைத்துள்ளார்.

பாலங்கள் நாவல்இரண்டாம் பகுதியில் வரும் வெங்கிட்டு மனைவி மைதிலியிடம்,

> "வெளி நாட்டுக்காரர்கள் தம் கணவனைப் பெயரிட்டுத்தான் அழைக்கின்றனர். அவர்கள் ஆயுள் என்ன குறைந்தா போய்விட்டது"[32]

என்று வாதிடுகின்றாள்.

## கடமைகளில் உரிமை

பெண் என்பவள் பிறந்து வளர்ந்து பருவம் எய்தும் வரை பிறந்த வீட்டு உரிமையுடையவள். அவளுக்கு மணமாகி விட்டால் புகுந்த வீட்டிற்கு மட்டுமே கடமைப் பட்டவள் என்பது மனுவின் கூற்றாகும். அக்காலச் சமுதாயத்தில் நிலவிய நடைமுறை ஆணாதிக்க சமுதாயத்திற்கு வழி வகுக்கப் பெற்றது.

பெண் என்பவள் ஜடப்பொருள் அல்ல. அவளுக்கும் உணர்ச்சிகள் மற்றும் ஆசாபாசங்கள் உண்டு என்பது அண்மைக் காலமாக விழிப்புணர்வு உருவாகியுள்ளது. திருமணத்திற்குப் பின் பெரும்பாலும் பெண்ணுக்கு என்று தனிப்பட்ட கடமையைப் போற்றுதல், விருப்பு வெறுப்புகளைக் கொள்ளுதல் என்ற சூழலுக்கு இடமில்லை. புகுந்த வீட்டுக் குடும்பத்திற்காக அவள் தன் குடும்பப்பற்று, கடமை, மற்றும் உணர்ச்சிகளைப் புறக்கணிக்க வேண்டியவளாக உள்ளாள். ஆண்களுக்கு இத்தகைய புறக்கணிப்புகள் இல்லை. கணவன் தன் பெற்றோர்கள் மேல் பாசம் கொள்வதும் பராமரிப்பும் குடும்பக் கடமையாகிறது. அதே கடமையை மனைவியும் தன் பெற்றோர்களிடம் செயல்முறைப் படுத்தப் பெறும் பொழுது சிக்கல் உருவாகிறது. இங்குக் கடமையாற்றுவதில் உரிமையில்லை. இந்த உரிமைக்காகச் சிவசங்கரி தம் நாவல்களில் குரல் கொடுக்கிறார்.

'இவர்களும் அவர்களும்' நாவலில் சித்தரிக்கப் பெறும் அபிராமி வேலைக்குப் போகும் பெண்ணாவாள். திருமணம் நிகழ்கிறது. தன் பிறந்த வீட்டுக் குடும்பத்திற்கு உதவுகிற சூழலில் புகுந்த வீட்டிலிருந்து தடை ஏற்படுகிறது.

"தந்தையை இழந்த என் குடும்பம் நிர்கதியாய் நிற்கிறது. என் தம்பி தலையெடுக்கும் வரை என் சம்பளத்தை என் குடும்பத்திற்குக் கொடுத்து உதவ நினைக்கிறேன். நீங்கள் நான் செய்யப்போறதை மனப்பூர்வமா ஆதரிச்சா நா உங்களோட இருக்கேன், இல்லையெனில் எங்குடும்பம் தலையெடுக்கும் வரை திருச்சியில் அம்மாவுடன் தங்கப் போறேன், நா என்னிக்கும் இந்தக் குடும்ப மருமகள் தான்,"[33].

என்று கூறிவிட்டுப் புகுந்த வீட்டை விட்டுப் பிறந்த வீட்டிற்குச் செல்கிற துணிவுடைய அபிராமியைச் சிவசங்கரி படைத்துக் காட்டுவது குறிக்கத் தகுந்ததாகும்.

அவ்வகையில் கணவனுக்குக் கடமைகள் வரவேற்கப் பெறுகிற மாதிரி மனைவிக்கும் கடமைகள் மதிக்கப் பெற வேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப் பெறுவதைக் காணலாம். இக்கருத்து நடைமுறைக்கு வந்தால் பெண் சமூகம் பாதிப்படைந்த அடிமை நிலையிலிருந்து விடுபட்டது போலத்தான் என மதிப்பிடலாம்.

## படிப்பிற்குத் தடையா?

திருமணமானபின் பெண் மனைவியென்கிற தகுதியை அடைகிறாள். குடும்ப நன்மை என்கிற பெயரில் அவர்களின் சொந்த உணர்வுகள், ஆசைகள் மதிக்கப் பெறுவதில்லை; நசுக்கப்பெறுகின்றன. 'நான் நானாக' நாவலின் நாயகி பாரதி ஆவாள். தனது நாற்பதாவது வயதில் நடனம் பற்றிய கல்வி பயில விரும்புகிறாள். கணவன் மற்றும் பெற்ற பிள்ளைகள், பாரதியின் பெற்றோர் ஆகியோர் அவ்விருப்பத்திற்கு எதிர்ப்புக் கொடுக்கின்றனர். அச்சூழலில் வயதான மாமியார் பார்வதி, மகள் ரமணியிடம் கூறுகிற உரையாடல் சிந்தனையில், சிவசங்கரியின் எண்ணம் வெளிப்படுகிறது.

"ஒரு பெண் தனக்குன்னு சில காரியங்களைச் செய்ய முனைஞ்சுட்டதாலேயே அவள் குடும்பத்தை, பொறுப்புகளை, கடமைகளைக் காத்துல பறக்க விடவும் துணிஞ்சிட்டான்னு நீ நினைக்கிறே ரமணி. அவ உன்னை மதிச்சு நடந்துக்கிற மாதிரி நீயும் அவளை மதிச்சு நடக்கிறது உனக்குப் பெருமை"[34]

என்று கூறுகிறார். இக்கருத்தின் வழியே கணவன் மனைவி ஒருவரை ஒருவர் மதித்து நடக்க வேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப் பெறுவதைக் காணலாம். மேலும்,

"நம்ப நாட்டுல ரொம்ப வருஷமா பொம்மனாட்டிங்க தங்களுக்குன்னு விருப்பு வெறுப்பு எதையுமே காட்டிக்காம ஆம்படையான், குழந்தைகள், குடும்பம்னு வாழ்ந்துட்டதாலே, சமுதாயமும் அது தான் சரினு சொல்லறது. ஆனா அவளுக்கென்று விருப்பு வெறுப்பு இல்லாம இல்லே ...... உள்ளுக்குள்ளே தோணினதை வெளியில பொம்பளை இத்தினி காலமும் காண்பிச்சுக்கலை"[35].

இவ்வாறு பார்வதி கூறி ரமணியின் மனதை மாற்றுகிறார். பாரதி நாட்டியக் கல்வி படிக்க அனுமதி பெறுகிறாள்.

இந்நாவலைப் பற்றிச் சிவசங்கரி ஒரு பேட்டியில் பின் வருமாறு தெரிவிக்கிறார்.

"என்னைப் பொறுத்தவரை எழுத்தாளர்கள் பியூச்சரிஸ்டிக்காக இருக்கலாம். இன்னும் ஐந்து வருஷத்தில் எல்லாப் பெண்களுக்கும் இந்தத் தேடல் வரப்போகுது. நான் மகளா இருக்கிறத மறுக்கலை. ஆனால் நான் நானாகவும் இருக்க ஆசைப்படறேன். என்னைப் புரிஞ்சுக்கோங்க. இந்தத் தேடல் நிச்சயம் ஏற்படப் போகுது. இப்போ என்னை என் குடும்பம் புரிஞ்சுகிட்டது, ஆனால் என்னை மாதிரி அதிர்ஷ்டசாலிங்க நூற்றில் ஒருத்தர்தான் இருப்பாங்க, பாக்கி தொண்ணூற்று ஒன்பது பேரை அவங்க குடும்பம் புரிஞ்சுக்கப் போறது இல்லே. அவங்க குடும்பம் புரிஞ்சுக்க வைக்கணும். அப்படிங்கிறதுக்காக சிந்திக்க வைக்கணும் என்பதற்காக இந்த நாவல்"[36]

என்று கூறியுள்ள கருத்து சிவசங்கரியின் கருத்தினைத் தெள்ளத் தெளிவாக்குகிறது.

குடும்பம் என்கிற தேர் உருள, கணவன்–மனைவி இருவரும் இரு சக்கரங்கள் போன்றவர்கள். இருவருக்கும் சமமான பொறுப்புகள் உண்டு கணவன் ஆதிக்க நிலையில் இயங்குகிறபோதும், மனைவி குடும்ப நலன்

கருதிப் பொறுத்துக் கொள்கிறாள். ஆதிக்க நிலையின் அளவு கூடுகிற போது தன் நலனைக் கூடத் தியாகம் செய்து பொறுத்துக் கொள்கிறாள். இவ்வாறு பொங்கி எழுகிற நிலையில் பெண் உரிமையை நிலை நாட்டுகிறாள். மரபுகளைக் குறித்துக் கவலை கொள்ளாமல் இருக்கிறாள். இவ்வகையில் சிவசங்கரி சில நாவல் உருவாக்கங்கள் செய்துள்ளார்.

## பொறுப்பில்லாத கணவனைப் புறக்கணிக்கும் மனைவி

'மண்குதிரை' நாவலில் வரும் கல்யாணி, அவளை விட்டுவிட்டுக் கணவன் சிவராமன் பொறுப்பில்லாமல் ஓடி விடுகிறான். மனைவி குழந்தைகளுக்காக அவர் எதையும் செய்யவில்லை. குடும்பமே சீர்குலைந்து விட்ட நிலையில் குழந்தைகளுக்குக் காவலாகக்கூட இல்லாமல் ஓடிப் போய்விட்டார். குடும்பத்தில் ஒரு பெண் ஓடிப்போகிறாள். ஒரு பிள்ளை செத்துப் போகிறது. இரு பிள்ளைகளை மனைவி கல்யாணி சங்கர மடத்தில் சேர்த்து விடுகிறாள். கணவன் திரும்பி வருகிறான், குடும்பத்தின் சீரழிவைக் கண்டு வருந்தியதாகக் தெரியவில்லை. மிருகப் பிறப்பாகப் பகலில் மனைவியை இச்சைக்கு அழைக்கிறான். கணவனைப் பதினெட்டு வருடங்களாகப் பொறுத்துக் கொண்டவள் பொங்கி எழுகிறாள்.

கணவன் இச்சைக்கு உடன்படாமல் காசிக்குச் சென்று சமைக்கும் தொழிலில் ஈடுபட்டுத் தனியே வாழ முடிவெடுக்கிறாள். தன்னால் கணவனின் சார்பின்றித் தனியே குடும்பம் நடத்த முடியும் என்று நடத்திக் காட்டுகிறாள். இறுதி வாழ்க்கையில் தனியே நிற்க முற்படுகிறாள்.

இந்நாவலுக்கு 'மண்குதிரைகள்' என்ற பெயர் பொருத்தமாக வைக்கப் பெற்றுள்ளது.

> "புருஷன்னா இரும்பா நின்னு குடும்பத்தைக் காப்பாத்தி அணைச்சுண்டு போகணும். அத விட்டுட்டு இப்படி மண்குதிரையா இருந்தா குடும்பமே நாசமாகி விடும்"[37]

என்ற கருத்துக் கதைப் போக்கில் கூறப் பெறுகிறது.

## பணத்தினால் குணம் மாறும் கணவன் தேவையா?

*கிரிதர் துர்கா இருவரும் கணவன் மனைவி. கிரிதர் பயிற்சிக்காக வெளிநாடு செல்கிறான். அங்கு கோடீஸ்வரி லிண்டாவைக் காண்கிறான், மணக்க விரும்புகிறான். துர்க்காவிடமிருந்து முறையான விவாகரத்து பெற்றபின் அவளை மணக்க விரும்புவதாகவும், பிள்ளைகள் எதிர்காலத்தில் வசதியாக வாழ லட்சம் டாலர், அதாவது 14 லட்சம் ரூபாய் லிண்டா கொடுக்க இருப்பதாகவும் கடிதம் எழுதுகிறான். துர்கா கடிதத்தைப் படித்து விட்டு அழுது புலம்புகிறாள். பின் துணிவுடன் ஒரு முடிவுற்கு வருகிறாள். தன் இரு குழந்தைகளையும் கூட்டிக் கொண்டு அமெரிக்கா சென்று கணவனைக் காண்கிறாள். கணவன் ஏற்க மறுக்கிறான். பணம் பெற்று விவேகமாக வாழும்படி கூறுகிறான்.*

*துர்கா பொங்கி எழுகிறாள்,*

> *“ஷட் அப் ஐ ஸே ..... பணமாம் பணம், யாருக்கு வேணும் ஒங்க லிண்டா பணம். அது தானே ஒங்க கண்ணை மறைச்சு இங்க இழுத்திருக்கு .... நீங்களே அதைக் கட்டி அழுங்க .... எனக்கோ என் பிள்ளைகளுக்கோ அதிலிருந்து சத்தியமா பைசா கூட வேணாம்”*[38]

*என்று துர்கா பேசுகிறாள்.*

*பணம், மனைவி என்கிற உறவை விலை பேசி விட முடியுமா? என்கிற சிந்தனையை எழுப்பி, உறுதியாக ‘இல்லை’ என்று குரல் கொடுக்கிறாள் துர்கா.*

> *“ஆம்பிளைங்கிற திமிர்ல எத வேணா செய்யலாம், பேசலாம்னு இனியும் கனவு காணாதீங்க. ஆறு மாசத்துல திரும்பி வரேனு சத்தியம் பண்ணிட்டு போன நீங்க, சொன்னபடி வராததினாலே பசங்க இரண்டு பேரும் எப்படி ஏமாந்து போயிருக்காங்கன்னு எனக்குத் தெரியும்”*[39]

*என்று கூறுகிறாள். தந்தையின் இருப்பு நிலையை அவர்கள் நேரில் பார்த்ததால்தான் நான் பொய் சொல்லவில்லை என்பது தெரியும். அதைக் காட்டுவதற்காகத் தான் அழைத்து வந்தேன் எனக் கூறுகிறாள்.*

பணத்திற்காகக் குணம் மாறிய கணவனைப் புறக்கணிக்கிறாள். அவன் பணத்தைப் புறக்கணிப்பதன் மூலமாகக் கணவன் இல்லாமல் குடும்பத்தை நடத்திப் பிள்ளைகளை என்னால் வளர்க்க முடியும் என்ற துணிவுள்ள பெண்ணாக துர்கா விளங்குகிறாள். பாரதி விரும்பும் புதுமைப் பெண்ணாக மிளிர்கிறாள்.

## தனித்தியங்கும் துணிவு

பெண்கள் ஆடவர் சமுதாயத்தைச் சார்ந்தே செயல்பட வேண்டிய நிலையை மாற்றியமைக்க விரும்புகிறவர் சிவசங்கரி. 'பாலங்கள்' நாவல் மூன்றாம் பகுதியில் சித்தரிக்கப் பெறும் சாரு, விலைமகளுடன் தன் கண்ணெதிரே தொடர்பு கொண்ட கணவனை வெறுத்து ஒதுக்குகிறாள். 'வெட்கம் கெட்டவர்கள்' குறு நாவலில் இடம் பெறும் புவனா தங்கையை இரண்டாம் தாரமாக மணப்பேன் என ஆணவத்துடன் பேசும் கணவனைப் புறக்கணிக்கிறாள். 'மூக்கணாங்கயிறு' நாவலில் மூர்த்தி அதீத பாலியல் வாழ்க்கையில் ஈடுபடுவதால் மனைவி சந்திரா இளவயதினளான நளினியை இரண்டாம் தாரமாக முன்னின்று திருமணம் நடத்தி வைத்துத் தனிக் குடித்தனம் வைத்து விடுகிறாள். ஒரு மனைவியே முன்னின்று கணவனுக்கு இரண்டாம் தாரத் திருமணம் நிகழ்த்துவது பெண்ணியச் சிந்தனையாகும்.

## கற்பும் மறுமணமும்

ஆணாதிக்கச் சமுதாயத்தில் கற்பு என்ற பெயரால் தடை விதிக்கப்பட்டது. ஆண்களுடன் பேசினாலும், பழகினாலும் பெண்களின் கற்பு போய்விட்டது என்ற நிலையே காணப்பட்டது. இதைக் கண்டிக்கும் விதத்தில் பாரதியார்,

"கற்புநிலை என்று சொல்லவந்தால் இரு
கட்சிக்கும் அஃதைப் பொதுவில் வைப்போம்"

என்று பாடியுள்ளார். ஆனாலும் சமூகத்தில் கற்புப் பற்றிய கண்ணோட்டம் மாறவில்லை.

கால மாற்றத்திற்கு ஏற்ப கற்புக் கோட்பாட்டில் மறு பரிசீலனை செய்யப்பட வேண்டும் என்பது சிவசங்கரியின் எண்ணமாகும்.

கற்பு பற்றிய ஒரு பேட்டியின் கேள்விக்கு,

"கற்பு நெறி அளவுகோலுக்கு ஜமத்தகினி முனிவரின் கற்பு நெறி கோட்பாட்டை உபயோகித்தால் இன்றைக்கு எத்தனைப் பெண்கள் கற்புப் பரீட்சையில் தேறுவார்கள், யோசிக்க வேண்டும்.

அடுப்படியோடு நின்றிருந்த காலம் மாறி பொருளாதாரத் தேவைக்காக வீடுதோறும் பெண்களும் வெளியில் அலைந்து திரிந்து, பல ஆண்கள் சபலங்களுக்கு மத்தியில் வேலை பார்க்கத் துவங்கிவிட்ட இந்தக் காலத்தில், கற்பு என்ற பெயரில் வேண்டாத அந்நாளைய அளவுகோலைக் கொண்டே பெண்களின் தரத்தை அளக்க நிர்ணயிக்க முயற்சிப்பது நியாயமற்ற கொள்கை"[40]

என்று கூறிச் சிந்திக்கவைக்கிறார்

கற்பு பற்றிய இன்னொரு வினாவிற்கு,

"கற்பு தேவைதான். பண்பாடு அவசியம் தான். ஆனால் இந்தக் கற்பு, பண்பாடு என்பதெல்லாம் மனைவியோடு மட்டும் நின்று விடுவதில்லை. கணவனுக்கும் இவைகள் பொருந்தும். மரியாதையைக் கொடுத்து மரியாதையை வாங்கும் தாம்பத்தியத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு. கணவர்கள் எல்லாம் என்றைக்கு இராமர்களாக இருக்கிறார்களோ, அன்றைக்குக் கண்டிப்பாக மனைவிகளும் சீதைகளாக இருக்க முயற்சிப்பார்கள். அதனால் வெட்டியாக இந்தப் பண்பாடு, கற்பு பேச்சு வேண்டாமே"[41]

என்று கூறும் அவரது கருத்துக்கள் சிந்திக்கத்தக்கவை.

வீட்டில் இருந்த பெண்கள் கல்விக்காகவும், பொருளாதாரத் தேவைக்காகவும் வேலைக்குப் போகும் நிலையில் இன்றைய சூழல் உள்ளது. அவள் சபலங்களுக்கு மத்தியில் வாழ வேண்டியவளாக உள்ளாள். கற்பு நிலை மனைவிக்கும், கணவனுக்கும் பொது என்கிற கருத்தில் உறுதியாக சிவசங்கரி இருக்கிறார்.

இந்த உறுதிப்பாட்டில் ஆடவர்கள் தவறும் போது மனைவியர்கள் அடங்கியவர்களாக இல்லை. கணவனைச் சாராமல் தனித்தியங்கும் ஆற்றல் படைத்தவர்களாகப் புதுமைப் பெண்களாகச் சித்தரிக்கப்பெற்றுள்ள நிலை கருதத்தக்கதாகும்.

'பிராயச்சித்தம்' நாவலில் மதுரா தன் மாமனிடம் ஒரு தலைக் காதல் கொள்கிறாள். வலிந்து உறவு கொண்ட நிலையில் கர்ப்பமும் தரிக்கிறாள். கர்ப்பத்தைக் கலைக்கவும் மறுக்கிறாள். மாமன் துறவியாகச் சென்று விடுகிறான். அவளின் வாழ்வு கேள்விக் குறியாக இருக்கிறது. பெற்றோர்கள் செய்வது அறியாமல் இருக்கின்றனர். ரவி என்பவன் மனமுவந்து அவளை மணக்க வருகிறான். அவளின் நிலையறிந்து மணக்க முன்வருகிற நிலையைச் சிவசங்கரி சித்தரித்துள்ளார். சமூகத்திற்கு முன் மதுரா திருமணத்திற்குப் பின்பே குழந்தைப் பேறு பெற்றிருக்கிறாள்.

மு.வ. கற்பு பற்றி 'கரித்துண்டு' நாவலில் கூறிய கருத்து இங்கு கருதத் தக்கதாகும். ஒருவனுக்கு ஒருத்தி என்பது தான் மு.வ.வின் கோட்பாடு.

> "ஒருத்தி ஒருவனை விட்டு இன்னொருவனுடன் வாழும்படி நேரிடலாம், ஒருவனை விடாமல் இன்னொருவனுடன் வாழ்வது தான் தவறு. அப்போது எவனுடன் வாழ்கிறாளோ அவனுக்குத் துரோகம் செய்யாமலிருந்தால் போதும், அது தான் கற்பு"[42]

என்று புது விளக்கம் தருகிறார்.

## பெண்களின் மறுமணம்

பெண்களுக்குக் கைம்மைத் துயர் கூடாது என அறிஞர்கள் வாதாடுகின்றனர். கவிஞர்கள் பாடுகின்றனர். மனைவி இறந்தால் கணவன் மறுமணம் செய்வதில் தடையில்லை. ஆனால் கணவன் இறந்தால் மனைவி மறுமணம் செய்யத் தடைகள் இருக்கின்றன. சிவசங்கரி இத்தடைகளை மீறிப் பெண்கள் சமூகத்திற்கு மறுமண உரிமைக்காகக் குரல் கொடுக்கிறார்.

தீர்வு நாவலில் வரும் பூரணியின் கணவன் வலிப்பு நோயால் இறக்கிறான். அண்ணனின் ஆதரவுடன் தொடர்ந்து படிக்கிறாள். அண்ணன் அலுவலகத்தில் பணியாற்றும் பாஸ்கரன் பூரணியைத் திருமணம் செய்து

கொள்ள விரும்புகிறான். பூரணி மறுக்கிறாள். பூரணியின் பொருட்டு, அண்ணனும் அண்ணியும் தங்கள் வாழ்க்கையில் தாம்பத்திய உறவு இல்லாமல் இருப்பதை அறிகிறாள். இந்நிலைக்கு மாற்று மறுமணமே தீர்வு என முடிவு செய்கிறாள். 'தீர்வு' என்பது நூல் தலைப்பாகும்.

'மலையின் அடுத்த பக்கம்' நாவலில் புரபசர் துர்கா, கணவனை இழந்த சித்ராவிடம்,

> "முதல் மனைவியைஇழந்தப்புறம் ஓர் ஆண், இன்னொரு பெண்ணோட மனம் ஒப்பி வாழ முடியும்னா, முதல் குழந்தை மேலே உள்ள அளவு கொஞ்சமும் குறையாம, இரண்டாவதா ஒரு தாயால பெத்துக்க முடியும்னா, மறுமணமும் தப்பில்லை"[43].

> "பொம்மனாட்டிகளோட உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுக்காம நடந்துக்கிறது தப்பு. ஆம்பிள்ளைக்கு விதவன் கோலம் ஒண்ணு இல்லாதப்போ பொம்பளைக்கு மட்டும் விதவைக் கோலம் எதுக்குனு நான் கேட்டேன்"[44]

என்று ரமணி தாயிடம் பழைய நிகழ்ச்சிகளை நினைவு கூர்வதாக வரும் உரையாடல், 'நான் நானாக' நாவலில் இடம் பெறுவது கருதத் தக்கதாகும். பெண்கள் விதவைக் கோலத்துடன் இருக்கக் கூடாது. ஆண்கள் என்ன விதவைக் கோலத்துடனா இருக்கிறார்கள்? என்ற வினாவின் வழி சிவசங்கரி சிந்திக்க வைக்கிறார்.

இதே கருத்தினை சிவசங்கரி கட்டுரையிலும் தெரிவிக்கிறார்.

> "புருஷனை இழந்து விடுவதால் ஒரு பெண் அமங்கலியாகி எல்லா விதத்திலும் அமங்கலமாக ஆகி விடுவதும், இதன் காரணமாக, பெற்ற மகனின் திருமணத்தை யார் கண்ணிலும் படாமல் ஒளிந்து கொண்டு காண வேண்டும் என்று ஆண்டாண்டு காலமாக சமூகம் விதித்திருப்பதும்" என்னைப் பொறுத்தவரைக் காட்டுமிராண்டித் தனமான செயல்களே.

பெண் உடம்பிலும் ஆணைப்போலவே சிவப்பு ரத்தம் தான் ஓடுகிறது. அவள் சுவாசிப்பதும் நாசியால் தான். சாப்பிடுவதும் வாயால் தான்.

அவளுக்கும் இதயம், சிந்தனை, மூளை, ஆசாபாசங்கள் எல்லாம் இருக்கின்றன.

இத்தகைய பெண்களுக்கு வீட்டில் உள்ள ஆண்கள், மனப்பூர்வமான அக்கறை மரியாதையுடன், இது உங்கள் வாழ்க்கை, உங்களுக்கு எது விருப்பமோ, செய்யுங்கள் .... நான் துணை இருப்பேன் என்று என்றைக்குச் சொல்லத் துணிகிறார்களோ அன்று தான் பெண் விடுதலைக்கு முழுமையான அர்த்தம் கிட்டும்"[45].

## குழந்தையின்மை

திருமணமான ஒரு சில வருடங்களில் தம்பதியினருக்குக் குழந்தைகள்பிறக்க வேண்டும். இல்லையெனில் இச்சமூகம் பெண்களை இழிவாக நடத்துவது நடைமுறையில் காணக்கூடியதாகும்.

சிவசங்கரி நாவல்களிலும், குழந்தையின்மை பிரச்சினை, 'எதற்காக', 'மாலையில் பூக்கும் மலர்கள்', 'திரிவேணி சங்கமம்', 'வளர்த்த கடா' போன்ற நாவல்களில் பேசப்பெறுகிறது. சமூகம் பெண்களை இழிவாகப் பேசும் எனினும் அக்கதையில் இடம் பெறும் ஆடவர் சமூகம் தம் மனைவியிடம் மிக அன்புடன் நடந்து கொள்கின்றனர். குழந்தையில்லாக் குறையினை மற்றவர்கள் பேசினாலும் கணவர்கள் மனைவியை அனுசரித்துச் செல்கின்றனர். இவ்வனுசரிப்பு ஒரு முன்மாதிரி அனுசரிப்பு ஆகும். ஆடவர் சமூகம் அவ்வாறு செயல்பட வேண்டுமென்பது சிவசங்கரியின் எதிர்பார்ப்பு என மதிப்பிடலாம்.

## முடிவுரை

பெண்களின் நிலையை அறிதலும், அவ்வறிதலை ஆக்க சக்தியாக மாற்றிப் பெண்களின் நிலையை உயர்த்தலும் பெண்ணியச் சிந்தனையாகும். பெண் சமூகத்தாரிடம் நிலவும் சிக்கல்களை அறிந்து அவற்றைக் களைவதன் மூலம் சமூகத்தையே மாற்றியமைக்க முடியும் என்பது பெண்ணிய மையக்கருவாகும். பெண்ணியம் அண்மைக்காலத்தில் சமூக அறிவியலின் அனைத்துத் தத்துவங்களையும் சித்தாந்தங்களையும் மறு பரிசீலனைக் குட்படுத்தும் ஆற்றலாகப் பரிணமித்துள்ளது.

மேற்கத்திய நாடுகளில் தாராளப் பெண்ணியம் பரவலாக உள்ளது. முதலாளித்துவத்தின் வகுப்புவாத அடக்குமுறைக்கு முரணாக இயங்கி, அதற்குத் தக்க கருத்துருவாக்கங்களைப் பெற்று இயங்குவது சமதர்மப் பெண்ணியமாகும். ஆண்களுக்கு எதிராக அடக்குமுறையிலிருந்து விடுபடுவதே தீவிரவாதப் பெண்ணியமாகும். பொதுவாக எல்லா நாடுகளிலும் இப்பெண்ணிய வகைகள் என்றும் போல இருக்கும் எனக் கருதுவதற்கில்லை.

இந்தியச் சமுதாயத்தில் சமயம் ஆன்மீகமாக விளங்குகிறது. சமயத்தில் பெண்கள் சமூகத்திற்குச் சுதந்திரம் இருப்பதுபோல இருப்பினும், இயங்கும் விதத்தில் சுதந்திரம் மறுக்கப் பெற்று வருகிறது.

ஆங்கிலேயர் வரவிற்குப் பின் இந்திய சமுதாயத்தில் ஏற்பட்டுள்ள மாற்றங்களில் பெண்கள் சமூகத்தில் பெரும் விழிப்புணர்வு உருவாகியது. மேலை நாடுகளில் பதினேழாம் நூற்றாண்டில் பெண்ணியச் சிந்தனைகள் தலைதூக்கின. இந்தியாவிற்குப் பெண்ணிய சிந்தனை சற்றுத் தாமதமாக வந்தது.

இந்தியப் பெண்ணியம் ஆணுக்கெதிரான இயக்கமன்று. தனித்துவம் வாய்ந்தவள் பெண். பொருளில்லாத அடக்குமுறைகளிலிருந்து, ஆணாதிக்கச் சமூகத்தாரிடமிருந்து விடுபட வேண்டுமென்பது இந்தியப் பெண்ணியமாகும். தமிழ்ச் சமூகத்தில் சங்ககாலச் சமுதாயத்தில் பெண்கள் மதிப்புப் பெற்றிருக்கின்றனர். ஆட்சிமாற்றம், புறசமயங்களின் தாக்கம் போன்றவைகள் பெண்கள் நிலையைச் சமூகத்தில் இறுக்கமாக்கி, குடும்ப நிலைகளிலும் பெண்கள் அடக்கப் பெற்ற நிலை உருவாகியது. இந்நிலையை மாற்றும் நிலையில் பெண்ணிய விழிப்புணர்வு தோற்றம் பெற்றது. இத்தோற்றம் அதன் வளர்ச்சியும் இலக்கியங்களில் பதிவு பெற்றன. பெண்படைப்பாளர்களும் தம் படைப்பிலக்கியங்களில் பெண்களுக்குக் குரல் கொடுத்தனர்.

பெண் படைப்பாளர்களில் ஒருவராகிய சிவசங்கரி, 'இயற்கை கொடுத்திருக்கிற சிலவற்றை முரண்படாமல் ஏற்றுக் கொண்டு, சில உரிமைகளுக்காகப் போராடுவதுதான் பழமைவாதப் பெண்ணிய வாதம் (Conservative Feminism)' என்று சிவசங்கரி கருத்துத் தெரிவிக்கிறார். 'பெண்' என்பதனாலேயே அடக்கப் பெற்று வந்திருக்கிற ஆணாதிக்க சமுதாயத்தின் மனநிலை மாறவேண்டும் என்பது சிவசங்கரியின் சிந்தனையாகும்.

அவ்வகையில் சிவசங்கரி மிதவாதப் பெண்ணியச் சிந்தனை உடையவர் என மதிப்பிடலாம்.

'பெண்களுக்கும் கல்வி வேண்டும்' என்று ஆணாதிக்க சமூகத்தைச் சேர்ந்த தந்தையின் வாயிலாகக் குரல் கொடுக்க வைக்கிறார் சிவசங்கரி. தனிநபர் தன்னைப் பற்றிச் சுயமாக அலசும் அறிவுத்திறன் இருக்க வேண்டும் என்ற நிலையில் சிவசங்கரி பெண் கல்வியை வரவேற்கிறார்.

பெண்களுக்குக் கல்வி மறுக்கப் பெற்றதைப் போலவே அவர்களின் சொந்த விருப்பு வெறுப்புகளும் ஏற்றுக் கொள்ளப் பெறுதல் இல்லை. காட்டாக, திருமணத்தில் பெண்கள் விருப்பம் கருத்தில் கொள்ளப் பெறுவது இல்லை. பெண் பார்த்தல், வரதட்சணை போன்ற நிகழ்வுகளில் ஆணின் மேலாதிக்கம் நிலவுகின்றது.

சிவசங்கரி நாவல்களில் மாப்பிள்ளை வீட்டார் பார்க்கும் முதல் பெண்ணே பிடித்துப் போய்விடுவது போல அமைக்கப் பெற்றுள்ளன. மாப்பிள்ளையின் தந்தையே சம்பிரதாய மரபுகளிலிருந்து மீறிப் பெண்களை ஏற்றுக்கொள்கின்றனர். எளிமையாகப் பெண் பார்ப்பதும், வரதட்சணையை ஏற்காத பெற்றோர்களும் முன்மாதிரிப் பாத்திரங்களாகப் படைக்கப் பெற்றுள்ளனர். இம்முறையில் இக்காலத் தலைமுறையைச் சார்ந்த மகள் மட்டுமல்ல, மூத்த தலைமுறையைச் சார்ந்த பெற்றோர்களிடமும் மாற்றம் இருக்கும் நிலை சித்தரிக்கப் பெறுகிறது. பெண் வீட்டார் மனமுவந்து தருகிற பணத்தைக் கூடப் பெற விரும்பாத முன்மாதிரி கணவர்களை 'சிவசங்கரி படைத்துக் காட்டுகிறார்'.

திருமண நிகழ்வுகளில் முதலிரவும் ஒன்று. ஆண், பெண் இருவருக்குள்ளும் நடைபெறும் அந்தரங்கங்களைச் சம்பிரதாயம் என்ற போர்வைக்குள் கொச்சைப் படுத்துவதை சிவசங்கரி விரும்பவில்லை. மனைவி கணவன் பெயரைச் சொல்வதில் தவறொன்றும் இல்லை என்ற நிலையில், பழமையான மூடநம்பிக்கையைத் தகர்க்கிறார்.

கணவன் தன் பெற்றோர்கள் மேல் பாசம் கொள்வதும், பராமரிப்பதும் கடமை எனப்பெறுகிறது. அதே கடமை மனைவிக்கு மறுக்கப் பெறுவது ஆணாதிக்க சமுதாயத்தில் காணப்பெறுவதாகும். கணவன் கடமை மதிக்கப்

பெறுவது போலப் பெண்களின் கடமையும் மதிக்கப் பெறவேண்டும் என்பது சிவசங்கரியின் சிந்தனையாகும்.

திருமணத்திற்குப்பின் கல்வி மற்றும் சொந்த விருப்பங்கள் குடும்ப நன்மை கருதி வரவேற்கப் பெறுவதில்லை. அவர்களின் விருப்பங்கள் மதிக்கப் பெற வேண்டும் என்பது சிவசங்கரியின் சிந்தனையாகும்.

குடும்பத்தில் கணவருக்கு நிகரான மதிப்பு மனைவிக்கு உண்டு. இருவருக்கும் குடும்பப் பொறுப்புகளில் சம பங்கு உண்டு. கணவன் ஆதிக்க நிலையில் இயங்குகிறபோது மனைவி சகித்தேதான் வாழ வேண்டுமா? என்ற வினாவை எழுப்பி, சிவசங்கரி சிந்திக்க வைக்கிறார்.

பொறுப்பில்லாத கணவன், பணத்திற்காகக் குணம் மாறும் பச்சோந்திக் கணவன், குணசீரழிவுள்ள கணவன் ஆகியோரை, சிவசங்கரி படைத்துக் காட்டும் 'மனைவிகள்' புறக்கணித்துத் தனித்தியங்கும் ஆற்றல் உடையவர்களாக உள்ளார்கள். ஆடவனைச் சார்ந்து பெண் இயங்க வேண்டுமென்பதில்லை என்ற கொள்கையில் தெளிவாகக் கருத்துத் தெரிவிக்கிறார்.

'கற்பு' என்ற பெயரில் வேண்டாத அந்நாளைய அளவுகோலை இக்கால வாழ்வியல் சூழலில் பொருத்திப் பார்க்க வேண்டாம் என்று குறிப்பிடுகிறார். கற்பு என்பது மனைவிக்கு மட்டுமல்ல கணவனுக்கும் தேவை என்ற நிலையில், "கற்பென்று சொல்லவந்தால் இரு சாதியினருக்கும் பொதுவில் வைப்போம்" என்ற பாரதியின் வாக்கை ஏற்றுக் கொள்ளுகிறார்.

இன்றயை வாழ்வியல் சூழலில் பெண்கள் அலுவலுக்காக வெளியுலகத் தொடர்பு பெறுகிறார்கள். அவள் தன்னைச் சுற்றியுள்ள 'சபலங்களுக்கிடையில்' வாழவேண்டிய நிலையில் கற்புடையவளாக இருப்பதே சிறந்தது எனக் குறிப்பிடுகிறார். இந்த உறுதிப்பாட்டில் ஆடவர்கள் தவறும்போது சிவசங்கரி நாவல்களில் அவர்களைப் புறக்கணித்து வாழ்க்கை நடத்தும் புதுமைப் பெண்களாகவே உள்ளனர்.

சந்தர்ப்ப சூழலால் பாதிக்கப் பெற்ற பெண் மணக்கப் பெறும் நிலையை சிவசங்கரி சமூகப்பார்வைக்கு வைக்கிறார். மு.வ. குறிப்பிடுவது போல 'ஒருத்தி ஒருவனை விட்டு இன்னொருவனுடன்வாழும்படியாக நேரலாம்.

ஒருவனை விடாமல் இன்னொருவனுடன் வாழ்வது தான்தவறு. எப்போது எவனுடன் வாழ்கிறாளோ அவனுக்குத் துரோகம் செய்யாமல் இருந்தால் போதும்', என்ற கற்புக் கோட்பாடு சிவசங்கரியுடன் இணைந்து நோக்கத் தக்கதாகிறது.

'விதவைத் திருமணத்தை' சிவசங்கரி தம் எழுத்துக்களின் வழி ஆதரிக்கிறார். பெண்கள் விதவைக்கோலத்துடன் இருக்கக் கூடாது. ஆண்கள் என்ன விதவன் கோலத்திலா இருக்கிறார்கள் என்ற வினாவை எழுப்பிச் சிந்திக்க வைக்கிறார். விதவைகள் (அமங்கலிகள்) தொடர்பான மூடநம்பிக்கைகளில் இருந்து மீட்சிபெற வேண்டும் என்பது சிவசங்கரியின் கருத்தாகும்.

குடும்பத்தில் 'குழந்தையின்மை' என்கிற பிரச்சினை உருவானால் மிகுதியாகப் பாதிக்கப் பெறுபவள் மனைவியே ஆவாள். இஃது சமூகத்தில் காணப்பெறும் நடைமுறை எதார்த்தமாகும். இத்தகு சூழலில் குழந்தையில்லாத மனைவியைக் கணவன் ஆதரவாக அரவணைப்பது போன்று சிவசங்கரி படைப்புக்களை உருவாக்கியுள்ளார். சிவசங்கரி முன்மாதிரிக் 'கணவர்களை'ப் படைத்துக் காட்டுவதின் நோக்கம் சமூகத்தில் இச்சூழல் உருவாக வேண்டுமென்பதே என்று மதிப்பிடலாம்.

* * * * *

# சான்றாதாரங்கள்


1. கதிர் மகாதேவன், மோகன் (ப.ஆ) பெண்ணியம், இ.ப.த.ம. வெள்ளிவிழா மலர், ப,1.

2. பிரேமா, பெண்ணியம், ப,3.

3. மேலது, ப,4.

4. மேலது, ப,5.

5. ஆர். பிரேமா, பெண்ணியம், ப,37.

6. எஸ். குருமூர்த்தி, திரு.வி.க.வின் பெண்ணுரிமையும் பெண்ணியமும், முப்பத்தோராம் கருத்தரங்க ஆய்வுக் கோவை – 2000, தமிழண்ணல் முதலியோர் (ப.ஆ), ப,1050.

7. Jawaharlal Nehru, All India Women's Conference on 24th Jan, 1954 at Kalyan.

8. சரோஜினி, ஔவையாரின் இருபாடல்கள் – ஒரு பெண்ணியப்பார்வை, முப்பத்தோராம் கருத்தரங்க ஆய்வுக் கோவை – 2000. தமிழண்ணல் முதலியோர் (ப.ஆ), ப,703.

9. சு. வேங்கடராமன், எண்பதுகளில் பெண்ணியம், நூலறிமுகம்.

10. Spacks, Patricia Meyer, The Femala Imagination, மேற்கோள் காட்டப் பெற்றது, ப,35.

    ஹரி. விஜயலட்சுமி, ராஜம் கிருஷ்ணன் புதினங்களில் பெண் மாந்தர், ப,63.

11. ஹரி. விஜயலட்சுமி, ராஜம் கிருஷ்ணன் புதினங்களில் பெண் மாந்தர், ப,66.

12. மேலது, ப,303.

13. ஜெயராணி ராஜதுரை, பெண்கள் படைப்பில் சமூகம், ப,255.

14. சி. சிவக்குமார், ஆய்வுக்கோவை (தொகுதி–1) (1994), ப,577.

15. சிவசங்கரி, கொஞ்சம் யோசிக்கலாமே, ப,143.

16. மேலது, ப,140.

17. சிவசங்கரி, கொஞ்சம் யோசிக்கலாமே, ப,147.

18. சிவசங்கரி, நான் நானாக, பக்,220–221.

19. சி. சுப்பிரமணிய பாரதி, பாரதியார் கவிதைகள் (வானதி பதிப்பகம்) ப,231.

20. சரளா ராஜகோபாலன், பாரதிதாசன் இலக்கியப்பெண்கள், ப,188.

21. பாரதிதாசன், பாரதிதாசன்கவிதைகள், (வீரத்தாய்).

22. மேலது, இருண்ட வீடு, ப,46.

23. சிவசங்கரி, நான் நானாக, ப,37.

24. சிவசங்கரி, என் கண்ணோட்டத்தில், ப,206.

25. பாரதிதாசன், பாரதிதாசன் கண்ணகிப் புரட்சிக் காப்பியம், பாடல் வரி 217.

26. சிவசங்கரி, நான் நானாக, ப,62.

27. சிவசங்கரி, பொய, பக்,22–23.

28. மேலது, ப,23.

29. சிவசங்கரி, வளர்த்த கடா, ப,16.

30. சிவசங்கரி, நான் நானாக, ப,64.

31. சிவசங்கரி, அதுசரி அப்புறம், ப,49.

32. சிவசங்கரி, பாலங்கள், ப,86.

33. சிவசங்கரி, இவர்களும் அவர்களும், ப,86.

34. சிவசங்கரி, நான் நானாக, ப,223.

35. மேலது, ப,222.

36. சிவசங்கரி, குமுதத்திற்கு அளித்த பேட்டி, 25.2.99, ப,122.

37. சிவசங்கரி, மண் குதிரைகள், பக்,99–100.

38. சிவசங்கரி, பொய், ப,135.

39. மேலது, ப,135.

40. சிவசங்கரி, என் கண்ணோட்டத்தில், ப,206.

41. சிவசங்கரி, மனம் கவர்ந்த மலேசியா (பயணக் கட்டுரைத்தொகுப்பு), ப,86.

42. மு.வ., கரித்துண்டு, ப,86.

43. சிவசங்கரி, மலையின் அடுத்த பக்கம், ப,221.

44. சிவசங்கரி, மலையின் அடுத்த பக்கம், ப,274.

45. சிவசங்கரி, உரத்த சிந்தனை, சிந்தனைத் தொடர், வாசுகி இதழ் (நவம்பர் பக்,16–30) ப,17.

# 8. முடிவுரை

சமுதாய மெய்மைகளைப் பதிவு செய்து வெளிப்படுத்தும் ஊடகங்களில் நாவல் இலக்கிய வகைக்குச் சிறப்பான இடம் உண்டு. சம காலத்தின் புற இயல்பை மட்டுமின்றி அகவியல்பையும் நாவல் இலக்கிய வகை காட்டுகிறது. அம்முறையில் செம்மைசார் நாவல் இலக்கியங்கள் (Classical Novel) உருவாகின்றன.

சமூகச் சூழலுடன் படைப்பாளரின் வாழ்க்கை அனுபவங்களும் படைப்பாக்கத்தில் பதிவு செய்யப் பெறுகின்றன.

சூரிய நாராயணன் – ராஜலட்சுமி ஆகியோரின் மகளான (14.10.1942) சிவசங்கரி பள்ளி இறுதிப் படிப்பில் தலை சிறந்த மாணவியாக விளங்கியவர். தாயாரின் தூண்டுதலினால் பாட்டு, நடனம் ஆகியவற்றில் ஆர்வம் காட்டியிருக்கிறார். இளமறிவியலில் (விலங்கியலில்) கல்லூரியில் முதலாவதாகவும், மாநிலத்தில், ஒன்பதாவதாகவும் தேர்ச்சி பெற்றவர். நடனப் போட்டிகளில் அகில இந்திய அளவில் வெற்றி பெற்றிருக்கிறார்.

இருவதாவது வயதில் தொழிலதிபராக விளங்கிய சந்திரசேகரைத் திருமணம் செய்தார். பின் போபாலில் மூன்றாண்டுகள் இருந்துவிட்டு, சென்னையிலேயே இருந்திருக்கிறார். சந்திரசேகரன் சிவசங்கரியின் எழுத்துலகப் பிரவேசத்திற்கு ஊக்கம் தந்த போதிலும் தொடர்ந்து தர வாய்ப்பில்லாமல் இறந்தார் (1984).

கல்கியில் 'அவர்கள் பேசட்டும்' (1969) என்ற சிறுகதையும் ஆனந்த விகடனில் 'எதற்காக' என்ற நாவலும் சிவசங்கரியின் முதல் படைப்புகளாக வெளி வந்தன. கணவரின் இறப்பிற்குப் பிறகு ஏற்பட்ட வேதனையிலிருந்து வெளிவர சிவசங்கரி முழு நேர எழுத்தாளராக மாறினார்.

சிறுகதைத் தொகுப்புகள், நாவல்கள், பயணக் கட்டுரைகள், கட்டுரைத் தொகுப்புகள், வாழ்க்கை வரலாறுகள் என்ற நிலையில் பலவித சாதனைகள் படைத்தவர் சிவசங்கரி.

கலை என்பது வாழ்க்கையின் ஓர் அம்சம். இரண்டும் ஒன்றோடொன்று இணை பிரியாதவை. ஆகவே கலை, கலைக்காகவே, கலை வாழ்க்கைக்காகவே

என்ற பாகுபாடு தேவையில்லை என்ற சிந்தனை உடையவர் சிவசங்கரி. எழுத்துக்களைச் சாதாரண மக்களுக்குக் கொண்டு செல்ல வேண்டும் என்ற நோக்கம் உடையவர்.

'கூடியவரை பேசுவது போல எழுவதுதான் உத்தமம்' என்கிற பாரதியாரின் அடிச்சுவட்டைச் சிவசங்கரி பின்பற்றுகிறார். எழுத்தாளர் 'வேடம் அணியாமல் இயல்பாக' இருக்க வேண்டும் என்பதில் ஆர்வம் உடையவர்.

சிவசங்கரி தன்னை அறிவு சார்ந்தவர் (Intellectual) என்று புகழ்வதை விரும்பவில்லை. மாறாக 'நடைமுறைப் புத்திசாலி' என்று கூறுவதை விரும்புகிறார். ஆண் எழுத்தாளர், பெண் எழுத்தாளர் என்ற பாகுபாட்டைத் தாண்டி, மனித நேயங்களுக்குக் குரல் கொடுப்பவராக எழுத்தாளர்கள் இருக்க வேண்டுமென்று கருதுகிறார்.

உணர்ச்சிகளை எழுத்தில் வடிக்கும் திறன், சமுதாயச் சிக்கல்களைப் புலப்படுத்தி, வாசகர்களிடம் பாதிப்பை ஏற்படுத்தும் திறன் சிவசங்கரியிடம் இயல்பாக ஓங்கியிருக்கிறது. எழுத்தாளர் ஆணா அல்லது பெண்ணா? புகழ் பெற்றவரா? வணிகப் பத்திரிக்கையில் எழுதுபவரா என்கிற அளவு கோல்களை அமைத்து விமர்சனம் செய்வதை எதிர்க்கிறார். எழுத்தாளரின் எழுத்தின் தரத்தை அடிப்படையாக வைத்து விமர்சனம் செய்தல் வேண்டும் என்ற கருத்து உடையவர்.

மாறிவரும் சமூகவியல் மற்றும் குடும்பவியல் சிந்தனைகளைச் சாதாரண மக்களுக்குக் கொண்டு செல்லும் முயற்சியில் இவர் வெற்றி பெற்றுள்ளார். பரிசுகளும் பாராட்டுதல்களும் பெற்றுச் சாதனைகளைப் படைத்துள்ளார். ஒலி, ஒளி நாடாக்கள் மூலம் முதலில் போதை மருந்தின் விளைவுகள், முதியோர் பிரச்சினைகள் குறித்துச் சமூகத்தில் விழிப்புணர்ச்சியூட்டுகிற அமைப்புகளையும் சிவசங்கரி நடத்தி வருகிறார்.

மறைந்த முன்னாள் பிரதமர்கள் இந்திரா காந்தி, ராஜிவ் காந்தி மற்றும் அன்னை தெரசா ஆகியோரைச் சந்தித்துப் பேட்டி கண்டவர். அவர்களின் வாழ்வில் இடம்பெற்ற சுவையான செய்திகளைப் பேட்டிகளின் வழி வெளிப்படுத்தியுள்ளார்.

பயணக் கட்டுரைகள் எழுதுவதில் சிவசங்கரி தனித்திறம் வாய்ந்தவர். திரு. ராஜிவ் காந்தியுடன் இருமுறை வெளிநாடுகளுக்குச் சென்று உருவாக்கிய நூல் பலரின் பாராட்டுதல்களைப் பெற்றதுடன் ஜப்பான் மொழியில் மொழி பெயர்க்கப் பெற்றமை கருதத்தக்கது.

இந்திய மொழிகளில் தலை சிறந்து விளங்கும் எழுத்தாளர்களைப் பேட்டி கண்டு, "மொழிகளின் மூலம் இந்திய இணைப்பு" என்று புதுமையாகச் சிந்தித்தவர்.

சமூகப் பணி மற்றும் எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் நோக்கத்துடன் 'அக்னி' என்ற அறக்கட்டளையைத் தோற்றுவித்துள்ளார். தேசிய அளவிலும் மாநில அளவிலும், பல உயர்மட்டக் குழுவில் இருந்து சமுதாய மேம்பாட்டிற்கு ஆக்கபூர்வமான சிந்தனைகளை வழங்கியுள்ளார். பல்கலைக்கழகங்களில் உறுப்பினராக இருந்து கல்வி மேம்பாட்டிற்கும் கருத்துக்களை வழங்கியுள்ளார்.

மனித சமூகத்தின் பரிணாமத்தில் "குடும்பம் தொன்மையான நிறுவனமாகும் (Institution)". குடும்ப உருவாக்கம் பல படிநிலைகளில் சமுதாய மரபுகள், குழு மரபுகள், பழக்க வழக்கங்கள் ஆகியவைகளைச் சார்ந்து அங்கீகாரம் பெறுகிறது.

ஓர் ஆணும் பெண்ணும் சமுதாய மரபுப்படி, திருமண வாழ்க்கையில் ஈடுபடும் பொழுது குடும்பம் என்னும் அங்கீகாரம் சமுதாயத்தின் அகவயக் கருத்தாக்கத்தின் வழி (Emic Concept) உருவாக்கம் பெறுகிறது.

திருமணத்திற்கு முந்தைய நிலை காதலாகும். திருமணம் குடும்ப உருவாக்கத்தின் இரண்டாம் நிலையாகும். திருமண விதிகள் விலக்குதல் (Prohibition) முன்னுரிமை (Preference) விதியமைப்பு (Prescription) என முத்திறத்தின. தாய் தந்தையர் பேசி முடிக்கும் நிலையில் மரபுத் திருமணமும், மீறிய நிலையில் மரபு மீறிய திருமணமும் அமையும். இவைகளைச் சார்ந்தமையும் மறுமணம் சாதியப் பழக்கங்களுடன் நெருங்கிய தொடர்புடையன.

குழந்தைவளர்ப்புநிலை குடும்பத்தின் மூன்றாம் நிலையாகும். குழந்தைகளைச் சமூக வயமாக்குதல் (Socialization) இந்நிலையின் மையப்பணியாகும். குழந்தைகளைத் தனிக்குடும்பம் உருவாக்கும் நிலைக்கு தகுதியாக்கியபின் முதிர்ச்சி நிலைமை அமையும்.

குடும்ப வகைப்பாட்டில் கூட்டுக்குடும்பம் தொன்மையானது. தற்காலச் சூழலில் அக்குடும்பம் இருக்க வாய்ப்பில்லாமல் மற்றொரு வகையான தனிக்குடும்ப வகையே பரவலாக உள்ளது. சமதர்மக் கொள்கைச் சார்ந்த சமுதாயப் போக்கு (Socialistic Pattern of Society) பழைய கூட்டுக் குடும்பத்தின் வரையறுக்கப் பெற்ற கடமைகளை நிறைவேற்றுகிறது.

குடும்பம் சமுதாய அலகாகவும் (Social unit), பொருளாதார அலகாகவும், (Economical unit), வாழ்வியல் மரபுகளைக் (Values of life) காத்துவரும் பெட்டகமாகவும் விளங்குகிறது.

குடும்பத்தில் நிலவும் உறவுமுறைகள் இயங்க வேண்டிய நிலை சமூகத்திற்குச் சமூகம் மாறுபடும். துவக்கத்தில் விலக்குகள் (Taboo) குடும்ப உறவுகளின் உருவாக்கத்திற்கும் இயக்கத்திற்கும் ஆதாரமாக இருந்தன.

தமிழ்ச் சமூகத்தில் குடும்பம் இல்லறம் எனச் சிறப்பிக்கப் பெறும். அறமும் பண்பும் உடைய குடும்பமே பயன் உடைய வாழ்வென்பது வள்ளுவம்.

பண்டைத் தமிழர் வாழ்வில் ‘களவு’ (காதல்) வாழ்வு அறப்படுத்தப் பெற்று, ‘கற்பு’ வாழ்க்கையாகியது. தொல்காப்பியர் காலத்தில் கரணம் (திருமணம்) இடம் பெற்று, சிலப்பதிகார காலத்தில் திருமணச் சடங்குகள் இடம் பெற்றிருந்த நிலை தெளிவாகிறது. பிற்காலங்களில் சடங்குகள் சாதியத்துடன் இணைந்து இறுக்கமாயின.

குழந்தை வளர்ப்பு, பெற்றோர்களின் கடமை. குழந்தைகளை அவையத்து முந்தியிருப்பச் செய்தலும், சான்றோன் ஆக்குதலும் பெற்றோரின் கடமையாகும். ஆணாதிக்கச் சமுதாயத்தில் பெண் குழந்தைகளுக்குக் கல்வி வாய்ப்புக் குன்றி, பண்பாட்டுப் பதிவுகள் மட்டும் வழங்கப் பெற்றன.

குடும்பத்தின் முதிர்ச்சிநிலையில் கணவன் இறந்தால் மனைவி விதவையாகிறாள். விதவைகளுக்குத் தமிழ்ச் சமூகத்தில் ஆதரவு இல்லை. ‘மணமுறிவு’ முறை சாதிக்குச் சாதி மாறுபடும்.

குடும்பத்தில் குழந்தையின்மை என்ற பிரச்சினை கணவனுக்கும், மனைவிக்கும் பொதுவாக இருந்தாலும், வெகுவாகப் பாதிக்கப்பெறுபவள் மனைவியாக (பெண்ணாகவே) இருப்பாள். வளர்ந்து ஆளாக்கப் பெற்ற குழந்தைகள் குடும்ப உருவாக்கத்திற்குத் தகுதி பெறுகிறார்கள்.

இருவகையான குடும்ப அமைப்புகளில் கூட்டுக்குடும்பம் விவசாயம் சார்ந்த கிராமப்புறத்திலும் தனிக்குடும்பம் நகர்ப்புறச் சமுதாயத்திலும் காணக் கூடியதாகும்.

தமிழ்ச் சமூக அமைப்பில் ‘கற்பு’க் கோட்பாடு பெண்களுக்கு வற்புறுத்தப் பெறுகிறது. தமிழ்ச் சமூகம் தந்தைவழிச் சமூகமாக இருப்பதும் இங்கு கருத்திற்குரியதாகும். ஆண், பெண் இருபாலருக்கும் கற்பைப் பொதுவில் வைக்க வேண்டுமென்பது சான்றோர்கள் சிந்தனையாகும். பெண்கள் தங்கள் உரிமைகள் குறித்த விழிப்புணர்ச்சி (பெண்ணியம்) அண்மைக்காலத்தில் பரவலாகி வருகிறது.

புதிய குடும்பம் உருவாக்கத்தில் பெண் கணவன் வீட்டிலேயே இருப்பதற்குத் தந்தை வழிச் சமூக அமைப்புக் காரணமாகிறது. ஆடவர் மட்டுமின்றி, பெண்களும் பொருள் ஈட்டும் நிலை அண்மைக் காலத்தில் இயல்பாகிறது. ஆணாதிக்க வளர்ச்சி தொடர்ந்தே வருகிறது.

இருவர்க்காக குடும்பம் தோன்றி, சிலருக்கு உரியது போல விரிந்து, பிறருக்காக வாழ்க்கை நடத்துவதே குடும்பம் என்கிற சிந்தனை தொல்காப்பியர் காலத்திலிருந்தே இருந்திருக்கிறது. சங்க இலக்கியங்களில் குறிக்கப்பெறும் சுற்றம் வள்ளுவரின் குடிசெயல் வகையுடன் தொடர்பு பெறுகிறது.

குடும்ப உறவுகளில் கணவன்–மனைவி உறவு கருப்பகுதி. தந்தை வழிச் சமூக அமைப்பில் கணவன் வழிக் குடும்ப உறவுகள் முதன்மை பெறும். கூட்டுக் குடும்பத்தின் உறவுகளில் பெருக்கம் உணர்ச்சிகள் மற்றும் உறவுகளின் இயக்கம் குறித்த வாழ்வியல் மதிப்புகள் அண்மைக்காலத்தில் மாறிவரும் சமூக அமைப்பில் முரணுக்குள்ளாகின்றன.

குடும்பம் மற்றும் குடும்ப உறவில் அகத்தில் அன்பும், புறத்தில் அறமும் இருப்பது நல்ல குடும்பம் அல்லது சமுதாயத்தின் அடையாளமாகும்.

சமுதாயத்தில் குறிப்பிடத் தகுந்த அங்கம் வகிக்கும் 'குடும்பம்' குறித்துப் பெண் எழுத்தாளரான சிவசங்கரி தம் நாவல்களில் அழுத்தமாகப் பதிவு செய்திருக்கிறார். எதார்த்த சூழலை மையமிட்டு எழுதும் சிவசங்கரி தம் படைப்புக்களில் தம் கருத்துக்களையும் இழையோட வைத்துள்ளார். மாற்றிடைக் காலத்தில் உருவாகும் சிக்கல்களுக்கு அவ்வகைக் கருத்துக்கள் தீர்வுகளாக உள்ளன. அவைகள் வருமாறு.

குடும்பத்தில் கணவன்–மனைவி இருவரும் அன்பு மற்றும் மரியாதைகளை ஒருவருக்கொருவர் கொடுத்து வாங்க வேண்டும். விட்டுக் கொடுத்தல், ஒருவரையொருவர் புரிந்து கொள்ளுதல் ஆகிய இயல்புகளைக் கடைப்பிடித்தால் குடும்பத்தில் சிக்கல் எழ வாய்ப்பில்லை என்கிறார். இக்கருத்தில் கணவனுக்கும் மனைவிக்கும் சமத்தகுதி இருக்கக் காணலாம். யாரும் யாரையும் ஆதிக்கம் செலுத்துவதை சிவசங்கரி விரும்பவில்லை.

குடும்பத்தில் தவறு இருப்பின் மன்னிப்பதும் நல்லதை எடுத்துத் தீயதை விலக்குவதும் நல்ல குடும்பத்தின் செயல்பாடாகும், என்று சிவசங்கரி குறிப்பிடுகிறார். சிக்கல்களைத் தவிர்க்க நேர் எண்ணங்களை (Postiive Thinking) வளப்படுத்துமாறு நெறிப்படுத்துகிறார்.

குடும்ப இயக்கத்தில் பெண்களின் பங்கு மிகுதி. எனினும் கணவரை அரவணைத்துச் செல்வதில் அருங்குணங்களைப் பெண் (மனைவி) பெற்றிருக்க வேண்டும். கணவன்–மனைவி முரண்கள் நான்கு சுவர்களுக்கு அப்பால் போகக் கூடாது என எச்சரிக்கிறார்.

தந்தைவழிச் சமூகத்தில் ஆணாதிக்கம் இருக்கிறது. கணவன் வழிக் குடும்பமும், மனைவி வழிக் குடும்பமும் சரி நிகர் நிலையாகக் கருதப்பெற வேண்டுமென்று சிவசங்கரி வலியுறுத்துகின்றார்.

சிவசங்கரி பெண்கள் பொருள் ஈட்டலுக்காக வேலைக்குச் செல்வதை வரவேற்கவில்லை. கணவன் பொருள் ஈட்டுகிறான். மனைவி குடும்பத்தைக் கவனித்துக் கொள்கிறாள். குடும்பப் பராமரிப்புப் பொருள் ஈட்டலுக்கு இணையானது என்று குறிப்பிடுகிறார்.

குடும்ப உருவாக்கத்தில் உள்ள நான்கு நிலைகளில் முதல் நிலை காதலுடன் தொடர்புடையது. காதல் பற்றிய மதிப்பு (Value) காலச் சூழலுடன் தொடர்புடையது. அழகு மட்டும் காதல் தோன்றுவதற்குரிய நிலைக்களன் இல்லை. குணம் மற்றும் எளிமை ஆகிய குணங்களும் தேவையானதாகும். குறிப்பாக, இயற்கையாகத் தாமாக எழுவது என்று சிவசங்கரி குறிப்பிடுகிறார். மனத்துடன் தொடர்புடைய காதலே சிறந்தது. காமம் சார்ந்த காதல் வரவேற்பதற்கில்லை. ஆன்மச் சங்கமம் என்கிற உயர்காதலை சிவசங்கரி எடுத்துரைக்கிறார்.

சிவசங்கரி சித்தரித்துள்ள காதல் பற்றிய நாவல்களில் காதலர்கள் திருமணத்தில் சங்கமமாவதை எடுத்துரைத்துள்ளார். அவ்வகையில் நிறைவேறும் காதலை மிகுதியாகக் குறிப்பிட்டுள்ளார் என் மதிப்பிடலாம். காதல் நிறைவேறுதல் என்கிற நேர்எண்ணம் (Positive Thought) சிவசங்கரியிடம் இருப்பதாக மதிப்பிடலாம்.

நிறைவேறும் காதலில் இருமனக் காதலை வற்புறுத்திக் காதலர்களிடம் ஒத்த உணர்வு இருக்க வேண்டுமென்று சிவசங்கரி குறிப்பிடுகிறார். உறவினர்களிடையே தோன்றும் காதலை சிவசங்கரி வரவேற்கவில்லை. அறிவியல் பரிணாமம் பெற்றுள்ள இக்காலத்தில் உறவுத் திருமணங்கள் வரவேற்கப் பெறாத நிலையை, சிவசங்கரி நாவலில் பதிவு செய்துள்ளதாக மதிப்பிடலாம். அறிமுகமில்லாத ஆணும் பெண்ணும் சந்தித்துக் கொள்ளும் காதல் தனித்தன்மை மிகுந்தது என்று எடுத்துரைக்கிறார்.

உறவு இல்லாதவர்களிடம் தோன்றும் காதல் சாதி மற்றும் சமயம் சார்ந்தும் அமையலாம். சிவசங்கரி காதலை மனம் சார்ந்ததாக கருதுவதால் வெவ்வேறு சாதி, இனம் சார்ந்தமையும் காதல்களை வரவேற்கிறார். அவ்வகையில் கலப்பு மணத்தை ஆதரிக்கும் சமூக முற்போக்குச் சிந்தனை உடையவராக இருப்பதை அறியலாம்.

சமய வேறுபாடு சார்ந்து காதல் அமைந்தால் சமய மாற்றம் தீர்வாக இருக்க வேண்டும் என்கிற சூழலை சிவசங்கரி எதிர்க்கிறார். அவரவர் சமயம் சார்ந்து குடும்பம் நிகழ்த்துகிற தனித்துவத்தை எடுத்துரைக்கிறார்.

சிவசங்கரியின் காதலில் கலப்பு மணத்தில் பெண்கள் வெற்றி பெறுபவர்களாக உள்ளனர். சிவசங்கரியின் பெண்கள் தம் காதலைப் பெற்றோர்களிடம் எடுத்துரைக்கும் துணிவு பெற்றவர்கள். அப்பெண்கள் கல்வி கற்றவர்களாவும் நகரத்தைச் சார்ந்தவர்களாகவும் இருப்பது கருதத்தக்கதாகும்.

மன அழகிற்கு முதலிடம் தரும் நிலையில் உயர்காதல் சிவசங்கரியால் சிறப்பிக்கப் பெறுகிறது. இவ்வகைக் காதலில் உடல் அழகு கேள்விக் குறியாகிறது.

நிறைவேறாக் காதலை சிவசங்கரி மிகுதியாகத் தம் நாவல்களில் பதிவு செய்யவில்லை. பெண்களிடம் தோன்றிய காதலை ஆடவர் மறுக்கும் நிலையைப் பதிவு செய்துள்ளார். காதலை ஆடவர் புனிதமாகக் கருதாத நிலையில் பெண்கள் பாதிக்கப்படுவதை நிறைவேறாக் காதல்வகை நாவல்களில் சித்தரித்துள்ளார்.

திருமண வாழ்வின் அடிப்படை மன ஒழுங்காகும். அவ்வொழுங்கு வாழ்க்கையில் ஏற்படும் பலவகை அனுபவங்களில் ஏற்றுக்கொள்ள வேண்டியதை ஏற்றும், ஒதுக்க வேண்டியதை ஒதுக்குவதும் என்ற நிலையில் வாழ்க்கையைக் கலையெனக் கூறுகிறார்.

பெண்களுக்குத் திருமண வயது பதினெட்டிற்கு மேல் உள்ள பருவமாகும். அழகும் இளமையும் உடைய இப்பருவமே திருமணத்திற்கு ஏற்ற பருவம் என்பது சிவசங்கரியின் சிந்தனையாகும். திருமண வாழ்வில் இப்பருவம் தப்பித் திருமணம் செய்வதால் சிக்கல்கள் எழலாம் எனக் குறிப்பிடுகிறார். ஆண்களைவிடப் பெண்கள் திருமண வயது குறைவாக இருக்கும் நிலை நடைமுறை எதார்த்தத்தின் பிரதிபலிப்பென மதிப்பிடலாம். நடைமுறையில் பெண்களைப் பெற்றவர்கள் அச்சம் கலந்த பொறுப்புணர்வைப் பெற்றிருப்பதை சிவசங்கரி தம் நாவல்களில் பதிவு செய்கிறார்.

சிவசங்கரி படைத்துக் காட்டும் இளஞ்சமூகம் சார்ந்த பாத்திரங்கள் வரதட்சணையில் ஆர்வம் காட்டவில்லை. மூத்த தலைமுறையினரிடம் இருக்கும் எண்ணங்கள் படிப்படியாக அகற்றப்பெற வேண்டுமென்று சிவசங்கரி கருத்து தெரிவிக்கிறார். இலட்சியப் பெற்றோர் பாத்திரங்களை (Ideal Characters) முன் மாதிரியாகப் படைத்துக் காட்டி (Model Characters)

வரதட்சணை வாங்காத இயல்பைப் பல நாவல்களில் சிவசங்கரி சித்தரித்துக் காட்டுகிறார்.

திருமணத்திற்கு முன்புள்ள காதல் நிலையில் மேன்மைக் (முற்போக்கு) கருத்துக்களை சிவசங்கரி ஒலிக்கச் செய்துள்ளார். இருப்பினும் சிவசங்கரி படைப்புகளில் மூத்த தலைமுறையினரிடம் மரபியல் கருத்துக்கள் கோலோச்சுகின்றன. இளந்தலைமுறையினர் அந்நிலையிலிருந்து மீட்சி அடைவது மாதிரியான சூழல்கள் உள்ள குரலை சிவசங்கரி ஒலிக்கச் செய்யவில்லை. திருமணத்தில் நிலவுகிற விதிக் கொள்கைகளைப் புறக்கணிக்கிற நிலையில் இளந்தலைமுறைப் பாத்திரங்களை சிவசங்கரி சிந்திக்க வைக்கவில்லை.

சிவசங்கரி பெரும்பாலான தம் நாவல்களில் திருமணமானவர்களைச் சுற்றிக் கதைப் பின்னலை அமைத்துள்ளதால் குடும்பம் சார்ந்த நாவல்களுக்குச் சிறப்பிடம் தந்துள்ளமை பெறப்பெறுகிறது. ‘குடும்பச் சக்தி மாற்றத்திற்குரிய’ சிக்கல்களையும் தீர்வுகளையும் தெளிவாகச் சிந்திப்பதற்குரிய திறனும் அவரிடம் இயல்பாக உள்ளது. மூத்தோர் இசைவுடன் நிகழும் திருமணம் மரபு சார்ந்த திருமணமாகும்.

இத்திருமணத்தில் மரபு சார்ந்த சம்பிரதாயங்கள் நாவல்களில் கதைப் போக்கில் மிகுதியாக எடுத்துரைக்கப் பெறுகின்றன. குடும்ப மாந்தர்கள் பழமையிலிருந்து மீள முடியாத எதார்த்தத்தின் பிரதிபலிப்பை முற்சுட்டிய நிலை குறிப்பதாகக் கொள்ளலாம். மரபு சார்ந்த திருமணத்தில் முதல் மணம் சார்ந்தவைகளை மிகுதியாக எடுத்துரைக்கிறார். மறுமணம் புரிவதாக நாவல் சித்தரிப்பு அமைந்தாலும் இவ்வகையில் மறுமணம் புரிவோரில் ஆடவரே மிகுந்திருக்கின்றனர். இந்நிலை நடப்பியல் வாழ்வில் எதார்த்தமானதாக உள்ளது.

மூத்தோர் இசைவுடன் நிகழுகின்ற மரபு மணத்தை மிகுதியாகப் படைத்துக் காட்டுவதின் மூலம் இவ்வகைத் திருமணத்தைச் சிவசங்கரி ஆதரிப்பதாக மதிப்பிடலாம்.

குடும்பத்தில் குழந்தை வளர்ப்பு நிலை மூன்றாவது நிலையாகும். தனிக் குடும்பம் சார்ந்த நாவல்களில் (28) குழந்தைகளைப் பற்றிய செய்திகளை (16) எடுத்துரைக்கின்றார். குழந்தை வளர்ப்பில் பழமை வழக்கங்களை நீக்கி,

அறிவியல் தளத்தில் சிந்திக்க வைக்கிறார். எடுத்துக்காட்டாக, குழந்தைக்கு எண்ணெய் கொடுத்தல், உச்சிக்கு வைத்தல், மை இடுதல், கண்ணுக்கு எண்ணெய் கட்டுதல் போன்ற மரபியல் பழக்க வழக்கங்களை வரவேற்கவில்லை. குழந்தை வளர்ப்பில் பெண்களின் பங்கு, மிகுதியாக இருந்தாலும், ஆடவர்க்கும் குழந்தை வளர்ப்பில் பங்கு உண்டு என்பதில் உறுதியாக இருக்கிறார்.

ஆயாக்கள் பொறுப்பில் குழந்தைகள் வளர்க்கப் பெறக்கூடாது. பெற்றோர்களின் பொறுப்பில் வளர்க்கப்பெறும் போது தான் பாசம் மற்றும் உறவுகளின் இயல்பு புரிய ஏதுவாகும் என்பதில் உறுதியாக இருக்கிறார்.

குழந்தை வளர்ப்பில் தாய் செல்லம் காட்டினாலும், தந்தை நெறிப்படுத்த வேண்டும். செல்லம் கொடுக்கும் நிலை குழந்தைகளின் எதிர்கால வாழ்வைப் பாழடித்து விடும் என்ற சூழலை உணர்த்தும் வகையில் சிந்தனைகளைத் தம் நாவலில் சிவசங்கரி பதிவு செய்துள்ளார்.

குழந்தைகளின் உணர்வுகளைத் தந்தை புரிதல் வேண்டும். தாய் குழந்தைகளிடம் தாயாக மட்டுமன்றி, நட்புணர்வுடன் செயல்பட வேண்டும். மேலும் பெற்றோர்கள் தங்கள் ஆசைகளைக் குழந்தைகளின் மேல் திணிப்பது தவறு. இக்காலக் குழந்தைகளிடம் மனதிலேயும் உடம்பிலேயும் வயதிற்கு மீறிய வளர்ச்சி இருப்பதைப் பெற்றோர்கள் புரிந்து செயல்பட வேண்டியதின் தேவையைச் சிவசங்கரி தெளிவாக எடுத்துரைக்கிறார்.

கூட்டுக் குடும்பத்தை சித்தரிப்பதாக அமையும் சிவசங்கரி நாவல்களில் பன்னிரண்டு நாவல்களில் குழந்தை பற்றிய செய்திகள் கதைப்போக்கில் கூறப்பெறுகின்றன. கூட்டுக் குடும்பத்தில் குழந்தை வளர்ப்புப் பெண்களுக்குக் கென்று பேசப் பெற்றிருந்த நிலை எடுத்துரைக்கப் பெறுகிறது.

கணவன் தீய பழக்க வழக்கங்களுக்கு ஆட்பட்டும், பிற நிலைகளில் மனைவியைப் புறக்கணித்தால் பெண்கள் தன்னம்பிக்கையுடன் குழந்தைகளை வளர்ப்பதில் முனைப்புக் காட்ட வேண்டும் என்று சிவசங்கரி குறிப்பிடுகிறார். அவனைச் சார்ந்து வாழாமல் தனித்தியங்குகிற உழைப்புடன் கூடிய தன்னம்பிக்கையும் மன உரமும் புதுமைப் பெண்களுக்கு வேண்டும் என்பதைத் தம் நாவல்களில் உறுதியாக வெளிப்படுத்துகிறார்.

குடும்பத்தில் முதிர்ச்சி நிலை நான்காவது நிலையாகும். கணவன்–மனைவி இணைந்து வாழ்ந்து குழந்தைகளை உருவாக்கி, அவர்களுக்கும் திருமணம் நடத்தும் நிலையை எய்துதல் முதிர்ச்சி நிலையாகும். இந்நிலையை நான்கு நாவல்களில் எடுத்துரைக்கப் பெறுகிறது. கணவனின் மிகைப் பாலியலில் வெறுப்புற்றுப் பிரிந்து வாழும் மனைவியர்களையும் சிவசங்கரி தம் நாவல்களில் பதிவு செய்துள்ளார். அவர்கள் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாட்டில் கணவன்மார்கள் விலகியதால் கணவனால் பிரிந்து வாழ்கிறார்கள். அவ்வகையில் சிவசங்கரியின் மனைவிகள் (பெண்கள்) ஒருவன்–ஒருத்தி கோட்பாட்டிற்கு முதன்மை கொடுப்பதாகக் கொள்ளலாம்.

கூட்டுக் குடும்பத்தையொட்டிய நாவல்களில் முதிர்ச்சி நிலை மிகுந்திருப்பதை ஆய்வின் வழி பெற முடிகிறது. வயது முதிர்ந்தவர்களிடம் குடும்பத்தில் தலைமைப் பொறுப்பேற்று நடப்பதும் வெளிப்படுத்தப் பெறுகிறது.

முதிர்ச்சி நிலையில் குடும்பத்தில் மனைவி இறந்த பின்னும், கணவனால் பொறுப்புகளை நிர்வகிக்க முடியும் என்கிற சிந்தனைகளையும் சிவசங்கரி முன்வைக்கிறார். இதே நிலை கணவன் இறக்கும் சூழலில் மனைவி கடைபிடிக்கும் நிலையில் குடும்பம் சோர்வைத் தாங்காமல் பயன் பெறும் என்பது உணர்த்தப் பெறுகிற சிந்தனையாகும்.

ஆய்விற்குட்படுத்தப் பெற்ற சிவசங்கரியின் நாவல்களில் தனிக்குடும்பம் சார்ந்த நாவல்கள் மிகுதியாக உள்ளன.

தனிக்குடும்பத்தில் கணவன், மனைவி தவிரக் குழந்தை ஒன்றாவது இருக்கும். சிவசங்கரி தனிநபர் திருத்தத்திற்கு முதன்மை கொடுப்பார். அவ்வகையில் குடும்பத்திலிருந்து தனிநபர் திருத்தம் முகிழ்க்க வேண்டுமென்று விரும்புகிறார்.

மிகைப்பாலியல் ஆர்வம், வக்கிரபுத்தி, வசதி மற்றும் ஆடம்பரம், ஆதிக்க உணர்வு என்ற நிலைகளில் கணவனைச் சார்ந்து தனிக்குடும்பத்தில் சிக்கல்கள் முகிழ்ப்பதை, சிவசங்கரி தம் நாவல்களில் பதிவு செய்துள்ளார்.

கணவன் மனித குணங்களுடன் மனைவியுடன் பழகும்போது இல்லறம் இனிமையாகும். மிருகக் குணங்களுடன் கணவன் இருப்பின், மனைவி பொறுமையாக இருப்பாள். பொறுமை மேலும் சோதிக்க பெறும் போது

கணவனிடமிருந்து பிரிந்துவிடலாம் என்று சிவசங்கரி விரும்புகிறார். அவ்வாறு பிரிவது கூட மனைவியின் மனமகிழ்ச்சிக்காக அல்ல, குழந்தைகளை உருவாக்க வேண்டியத் தேவையில் இன்றியமையாத் தேவையாகவும் தியாகமாகவும் மிளிர்கிறது.

நெறிபிறழ்ந்து நடக்கும் கணவன் திருமணத்தைப் புனிதமாகக் கருதாத நிலையில் பணத்தைத் தேவையாகக் கருதினார். மனைவி அடங்கி வாழாமல் தனித்து வாழ்வது பற்றிய தீர்வை சிவசங்கரி முன்வைக்கிறார். கணவன் ஆதிக்க உணர்வோடு குடும்ப அமைதியைக் குலைக்கும் நிலையிலும் கணவனைச் சாராமல் தனித்தியங்கும் மனைவிமார்களை, சிவசங்கரித் தம் நாவல்களில் படைத்துக் காட்டுகிறார்.

பொதுவாக மதிப்பிடும்போது கணவனிடமிருந்து, குடும்பத்திலிருந்து பிரியும் மனைவியர் தம் மனமகிழ்ச்சி மற்றும் விருப்பு வெறுப்புக்களை மட்டும் கருத்தில் கொள்ளவில்லை. குழந்தைகளைஉருவாக்கும் கடமையில் தியாகம் மிளிர்வதைக் கருத்தில் கொள்ளலாம். நிம்மதி, சுயமரியாதை போன்றவை குடும்பத்தின் வழி பிரிதல் நல்லது என்று தீர்வு தருகிறார்.

புகழ் போதையில் மயங்குதல், வசதியான வாழ்வில் மோகம் கொள்ளுதல், கனவு மற்றும் கற்பனைகளோடு வாழ்தல், கணவனை மதிக்காமை, குடும்பத்தில் பொறுப்பின்மை போன்ற நிலைகளில் தனிக்குடும்பத்தில் மனைவியைச் சார்ந்து அமையும் சிக்கல்களை சிவசங்கரி சித்தரித்துள்ளார்.

புகழ்போதை மயக்கம் குடும்பத்தைச் சீர்குலைக்கும். குறிப்பாக, அலுவலகங்களில் விழிப்புணர்வுடன் இருந்தால்தான் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள இயலும் என்பதில் சிவசங்கரி தெளிவாக இருக்கிறார். வசதியான வாழ்க்கை மோகத்தில் குடும்பத்தில் 'புரிதல்' உணர்வு குறைந்து 'தான்' உணர்வு ஓங்கும் என மனைவியர்களை எச்சரிக்கிறார். கனவுகளும், கற்பனைகளும் எதார்த்தமான குடும்பச்சூழலில் பெண்களிடம் வரவேற்பதற்கில்லை. கணவனை மதிக்காத மனைவியால் குடும்பமும் குழந்தைகளும் நிலைகுலைந்து விடும்.

தனிக்குடும்பத்தில் கணவன்-மனைவி இருவரும் விட்டுக் கொடுத்தும், அனுசரித்தும் வாழ்கிறபோது சிக்கல்கள் எழ வாய்ப்பில்லை.

'குழந்தையின்மை' சிக்கலில் பாதிக்கப்பெறும் மனைவியிடம் கணவன் ஆதரவாக இருக்க வேண்டும். குழந்தையின்மைக்குக் கணவன் காரணியாக இருந்தாலும் பெரிதுபடுத்தாத முன்மாதிரி மனைவியரைச் சிவசங்கரி தம் நாவல்களில் சித்தரித்துக் காட்டியுள்ளார். குழந்தை இன்மையைச் சார்ந்து வழிபாட்டு நம்பிக்கைகளுக்கு, சிவசங்கரி முதன்மை கொடுக்கவில்லை.

சிவசங்கரியின் வாழ்க்கையில் குழந்தையின்மை சிக்கல் இருந்தது. அச்சிக்கல் சார்ந்த ஆழ்மன வெளிப்பாடு அவரது நாவல்களில் பதிவு பெற்றுள்ளதால் உளவியல்வழி ஆய்வதற்கு நிறைந்த வாய்ப்புண்டு.

குழந்தைகளை வளர்ப்பதில் கணவன் மனைவி இருவருக்கும் பொறுப்புக்கள் உண்டு. தாயன்பு குழந்தைகளுக்கு அளவாக இல்லாவிடின் குழந்தைகளின் வாழ்க்கைப் பாதிப்படையும் என்றும் எச்சரிக்கை செய்கிறார் சிவசங்கரி.

இரத்த உறவுள்ளவர்கள் ஒரு கூரையின் கீழ் கூடிவாழ்வது கூட்டுக் குடும்பமாகும். தந்தைவழிச்சமூகத்தினைச் சார்ந்தது கூட்டுக் குடும்பம். ஆகையால் மூத்தோர்களைச் சார்ந்த ஆணாதிக்கமும், பாரம்பரிய மதிப்புக்களும் சிறப்பிடம் பெறும்.

சிவசங்கரி சித்தரிக்கும் கூட்டுக் குடும்பத்திற்கான களங்கள் நகரங்களாகும். மாறிவரும் சமூகச் சூழலுக்கேற்ற நிலை முற்சுட்டிய கருத்தில் பிரதிபலிக்கக் காணலாம்.

கூட்டுக் குடும்ப நாவல்களில் கணவன்வழி உறவினர்கள் மிகுந்திருப்பது போலச் சித்தரிப்பது நடைமுறை எதார்த்தமென மதிப்பிடலாம். கூட்டுக் குடும்பத்தில் கணவன்-மனைவி இருவரில் மனைவியே மிகுந்த அளவு பாதிப்பிற்குள்ளாகிறாள். மாமனார், மாமியார், கணவன், கணவன் வழி உறவினர் என்ற நிலைகளில் மனைவி முரண்பாடுகளைச் சந்திக்க வேண்டிய நிலையில் உள்ளாள்.

சிவசங்கரி காட்டும் கூட்டுக் குடும்பத்தில் கணவன்-மனைவியைப் புறக்கணிக்க, மாமனார்-மாமியார் அரவணைக்கும் இலட்சியச் சித்தரிப்புக் காட்டப் பெறுகிறது. சிவசங்கரி படைத்துக் காட்டும் மாமனார் பாத்திரங்கள் மருமகளுக்கு ஆதரவாக உள்ளமை கருதத்தக்கதாகும்.

குணவறுமையான மாமியார், கலப்பு மணத்திற்காக முரண்படும் மாமியார், நெறிபிறழ்ந்த மகனை ஆதரிக்கும் மாமியார், இரண்டாம்தார மாமியார், கடமைக்கு உரிமை மறுக்கும் மாமியார், மதச்சடங்குகளுக்காக முரண்படும் மாமியார், எனப் பல குணாதிசயச் சித்தரிப்புக்களில் மாமியார்கள் - மருமகள்கள் முரண்படுவது சிவசங்கரி நாவல்களில் பதிவு செய்யப் பெற்றுள்ளன. சிவசங்கரி பெண் எழுத்தாளராக இருப்பதால் மாமியார்-மருமகள் உறவுகளை நன்கு அலசி ஆராய்ந்து நாவலாக்கம் செய்துள்ளதாக மதிப்பிடலாம்.

கணவனைச் சார்ந்த சகோதரி தாயுடன் சேர்ந்து அண்ணியைக் கொடுமைப்படுத்தும் போக்கு நாவல்களில் மையப்பொருளாகச் சுட்டப் பெறவில்லை. கதைப் போக்கில் மட்டுமே சுட்டப் பெறுகின்றது. தாய் மற்றும் சகோதரர்கள் அண்ணிக்குத் துன்பம் செய்கிறபோது கணவனின் சகோதரன் தட்டிக்கேட்டு அண்ணியை அரவணைப்பது இவரது நாவலில் சித்தரிக்கப் பெறுகிறது.

பொதுவாகக் கூட்டுக்குடும்பத்தில் ஆணாதிக்கம் இருப்பது போல சிவசங்கரி படைத்துக்காட்டவில்லை. ஆண்களின் அடக்குமுறை இறுக்கமாக இல்லாமல் நெகிழ்வாக இருப்பதுபோலவே படைத்துக் காட்டியுள்ளார் சிவசங்கரி.

பெண் சமூகத்தாரிடம் நிலவும் சிக்கல்களை அறிந்து அவற்றைக் களைவதன் மூலம் சமூகத்தையே மாற்றியமைக்க முடியும் என்பது பெண்ணியத்தின் கருத்தாகும். இப்பெண்ணியத்தின் விழிப்புணர்ச்சியால் அண்மைக்காலச் சமூக அறிவியலின் அனைத்துத் தத்துவங்களும் சித்தாந்தங்களும் மறுபரிசீலனைக்குட்படுத்தப் பெற்றுள்ளன.

மேற்கத்திய நாடுகளில் தாராளப் பெண்ணியமும், முதலாளித்துவ நாடுகளில் வகுப்புவாத அடக்குமுறைக்கு எதிராகச் சமதர்மப் பெண்ணியமும், ஆண்களின் அடக்குமுறையிலிருந்து விடுபடுவது தீவிரவாதப் பெண்ணியமுமென்று வகைப்படுத்துவர்.

மேலை நாடுகளில் பதினேழாம் நூற்றாண்டு அளவிலேயே பெண்ணியச் சிந்தனைகள் தலைதூக்கின. இந்தியாவிற்குப் பெண்ணியச் சிந்தனை சற்றுத் தாமதமாகவே வந்தது. எனினும், இந்தியப் பெண்ணியம் ஆணிற்கு எதிரான இயக்கமன்று. தமிழ்ச் சமூகத்தில் துவக்க காலத்தில் பெண்களுக்கு இறுக்கமான அடக்கு முறை இல்லை. காலப்போக்கில் உருவான இறுக்கமான அடக்குமுறைகளை அண்மைக்காலப் பெண் எழுத்தாளர்கள் தம் படைப்பிலக்கியங்களில் பதிவு செய்து பெண் உரிமைகள் பற்றிச் சிந்தித்து வருகின்றனர்.

இயற்கை கொடுத்திருக்கிற சிலவற்றை முரண்படாமல் ஏற்றுக் கொண்டு, சில உரிமைகளுக்காகப் போராடுவது தான் பெண்ணிலைவாதம் (Conservative Feminism) என்று சிவசங்கரி கருத்துத் தெரிவிக்கிறார். ஆணாதிக்கச் சமுதாயத்தினர்கள் அடக்குமுறை மனோபாவம் மாற வேண்டும் என்று விரும்புகிறார்.

தனிநபர் தன்னைப்பற்றிச் சுயமாக அறிவதற்கு அறிவுத்திறன் வேண்டும் என்ற கோட்பாடு சிவசங்கரிக்கு உண்டு. அம்முறையில் சிவசங்கரி பெண்கல்வியை வற்புறுத்துகிறார்.

ஆண்களுக்குச் சொந்த விருப்பு, வெறுப்புகள் ஏற்றுக் கொள்ளப் பெறுவதைப் போலவே பெண்களின் சொந்த விருப்பு வெறுப்புக்களும் ஏற்றுக் கொள்ளப்பெற வேண்டும் என்று சிவசங்கரி கருதுகிறார். பெண்பார்த்தல், வரதட்சணை போன்ற நிலைகளில் ஆணின் மேலாதிக்கமே நிகழ்வது, மாற்றம் பெற வேண்டுமென்று விரும்புகிறார்.

திருமணம் சார்ந்த நிகழ்வுகளில் மாப்பிள்ளை வீட்டார் இறுக்கமான சம்பிரதாய மரபுகளிலிருந்து நெகிழ்ந்து பெண் வீட்டார்களிடம் தொடர்பு கொள்கிற இயல்பை நாவல்களின் வழிப்படைத்துக் காட்டுகிறார். எளிமையாகப் பெண்பார்ப்பதும், வரதட்சணைக்கு வற்புறுத்தாத பெற்றோர்களும் முன்மாதிரிப் பாத்திரங்களாகப் படைத்துக் காட்டப்பெறுகின்றனர். இஃது சிவசங்கரி விரும்பும் இலட்சியச் சூழலின் வெளிப்பாடு என மதிப்பிடலாம்.

